# கணக்குப் பதிவியல்

மேல்நிலை – இரண்டாம் ஆண்டு

**தொகுதி II**

தீண்டாமை ஒரு பாவச் செயல்

தீண்டாமை ஒரு பெருங்குற்றம்

தீண்டாமை மனிதத் தன்மையற்ற செயல்

தமிழ்நாட்டுப்
பாடநூல் கழகம்

*கல்லூரிச் சாலை, சென்னை 600 006.*

முதல் பதிப்பு – 2005

குழுத் தலைவர்

**முனைவர் (திருமதி) இரா. அமுதா**
வணிகவியல் இணைப் பேராசிரியர்
நீதிபதி பஷீர் அகமது சயீது மகளிர் கல்லூரி,
சென்னை - 600018

மேலாய்வாளர்கள்

**முனைவர் ஆர். மதியழகன்**
வணிகவியல் இணைப் பேராசிரியர்
அரசு கலைக்கல்லூரி (ஆண்கள்)
நந்தனம், சென்னை - 600 035.

**முனைவர் கே. கோவிந்தராஜன்**
வணிகவியல் இணைப் பேராசிரியர்
அண்ணாமலைப் பல்கலைக்கழகம்,
அண்ணாமலை நகர் - 608 002.

நூல் ஆசிரியர்கள்

**திரு. ச. செ. குமரன்**
ஒருங்கிணைப்பாளர், திட்டப் பிரிவு,
(நிதி மதிப்பீடு மற்றும் கணக்குகள்),
அனைவருக்கும் கல்வி இயக்கம்,
கல்லூரி சாலை, சென்னை-600 006.

**திரு. நா. மூர்த்தி**
சிறப்புநிலை முதுகலைப் பட்டதாரி ஆசிரியர்,
அரசினர் மேல்நிலைப்பள்ளி,
நாயகன்பேட்டை-631 601.
காஞ்சிபுரம் மாவட்டம்.

**திருமதி நா. ரமா**
முதுகலைப் பட்டதாரி ஆசிரியை,
லேடி ஆண்டாள் வெங்கடசுப்பாராவ்
மெட்ரிக் மேல்நிலைப்பள்ளி,
சேத்துப்பட்டு, சென்னை - 600 031.

**திரு. தி. கல்யாணசுந்தரம்**
முதுகலைப் பட்டதாரி ஆசிரியர்,
குண்டூர் சுப்பையாப்பிள்ளை தியாகராய நகர்
பெண்கள் மேல்நிலைப் பள்ளி,
தியாகராய நகர், சென்னை - 600 017.

**விலை ரூ.**

பாடங்கள் தயாரிப்பு : தமிழ்நாடு அரசுக்காக
பள்ளிக் கல்வி இயக்ககம், தமிழ்நாடு.

இந்நூல் 60 ஜி.எஸ்.எம். தாளில் அச்சிடப்பட்டுள்ளது.

# முன்னுரை

கணக்குப் பதிவியல் நூல் தமிழ்நாடு அரசின் பள்ளிக் கல்வி இயக்ககத்தால் வடிவமைக்கப்பட்ட புதிய பாடத் திட்டத்திற்கு ஏற்ப எழுதப்பட்டுள்ளது.

பாடத் திட்டத்தைப் புதுப்பித்தல் என்பது ஒரு தொடர்ச்சியான செயல்பாடு ஆகும். காலத்திற்கு ஏற்றவாறு சமுதாயத்தின் தேவையில் ஏற்பட்ட மாற்றத்திற்கு ஒப்ப கணக்கியல் பாடத்தில் பல்வேறு மாற்றங்கள் தேவைப்படுகின்றன. தற்போதைய முயற்சி மேல்நிலை அளவில் கணக்குப் பதிவியல் பயன்படுத்துவோரின் கருத்துகளுக்கு ஏற்ப மாற்றங்களையும் புதினங்களையும் புகுத்திட மேற்கொள்ளப்பட்டுள்ளது.

மேல்நிலை முதலாண்டு பாடநூலில் கணக்குப் பதிவியலின் அனைத்து அடிப்படைக் கருத்துகளும் விவாதிக்கப்பட்டுள்ளன. இங்கு அடுத்த நிலையில், பல்வேறு வணிக நிறுவனங்களில் ஏடுகள் பராமரிக்க இவ்வடிப்படைக் கருத்துகள் எவ்வாறு பயன்படுத்தப்படுகின்றன என்பதை அறிதல் வேண்டும். குறிப்பாக கூட்டாண்மை நிறுவனங்களிலும், நிறுமங்களிலும் ஏடுகள் பராமரிப்பு பற்றி அறிதல் மிகவும் பயனுள்ளதாகும்.

வணிக உலகிலும், கணக்கியல் துறையிலும் கூட்டாண்மை நிறுவனங்கள் மற்றும் நிறுமங்கள் பெற்றுள்ள முக்கியத்துவத்தை நாம் நன்கறிவோம். குறிப்பாக பொருளாதார மற்றும் தொழில் வளர்ச்சிக்கு நிறுமங்களின் பணி இன்றியமையாததாகும். எனவே இரண்டாமாண்டு பாடத்திட்டத்திற்கு ஏற்ப கூட்டாண்மைக் கணக்குகளும், நிறுமக் கணக்குகளும், நான்கு அத்தியாயங்களாக இந்த இரண்டாம் தொகுதியில் விவரிக்கப்பட்டுள்ளன.

ஒவ்வொரு அத்தியாயமும் எளிமையாகப் புரிந்துகொள்ளும் வகையில் எடுத்துக்காட்டுகள் மூலம் தொடக்கத்தில் விளக்கப்பட்டு, வினாக்கள் மற்றும் பயிற்சிக் கணக்குகளுடன் முடிக்கப்பட்டுள்ளன.

மாணவர்கள் சுய ஆய்வுக்காக கொடுக்கப்பட்டுள்ள வினாக்கள் மற்றும் கணக்குகளோடு நிறுத்திக்கொள்ளாமல் மேற்கோள் நூல்களையும் படிக்க அறிவுறுத்தப்படுகின்றனர். காரணம், தேர்வுக்கான வினாக்கள் இப்பாடநூலிலிருந்து மட்டுமே கேட்கப்பட வேண்டும் என்ற கட்டுப்பாடு இல்லை.

குழுத் தலைவர்

# பொருளடக்கம்

## தொகுதி II





## பார்வைக் குறிப்பு நூல்கள்


1. *கணக்குப் பதிவியல் — அ.குமார ராசு, தமிழ் நாட்டுப் பாடநூல் கழகம், சென்னை.*
2. *உயர் கணக்கியல் — அ.குமார ராசு, தமிழ் நாட்டுப் பாடநூல் கழகம், சென்னை.*
3. *அடிப்படைக் கணக்கியல் பாடத் தொகுப்பு — இளங்கலை வணிகவியல், தொலைதூரக் கல்வி இயக்ககம், அண்ணாமலைப் பல்கலைக் கழகம்.*
4. *நிதிசார் கணக்கியல் பாடத் தொகுப்பு — இளங்கலை வணிகவியல், அஞ்சல்வழி கல்வி நிறுவனம், சென்னைப் பல்கலைக் கழகம்.*
5. *தமிழ்நாட்டுப் பாடநூல் கழகம் — கணக்குப் பதிவியல் — மேல்நிலை இரண்டாம் ஆண்டு.*
6. R.L. Gupta – *Principles and Practice of Accountancy*
7. T.S.Grewal – *Introduction to Accountancy*
8. Patil & Korlahalli – *Principles and Practices of Accountancy*
9. Vinayagam, P.L.Mani, K.L.Nagarajan – *Principles of Accountancy.*
10. P.C.Tulsian, S.D.Tulsian – *ISC Accountancy for Class XII.*
11. M.Jambunthan, S.Arokiasamy, V.M.Gopala Krishna, P.Natrajan – *Book-keeping and Principles of Commerce*.
12. L.S.Porwal, R.G.Saxena, B.Banerjee, Man Mohan, N.K.Agarwal – *Accounting A Textbook for Class XI Part I, NCERT*.
13. Jain & Narang – *Financial Accounting*.
14. R.L.Gupta, Radha Swamy – *Financial Accounting*.
15. Basu Das – *Practice in Accountancy*.
16. S.Kr.Paul – *Practical Accounts Vol.II*.
17. M.C.Shukla – *Advanced Accountancy*.

அத்தியாயம் – 6

# கூட்டாண்மைக் கணக்குகள் - அடிப்படைக் கருத்துகள்

## (PARTNERSHIP ACCOUNTS - BASIC CONCEPTS)

---

### கற்றல் நோக்கங்கள்

இந்த அத்தியாயத்தைக் கற்றபின், நீங்கள்

- ➢ கூட்டாண்மையின் பொருள் மற்றும் சிறப்பியல்பு– –களைப் புரிந்து கொள்ளலாம்.
- ➢ நிலை முதல் முறை மற்றும் மாறுபடும் முதல் முறைகளில் கூட்டாளிகளின் முதல் கணக்குகள் தயாரிக்கத் தெரிந்து கொள்ளலாம்.
- ➢ கூட்டாளிகளிடையே இலாபம் பகிர்ந்து கொள்வதைப் புரிந்து கொள்ளலாம்.
- ➢ இலாப நட்டப் பகிர்வுக் கணக்கு தயாரிக்கத் தெரிந்து கொள்ளலாம்.
- ➢ நற்பெயரின் பொருள், தன்மை மற்றும் மதிப்பீடு செய்யும் முறைகளைத் தெரிந்து கொள்ளலாம்.

---

ஒரு தொழிலை தனியாள் நிறுவனமாகவோ, கூட்டாண்மை நிறுவனமாகவோ அல்லது நிறுமமாகவோ அமைக்கலாம். தனியாள் நிறுவனத்தில் குறைந்த முதல், குறைந்த மேலாண்மைத்

திறமை மற்றும் குறைந்த இடர்ப்பாடு பகிர்ந்துகொள்ளும் தகுதி ஆகிய குறைபாடுகள் உள்ளன. ஆனால், தொழில் நிறுவனம் விரிவடையும் பொழுது அதிக முதல் தேவைப்படுகிறது; இடர்ப்பாடுகளும் அதிகரிக்கிறது. எனவே, இரண்டு அல்லது அதற்கு மேற்பட்ட நபர்கள் ஒன்று சேர்ந்து தொழிலை நடத்துகிறார்கள். அவர்கள் தொழிலின் முதல், மேலாண்மை, இடர்ப்பாடு மற்றும் இலாபம் அல்லது நட்டத்தில் பங்கு வகிக்க ஒப்புக் கொள்கின்றனர். அந்நபர்களிடையே ஒப்பந்தத்தின் மூலம் ஏற்படும் ஒருவருக்கொருவரின் உறவு கூட்டாண்மை எனப்படுகிறது. கூட்டாண்மையில் ஈடுபடும் நபர்களைத் தனித்தனியாக "கூட்டாளிகள்" (Partners) எனவும், ஒட்டுமொத்தமாக "நிறுவனம்" (Firm) எனவும் அழைக்கிறோம்.

## 6.1 வரைவிலக்கணம்:

1932 ஆம் ஆண்டின் இந்தியக் கூட்டாண்மைச் சட்டம் (Indian Partnership Act 1932) பிரிவு 4, கூட்டாண்மை என்பது "அனைவருமோ, அனைவரின் சார்பில் அவர்களில் எவரோ, ஒரு தொழிலை நடத்தவும், அதில் ஏற்படும் இலாபத்தைப் பகிர்ந்து கொள்ளவும் உடன்பட்டு அந்த நபர்களிடையே ஏற்படும் உறவு ஆகும்" என வரைவிலக்கணம் தருகிறது.

### 6.1.1 சிறப்பியல்புகள்:

மேலே கொடுக்கப்பட்டுள்ள வரைவிலக்கணத்தின்படி, கீழ்க்கண்ட சிறப்பியல்புகளைக் கூட்டாண்மை நிறுவனம் கொண்டுள்ளது.

1. **இரண்டு அல்லது அதற்கு மேற்பட்ட நபர்கள் கொண்ட குழுமம்:** கூட்டாண்மையை உருவாக்க குறைந்தபட்சம் இரண்டு நபர்கள் இருக்க வேண்டும். அதிக பட்சமாக வங்கித்தொழிலாக இருந்தால் 10 நபர்களும், மற்ற தொழிலாக இருந்தால் 20 நபர்களும் இருத்தல் வேண்டும்.

2. **கூட்டாளிகளிடையே உடன்பாடு:** கூட்டாளிகளிடையே ஏற்படும் உடன்பாட்டின் காரணமாகவே அவர்களிடையே உறவு ஏற்படுத்தப்படுகிறது.



3. **இலாபப் பங்கேற்பு:** கூட்டாண்மை உடன்பாடு கூட்டாளிகள் தொழிலின் இலாப நட்டத்தைப் பகிர்ந்து கொள்வதை உறுதி செய்கிறது.

4. **சட்டப்படியான தொழில்:** கூட்டாண்மை உடன்பாடு சட்டப்படியான தொழில் புரிந்து இலாபம் ஈட்டுவதாக இருத்தல் வேண்டும்.

5. **அனைவருமோ அல்லது அனைவரின் சார்பில் அவர்களில் எவரோ தொழிலை மேலாண்மை செய்தல்:** கூட்டாண்மை நிறுவனத்தை அனைவரும் நடத்த வேண்டும். ஆனால், நடைமுறையில் ஒருவர் மட்டுமோ அல்லது ஒருசில கூட்டாளிகள் மட்டுமோ தொழிலை மேலாண்மை செய்யலாம். கூட்டாண்மையின் மிக முக்கியமான சிறப்பியல்பு பரஸ்பர மற்றும் உட்கிடை முகமை (Implied Agency) ஆகும்.

### 6.1.2 கூட்டாண்மை உடன்பாடு இல்லாவிடில் செயல்படுத்த வேண்டிய கணக்கியல் விதிகள்:

பொதுவாக, கூட்டாண்மை ஒப்பந்தத்தில் கூட்டாளிகளுக் கிடையேயான பரஸ்பர உறவுகள் சம்பந்தப்பட்ட அனைத்து விவரங்களும் அடங்கியிருக்கும். ஆனால், கூட்டாண்மை ஒப்பந்தம் இல்லாத பொழுது 1932ஆம் ஆண்டின் இந்தியக் கூட்டாண்மைச் சட்டத்தில் கீழ்க்காணும் கணக்கியல் விதிமுறைகள் வழங்கப்பட்டுள்ளன.

1. **முதல் மீது வட்டி:** கூட்டாளிகளின் முதல் மீது வட்டி அனுமதிப்பதில்லை. கூட்டாண்மை உடன்பாட்டில் முதல் மீது வட்டி அனுமதித்திருந்தால் இலாபமாக இருக்கும் பொழுது மட்டுமே வழங்கலாம். நட்டம் ஏற்படும் பொழுது, முதல் மீது வட்டி அனுமதிக்கக் கூடாது.

2. **எடுப்பு மீது வட்டி:** கூட்டாளிகளின் எடுப்பு மீது வட்டி விதிக்கக் கூடாது.

3. **கூட்டாளிகளின் ஊதியம் மற்றும் கழிவு:** கூட்டாண்மை ஒப்பந்தத்தில் குறிப்பிடாத பொழுது நிறுவனம் எந்தவொரு கூட்டாளிக்கும் ஊதியமோ அல்லது கழிவோ வழங்கக்கூடாது.

4. **கடன் மீது வட்டி:** ஏதேனும் ஒரு கூட்டாளி, தன் முதல் மட்டும் இல்லாமல், மேலும் நிறுவனத்துக்கு கடன் வழங்கியிருந்தால், அக்கடனுக்கு குறைந்த பட்சம் ஆறு சதவீதம் வட்டி வழங்கப்படவேண்டும்.

5. **இலாபப் பங்கு விகிதம்:** கூட்டாளிகள் அவர்கள் வைத்த முதல் தொகையை கணக்கில் கொள்ளாமல் இலாப நட்டத்தை சமமாகப் பங்கிட்டுக் கொள்ள வேண்டும்.

## 6.2 கூட்டாளிகளின் முதல் கணக்குகள்:

கூட்டாண்மை நிறுவனத்தில் கூட்டாளிகள் சம்பந்தப்பட்ட நடவடிக்கைகககள் யாவும் அந்தந்த கூட்டாளிகளின் முதல் கணக்குகளில் பதிவு செய்யப்படும். வழக்கமாக, ஒவ்வொரு கூட்டாளிக்கும் தனியான முதல் கணக்கு தயாரிக்க வேண்டும். கூட்டாளிகளின் முதல் கணக்குகள் இரண்டு முறைகளில் பராமரிக்கப்படுகின்றன.

- மாறுபடும் முதல் முறை
- நிலை முதல் முறை

### 6.2.1 மாறுபடும் முதல் முறை (Fluctuating Capital Method):

மாறுபடும் முதல் முறையில், ஒரே ஒரு கணக்கு அதாவது கூட்டாளிகளின் முதல் கணக்குகள் மட்டுமே பராமரிக்கப்படுகின்றன. அவற்றில் எடுப்புகள், முதல் மீதான வட்டி, எடுப்பு மீதான வட்டி, ஊதியம் மற்றும் இலாப அல்லது நட்டத்தின் பங்கு ஆகியவை சம்பந்தப்பட்ட அனைத்து சரிக்கட்டுகளும் முதல் கணக்கில் பதிவு செய்யப்படுகின்றன. எனவே, முதல் கணக்குகளின் இருப்புகள் ஆண்டுதோறும் மாற்றம் பெறுகின்றன. எக்குறிப்பும் இல்லாதபொழுது முதல் கணக்குகள் மாறுபடும் முதல் முறையிலே தான் தயாரிக்கவேண்டும்.



**படிவம் : (மாறுபடும் முதல்முறை)**

**முதல் கணக்குகள்**

ப வ

| விவரம் | அ ரூ. | ஆ ரூ. | இ ரூ. | விவரம் | அ ரூ. | ஆ ரூ. | இ ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| எடுப்பு | | | | இருப்பு கீ/கொ | | | |
| எடுப்பு மீது வட்டி | | | | முதல் மீது வட்டி | | | |
| இருப்பு கீ/இ | | | | கழிவு | | | |
| | | | | ஊதியம் | | | |
| | | | | இலாபப் பங்கு | | | |
| | | | | | | | |
| | | | | இருப்பு கீ/கொ | | | |

### 6.2.2 நிலை முதல் முறை (Fixed Capital Methed):

இம்முறையில், ஒவ்வொரு கூட்டாளிக்கும் இரண்டு கணக்குகள் பராமரிக்கப்படுகின்றன. அதாவது 1) முதல் கணக்கு (Capital Account) 2) நடப்புக் கணக்கு (Current Account). முதல் கணக்குகள் எப்பொழுதும் ஒரே இருப்பினைக் காட்டும். கூடுதல் முதல் இடும்பொழுதோ அல்லது முதல் குறைப்பு செய்யும்பொழுதோ மட்டும் மாறலாம். மற்றபடி, ஆண்டுக்காண்டு முதல் அதே தொகையாகவே இருக்கும்.

எடுப்புகள், முதல் மீதான வட்டி, எடுப்பு மீதான வட்டி, ஊதியம், கழிவு, இலாபப் பங்கு ஆகிய சரிக்கட்டல்கள் யாவும் நடப்புக் கணக்குகளில் பதிவு செய்யப்படுகின்றன. எனவே நடப்புக் கணக்குகளின் இருப்புகள் ஆண்டுதோறும் மாறுதல் அடைகின்றன.

படிவம் : (நிலை முதல் முறை)

### முதல் கணக்குகள்

ப வ

| விவரம் | அ ரூ. | ஆ ரூ. | இ ரூ. | விவரம் | அ ரூ. | ஆ ரூ. | இ ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| இருப்பு கீ/இ | | | | இருப்பு கீ/கொ | | | |
| | | | | | | | |
| | | | | இருப்பு கீ/கொ | | | |

### நடப்புக் கணக்குகள்

ப வ

| விவரம் | அ ரூ. | ஆ ரூ. | இ ரூ. | விவரம் | அ ரூ. | ஆ ரூ. | இ ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| எடுப்புகள் | | | | இருப்பு கீ/கொ* | | | |
| எடுப்புமீது வட்டி | | | | முதல் மீது வட்டி | | | |
| இருப்பு கீ/இ* | | | | கழிவு | | | |
| | | | | ஊதியம் | | | |
| | | | | இலாபப் பங்கு | | | |
| | | | | | | | |
| | | | | இருப்பு கீ/கொ* | | | |

* இருப்பு எதிர்ப்பக்கத்திலும் அமையலாம்.

### 6.2.3 நிலை முதல் முறைக்கும் மாறுபடும் முதல்முறைக்கும் உள்ள வேறுபாடுகள்:

முதல் கணக்குகள் பதிவு செய்யும் இரண்டு முறைகளுக்கும் உள்ள முக்கிய வேறுபாடுகள் பின் வருமாறு:



| அடிப்படை | நிலை முதல் முறை | மாறுபடும் முதல் முறை |
|---|---|---|
| 1. முதல் தொகையில் மாற்றம் | முதல் தொகை சில சூழ்நிலைகள் தவிர பொதுவாக மாறாமல் அதே தொகையாக இருக்கும். | முதல் தொகை ஆண்டுக் காண்டு மாறுபடுகிறது. |
| 2. கணக்கு களின் எண்ணிக்கை | ஒவ்வொரு கூட்டாளி பெயரிலும் இரண்டு கணக்குகள், அதாவது முதல் கணக்கு மற்றும் நடப்புக் கணக்கு தொடங்கப்படும். | ஒவ்வொரு கூட்டாளி பெயரிலும் ஒரே ஒரு கணக்கு அதாவது முதல் கணக்கு மட்டும் தொடங்கப்படும். |
| 3. இருப்பு | முதல் கணக்குகள் எப்பொழுதும் வரவு இருப்பையே காட்டும். நடப்புக் கணக்குகள் வரவு இருப்பு மற்றும் சில நேரங்களில் பற்று இருப்பையும் காட்டும். | முதல் கணக்குகள் எப்பொழுதும் வரவு இருப்பையே காட்டும். |
| 4. சரிக் கட்டுதல்கள் | கூட்டாளிகள் சம்பந்தப்பட்ட அனைத்து சரிக்கட்டுதல்களும் நடப்புக் கணக்குகளில் பதிவு செய்யப்படும். | கூட்டாளிகள் சம்பந்தப் பட்ட அனைத்துச் சரிக்கட்டு தல்களும் நேரடியாக முதல் கணக்குகளில் பதிவு செய்யப்படும். |

### 6.2.4 முதல் கணக்குகள் தயாரித்தல்:

**எடுத்துக்காட்டு : 1**

கீழ்க்காணும் விவரங்களைக் கொண்டு அன்பு, பாலு எனும் கூட்டாளிகளின் முதல் கணக்குகளை

அ) நிலை முதல் முறை மற்றும்

ஆ) மாறுபடும் முதல் முறைகளில் தயார் செய்க.

| | அன்பு ரூ. | பாலு ரூ. |
|---|---|---|
| 1.4.2004 அன்று முதல் | 90,000 | 70,000 |
| 2004—2005 ஆம் ஆண்டில் எடுப்பு | 12,000 | 9,000 |
| எடுப்பு மீது வட்டி | 360 | 270 |
| முதல் மீது வட்டி | 5,400 | 4,200 |
| கூட்டாளியின் ஊதியம் | 12,000 | — |
| கழிவு | — | 6,000 |
| 2004—2005ஆம் ஆண்டின் இலாபப் பங்கு | 6,000 | 4,000 |

விடை:

அ) நிலை முதல் முறையில்

முதல் கணக்குகள்

ப வ

| நாள் | விவரம் | அன்பு ரூ. | பாலு ரூ.. | நாள் | விவரம் | அன்பு ரூ. | பாலு ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| 2005 மார்ச் 31 | இருப்பு கீ/இ | 90,000 | 70,000 | 2004 ஏப்ரல் 1 | இருப்பு கீ/கொ | 90,000 | 70,000 |
| | | 90,000 | 70,000 | | | 90,000 | 70,000 |
| | | | | 2005 ஏப்ரல் 1 | இருப்பு கீ/கொ | 90,000 | 70,000 |

நடப்புக் கணக்குகள்

ப வ

| நாள் | விவரம் | அன்பு ரூ. | பாலு ரூ.. | நாள் | விவரம் | அன்பு ரூ. | பாலு ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| 2005 மார்ச் 31 | எடுப்பு | 12,000 | 9,000 | 2005 மார்ச் 31 | முதல்மீது வட்டி | 5,400 | 4,200 |
| ,, | எடுப்பு மீது வட்டி | 360 | 270 | ,, | கூட்டாளி ஊதியம் | 12,000 | |
| ,, | இருப்பு கீ/இ | 11,040 | 4,930 | ,, | கழிவு | | 6,000 |
| | | | | ,, | இலாபநட்டக் க/கு | 6,000 | 4,000 |
| | | 23,400 | 14,200 | | | 23,400 | 14,200 |
| | | | | 2005 ஏப்ரல் 1 | இருப்பு கீ/கொ | 11,040 | 4,930 |



ஆ) மாறுபடும் முதல் முறையில்

முதல் கணக்குகள்

ப வ

| நாள் | விவரம் | அன்பு ரூ. | பாலு ரூ.. | நாள் | விவரம் | அன்பு ரூ. | பாலு ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| 2005 மார்ச் 31 | எடுப்பு | 12,000 | 9,000 | 2004 ஏப்ரல் 1 | இருப்பு கீ/கொ | 90,000 | 70,000 |
| ,, | எடுப்பு மீது வட்டி | 360 | 270 | 2005 | | | |
| ,, | இருப்பு கீ/இ | 1,01,040 | 74,930 | மார்ச் 31 | முதல்மீது வட்டி | 5,400 | 4,200 |
| | | | | ,, | ஊதியம் | 12,000 | — |
| | | | | ,, | கழிவு | — | 6,000 |
| | | | | ,, | இலாபநட்டக் க/கு | 6,000 | 4,000 |
| | | 1,13,400 | 84,200 | | | 1,13,400 | 84,200 |
| | | | | 2005 ஏப்ரல் 1 | இருப்பு கீ/கொ | 1,01,040 | 74,930 |

## எடுத்துக்காட்டு : 2

*பின்வரும் விவரங்களைக் கொண்டு கலா, மாலா எனும் கூட்டாளிகளின் முதல் கணக்குகளையும், நடப்புக் கணக்குகளையும் தயார் செய்து, அவை இருப்புநிலைக் குறிப்பில் எவ்வாறு தோன்றும் என்பதைக் காட்டிடுக.*

| | கலா ரூ. | மாலா ரூ. |
|---|---|---|
| *1.1.2004 அன்றைய முதல்* | *1,50,000* | *1,00,000* |
| *1.1.2004 அன்று நடப்புக்கணக்கு (வரவு)* | *20,000* | *15,000* |
| *2004ஆம் ஆண்டில் எடுப்புகள்* | *30,000* | *40,000* |
| *எடுப்புகள் மீது வட்டி* | *900* | *1,000* |
| *2004ஆம் ஆண்டில் இலாபப்பங்கு* | *10,000* | *8,000* |
| *முதல் மீதான வட்டி* | *6%* | *6%* |

**விடை:**

ப **முதல் கணக்குகள்** வ

| நாள் | விவரம் | கலா ரூ. | மாலா ரூ.. | நாள் | விவரம் | கலா ரூ. | மாலா ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| 2005 டிச. 31 | இருப்பு கீ/இ | 1,50,000 | 1,00,000 | 2004 ஜன. 1 | இருப்பு கீ/கொ | 1,50,000 | 1,00,000 |
| | | 1,50,000 | 1,00,000 | | | 1,50,000 | 1,00,000 |
| | | | | 2005 ஜன. 1 | இருப்பு கீ/கொ | 1,50,000 | 1,00,000 |

ப **நடப்புக் கணக்குகள்** வ

| நாள் | விவரம் | கலா ரூ. | மாலா ரூ.. | நாள் | விவரம் | கலா ரூ. | மாலா ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| 2004 டிச. 31 | எடுப்புகள் | 30,000 | 40,000 | 2004 ஜன. 31 | இருப்பு கீ/கொ | 20,000 | 15,000 |
| ,, | எடுப்புகள் மீது வட்டி | 900 | 1,000 | டிச. 31 | முதல் மீது வட்டி | 9,000 | 6,000 |
| ,, | இருப்பு கீ/இ | 8,100 | — | ,, | இலாபநட்டக் க/கு | 10,000 | 8,000 |
| | | | | ,, | இருப்பு கீ/இ | — | 12,000 |
| | | 39,000 | 41,000 | | | 39,000 | 41,000 |
| 2005 ஜன. 1 | இருப்பு கீ/கொ | — | 12,000 | 2005 ஜன. 1 | இருப்பு கீ/கொ | 8,100 | — |

**31.12.2004ஆம் நாளைய**

**கலா மற்றும் மாலா ஆகியோரின் இருப்பு நிலைக் குறிப்பு**

| பொறுப்புகள் | | ரூ. | சொத்துகள் | ரூ. |
|---|---|---|---|---|
| *முதல் கணக்குகள்:* | | | *நடப்புக் கணக்கு:* | |
| *கலா* | *1,50,000* | | *மாலா* | *12,000* |
| *மாலா* | *1,00,000* | *2,50,000* | | |
| *நடப்புக் கணக்கு:* | | | | |
| *கலா* | | *8,100* | | |



### 6.3 இலாபப் பகிர்வு (Distribution of Profits):

*தனியாள் வாணிகத்தில் இலாப நட்டக் கணக்கில் தோன்றும் நிகர இலாபம் முழுமையாக ஒருவரையே சேரவேண்டியுள்ளதால் அவருடைய முதல் கணக்கிற்கு மாற்றம் பெறுகின்றது. ஆனால், கூட்டாண்மை நிறுவனத்தின் இலாப நட்டக் கணக்கில் தோன்றும் நிகர இலாபத்தில் முதல் மீதான வட்டி, எடுப்பு மீதான வட்டி, ஊதியம் மற்றும் கழிவு போன்ற கூட்டாளிகளுக்குரிய சில சரிக்கட்டுதல்கள் செய்யப்பட வேண்டியுள்ளன. அதற்காக, இலாப நட்டப் பகிர்வு கணக்கு ஒன்று தனியாக தயாரிக்க வேண்டியுள்ளது. இக்கணக்கு இலாப நட்டக்கணக்கின் விரிவாக்கமே ஆகும். இக்கணக்கு கூட்டாளிகளிடையே இலாபம் அல்லது நட்டம் பகிரப்பட்ட விதத்தைக் காண்பிக்கும்.*

*இலாப நட்டப் பகிர்வு கணக்கில் நிகர இலாபம் மற்றும் எடுப்புகள் மீதான வட்டி ஆகியவற்றை வரவு வைக்க வேண்டும். முதல் மீதான வட்டி, கூட்டாளிகளின் ஊதியம், கழிவு ஆகியவற்றை பற்று வைக்க வேண்டும். நிகர நட்ட மிருந்தால் பற்று வைக்கவேண்டும். அனைத்துச் சரிகட்டுதல்களும் செய்த பிறகு, இக்கணக்கில் தோன்றும் இருப்புத்தொகை அதாவது இலாபம் அல்லது நட்டம் கூட்டாளிகளுக்கு அவர்கள் ஒப்புக்கொண்ட இலாப விகிதத்தில் பகிர்ந்து அளிக்கப்படும்.*

*இலாப நட்டப் பகிர்வுக் கணக்கில் செய்யப்படும் சரிக்கட்டுதல்கள் கீழே விவரிக்கப்படுகின்றன:*

### 6.3.1 முதல் மீது வட்டி (Interest on Capital):

*கூட்டாண்மை ஒப்பாவணத்தில் கூட்டாளிகளின் முதல் மீது வட்டி வழங்கலாம் என அனுமதித்திருந்தால் மட்டுமே அதில் குறிப்பிடப்பட்டுள்ள விகிதத்தில் முதல் மீது வட்டி அனுமதிக்கலாம். முதல் மீது வட்டி பொதுவாக ஆண்டுத்தொடக்கத்தில் உள்ள முதல் மீதும் ஆண்டிடையே வைத்த முதல் மீதும் கணக்கிடப்படும். ஆண்டிடையில் வைத்த முதலின் நாள் குறிப்பிடப்படாமல் இருந்தால் அதற்கான வட்டி ஆறு மாதத்திற்கு என கணக்கிடப்படவேண்டும்.*

**குறிப்பேட்டுப் பதிவுகள்:**

**அ) முதல் மீதான வட்டியைச் சரிக்கட்ட**

| | | | |
|---|---|---|---|
| *முதல் மீது வட்டி க/கு* | *ப* | ... | |
| *கூட்டாளிகள் முதல் க/கு* | | | ... |
| *(மாறுபடும் முதல் முறை)* | | | |
| *அல்லது* | | | |
| *கூட்டாளிகளின் நடப்புக் க/கு* | | | ... |
| *(நிலை முதல் முறை)* | | | |

**ஆ) முதல் மீதான வட்டிக்கணக்கை முடிவுக்கு கொண்டுவர**

| | | | |
|---|---|---|---|
| *இலாப நட்டப் பகிர்வு க/கு* | *ப* | ... | ... |
| *முதல் மீதான வட்டி க/கு* | | | ... |

**எடுத்துக்காட்டு : 3**

*ரவி, ரகு என்ற இரு கூட்டாளிகள் முறையே ரூ.90,000, ரூ.70,000 முதல் வைத்து ஏப்ரல் 1, 2003 அன்று தொழில் தொடங்கினர். ரவி மேலும் ரூ.10,000 கூடுதல் முதல் ஜுலை 1, 2003 அன்று கொண்டு வந்தார். முதல் மீது வட்டி 10% அனுமதிக்கப்படுகிறது. 2004, மார்ச் 31ஆம் நாளோடு முடிவடையும் ஆண்டுக்குரிய ரவி மற்றும் ரகு ஆகியோரின் முதல் மீதான வட்டியைக் கணக்கிடுக*

**விடை:**

*அ) ரவியின் முதல் மீது வட்டி:*

$$= \left[90,000 \times \frac{10}{100}\right] + \left[10,000 \times \frac{10}{100} \times \frac{9}{12}\right]$$

$$= 9,000 + 750$$

= ரூ. 9,750



*குறிப்பு:*

| | | |
|---|---|---|
| *ரூ.90,000 மீது ஒரு ஆண்டுக்கான வட்டி* | = | *ரூ. 9,000* |
| *ரூ.10,000 மீது ஒன்பது மாதங்களுக்கான வட்டி* | = | *ரூ. 750* |
| *ரவிக்குத் தரவேண்டிய மொத்த வட்டி* | = | *ரூ. 9,750* |

*ஆ) ரகுவின் முதல் மீதான வட்டி:*

$$= 70,000 \times \frac{10}{100}$$

= ரூ. 7,000

*குறிப்பு:*

| | | |
|---|---|---|
| *ரூ.70,000 மீது ஒரு ஆண்டுக்கான வட்டி* | = | *ரூ. 7,000* |
| *ரகுவிற்குத் தரவேண்டிய வட்டி* | = | *ரூ. 7,000* |

### 6.3.2 எடுப்பு மீதான வட்டி (Interest on drawings):

*தன் சொந்தப் பயனுக்காக ரொக்கமாகவோ, பொருளாகவோ தொழிலிருந்து எடுத்துக் கொண்டால் அது எடுப்பு (Drawings) எனப்படும். ஒவ்வொரு கூட்டாளியின் பெயரிலும் எடுப்புக் கணக்கு ஆரம்பிக்கப்பட்டு அவர்களின் எடுப்புகள் அக்கணக்குகளில் பற்று வைக்கவேண்டும். ஆண்டு இறுதியில் எடுப்புக் கணக்குகளை முடிவு செய்து உரிய கூட்டாளிகளின் முதல் கணக்குகள் அல்லது நடப்புக் கணக்குகளுக்கு மாற்றம் செய்ய வேண்டும்.*

*கூட்டாண்மை ஒப்பாவணத்தில் எடுப்புகள் மீது வட்டி அனுமதிக்கப்பட்டிருந்தால் மட்டுமே குறிப்பிடப்பட்டுள்ள விகிதத்தில் வட்டி வழங்க வேண்டும்.*

**குறிப்பேட்டுப் பதிவுகள்:**

**அ) எடுப்பு மீதான வட்டி வழங்க**

கூட்டாளிகளின் முதல் க/கு ப ...
(மாறுபடும் முதல் முறை)

அல்லது

கூட்டாளிகளின் நடப்புக் க/கு ப ...
(நிலை முதல் முறை)

எடுப்பு மீது வட்டி க/கு ..

**ஆ) எடுப்பு மீதான வட்டிக் கணக்கை முடிவுக்கு கொண்டுவர**

எடுப்பு மீது வட்டி க/கு ப ...

இலாப நட்டப் பகிர்வு க/கு ...

**எடுப்பு மீதான வட்டி கணக்கிடும் முறை :**

எடுப்பு மீதான வட்டியை கீழ்க்காணும் இரண்டு வழிமுறைகளில் கணக்கிடலாம்.

1. பெருக்குத்தொகை முறை (Product Method)
2. சராசரி காலமுறை (Average Period Method)

**1. பெருக்குத்தொகை முறை :**

இம்முறையில் ஒவ்வொரு எடுப்புத் தொகையையும் அது எத்தனை மாதங்களுக்கு வட்டிக்கு உரியதோ, அதனால் பெருக்கி, பெருக்குத்தொகை கணக்கிடவேண்டும். பெருக்குத் தொகைகள் அனைத்தும் கூட்டிப்பெற்ற மொத்தப் பெருக்குத் தொகைக்கு குறிப்பிட்ட வட்டி விகிதத்தில் ஒரு மாதத்திற்குரிய வட்டியைக் கணக்கிட்டால் அதுவே எடுப்புகள் மீதான வட்டி ஆகும்.

$$\text{எடுப்பு மீதான வட்டி} = \text{பெருக்குத்தொகை} \times \frac{\text{வட்டி விகிதம்}}{100} \times \frac{1}{12}$$



காலமுறையின்றி வெவ்வேறு தொகைகள் எடுப்பு எடுக்கும்பொழுது பெருக்குத்தொகை முறையில் வட்டி கணக்கிடுவது எளிது.

**2. சராசரி காலமுறை:**

இம்முறையில், தொகைகள் எடுப்பு எடுத்த காலங்களின் சராசரியைக் கணக்கிட்டு வட்டி கணக்கிடப்படுகிறது.

எடுப்பு மீதான வட்டி =

$$\text{மொத்த எடுப்புகள்} \times \frac{\text{வட்டி விகிதம்}}{100} \times \frac{\text{சராசரி காலம்}}{12}$$

**சராசரி காலம் கணக்கிடுதல் :**

முதலாவது எடுப்பு மீதான வட்டிக்கு உரிய காலத்திற்கும் இறுதி எடுப்பு மீதான வட்டிக்கு உரிய காலத்திற்கும் சராசரியைக் கண்டுபிடிக்க வேண்டும்.

$$\text{சராசரி காலம்} = \frac{\text{முதலாவது எடுப்பு பயன்படுத்தும் காலம்} + \text{இறுதி எடுப்பு பயன்படுத்தும் காலம்}}{2}$$

**அ) ஒவ்வொரு மாதத் தொடக்கத்திலும் ஒரு குறிப்பிட்ட தொகை எடுக்கும் பொழுது :**

முதலாவது எடுப்பு மீதான வட்டிக்கு உரிய காலத்திற்கும் இறுதி எடுப்பு மீதான வட்டிக்கு உரிய காலத்திற்கும் சராசரியைக் கண்டுபிடிக்க வேண்டும்.

முதலாவது எடுப்பின் காலம் = 12 மாதங்கள்

இறுதி எடுப்பின் காலம் = 1 மாதம்

சராசரி காலம் $= \dfrac{12 + 1}{2}$

$= 6\frac{1}{2}$ மாதங்கள்

$= \dfrac{6\frac{1}{2}}{12}$ அல்லது $\dfrac{13}{24}$

**ஆ) ஒவ்வொரு மாத இடையிலும் ஒரு குறிப்பிட்ட தொகை எடுக்கும் பொழுது :**

முதலாவது எடுப்பு மீதான வட்டிக்கு உரிய காலத்திற்கும் இறுதி எடுப்பு மீதான வட்டிக்கு உரிய காலத்திற்கும் சராசரியைக் கண்டுபிடிக்க வேண்டும்.

முதலாவது எடுப்பின் காலம் = $11\frac{1}{2}$ மாதங்கள்

இறுதி எடுப்பின் காலம் = $\frac{1}{2}$ மாதம்

சராசரி காலம் $= \dfrac{11\frac{1}{2} + \frac{1}{2}}{2}$

$= 6$ மாதங்கள்

$= \dfrac{6}{12}$ அல்லது $\dfrac{12}{24}$

**இ) ஒவ்வொரு மாத இறுதியிலும் ஒரு குறிப்பிட்ட தொகை எடுக்கும்பொழுது :**

முதலாவது எடுப்பு மீதான வட்டிக்கு உரிய காலத்திற்கும் இறுதி எடுப்பு மீதான வட்டிக்கு உரிய காலத்திற்கும் சராசரியைக் கண்டுபிடிக்க வேண்டும்.

முதலாவது எடுப்பின் காலம் = 11 மாதங்கள்

இறுதி எடுப்பின் காலம் = 0



சராசரி காலம் $= \dfrac{11 + 0}{2}$

$= 5\frac{1}{2}$ மாதங்கள்

$= \dfrac{5\frac{1}{2}}{12}$ அல்லது $\dfrac{11}{24}$

**ஈ) எடுப்புத் தொகை எடுத்த நாள்கள் கொடுக்கப்படவில்லை எனில்:**

சராசரி காலம் $= \dfrac{\text{மொத்த காலம்}}{2}$

1) ஓராண்டிற்கு எடுப்புத்தொகை எடுத்த நாள்கள் கொடுக்கப்படாத பொழுது:

சராசரி காலம் $= \dfrac{\text{மொத்த காலம்}}{2} = 6$ மாதங்கள்

2) ஆறு மாத காலத்திற்கு எடுப்புத் தொகை எடுத்த நாள்கள் கொடுக்கப்படாத பொழுது:

சராசரி காலம் $= \dfrac{6 \text{ மாதங்கள்}}{2} = 3$ மாதங்கள்

**எடுத்துக்காட்டு : 4**

ஒரு கூட்டாளி மாதந்தோறும் ரூ.1000 எடுப்பாக எடுத்துக்கொள்கிறார். ஆண்டுக்கு 10% வட்டி கணக்கிடப்படுகிறது. கீழ்க்கண்டவாறு அந்த ஆண்டில் எடுப்புத்தொகை எடுத்திருந்தால் எடுப்புகள் மீதான வட்டி கணக்கிடுக.

i) ஒவ்வொரு மாதத் தொடக்கத்தில் எடுத்திருந்தால்

ii) ஒவ்வொரு மாத இடையில் எடுத்திருந்தால்

iii) ஒவ்வொரு மாத இறுதியில் எடுத்திருந்தால்

**விடை:**

மொத்த எடுப்புத் தொகை ரூ.12,000 (1000 x 12) வட்டி விகிதம் 10%.

**i) ஒவ்வொரு மாதத் தொடக்கத்திலும் எடுப்புத் தொகை எடுக்கும் பொழுது :**

1) சராசரி காலம் $= \frac{12 + 1}{2} = \frac{13}{2} = 6\frac{1}{2}$ மாதங்கள்

எடுப்பு மீதான வட்டி =

$$\text{மொத்த எடுப்புகள்} \times \frac{\text{வட்டி விகிதம்}}{100} \times \frac{\text{சராசரி காலம்}}{12}$$

$$= 12{,}000 \times \frac{10}{100} \times \frac{13}{24}$$

= ரூ. 650.

**ii) ஒவ்வொரு மாத இடையிலும் எடுப்புத் தொகை எடுக்கும் பொழுது:**

சராசரி காலம் $= \frac{11\frac{1}{2} + \frac{1}{2}}{2} = \frac{12}{2}$

= 6 மாதங்கள்

$$= 12{,}000 \times \frac{10}{100} \times \frac{6}{12}$$

= ரூ. 600.



**iii) ஒவ்வொரு மாத இறுதியிலும் எடுப்புத் தொகை எடுக்கும் பொழுது:**

சராசரி காலம் $= \frac{11 + 0}{2} = \frac{11}{2}$

$= 5\frac{1}{2}$ மாதங்கள்

எடுப்பு மீது வட்டி $= 12{,}000 \times \frac{10}{100} \times \frac{11}{24}$

= ரூ. 550.

**i) ஒவ்வொரு மாதத் தொடக்கத்திலும் எடுப்புத் தொகை எடுக்கும் பொழுது :**

**பெருக்குத் தொகை முறையில் எடுப்பு மீது வட்டி கணக்கிடுதல்**

| எடுப்பு நாள் | எடுப்புத் தொகை ரூ. | காலம் | பெருக்குத் தொகை ரூ. |
|---|---|---|---|
| 1.1.2004 | 1,000 | 12 | 12,000 |
| 1.2.2004 | 1,000 | 11 | 11,000 |
| 1.3.2004 | 1,000 | 10 | 10,000 |
| 1.4.2004 | 1,000 | 9 | 9,000 |
| 1.5.2004 | 1,000 | 8 | 8,000 |
| 1.6.2004 | 1,000 | 7 | 7,000 |
| 1.7.2004 | 1,000 | 6 | 6,000 |
| 1.8.2004 | 1,000 | 5 | 5,000 |
| 1.9.2004 | 1,000 | 4 | 4,000 |
| 1.10.2004 | 1,000 | 3 | 3,000 |
| 1.11.2004 | 1,000 | 2 | 2,000 |
| 1.12.2004 | 1,000 | 1 | 1,000 |
| மொத்தப் பெருக்குத் தொகை | | | 78,000 |

எடுப்புத்தொகை மீதான வட்டி ரூ.78,000 மீது ஆண்டுக்கு 10%

$$= 78,000 \times \frac{10}{100} \times \frac{1}{12}$$

= ரூ. 650.

**எடுத்துக்காட்டு : 5**

P, Q, R என்னும் கூட்டாளிகள் முறையே 3:2:1 என்ற விகிதத்தில் இலாபம் பகிர்ந்து கொள்கின்றனர் P என்பவர் ஒவ்வொரு காலாண்டு இறுதியிலும் ரூ.5,000 திரும்ப எடுத்துள்ளார். Q என்பவர் ஒவ்வொரு அரையாண்டு இறுதியிலும் ரூ.10,000 திரும்ப எடுத்துள்ளார். R என்பவர் 1.5.2004 அன்று ரூ.2,000, 31.10.2004 அன்று ரூ.3,000, 30.11.2004 அன்று ரூ.5,000 எடுத்துள்ளார். 31.3.2005 ஆம் நாளோடு முடிவடையும் ஆண்டிற்கு அவர்களின் எடுப்புகள் மீதான வட்டியை ஆண்டுக்கு 10% கணக்கிடுக.

**விடை:**

**எடுப்புகள் மீதான வட்டி கணக்கிடுதல் – பெருக்குத்தொகை முறையில்**

**அ) P என்பவரின் எடுப்புகள் மீதான வட்டி:**

| எடுப்பு நாள் | எடுப்புத் தொகை ரூ. | காலம் | பெருக்குத் தொகை ரூ. |
|---|---|---|---|
| 30.6.2004 | 5,000 | 9 | 45,000 |
| 30.9.2004 | 5,000 | 6 | 30,000 |
| 31.12.2004 | 5,000 | 3 | 15,000 |
| 31.3.2005 | 5,000 | 0 | 0 |
| மொத்தப் பெருக்குத் தொகை | | | 90,000 |



எடுப்புகள் மீதான வட்டி ரூ. 90,000க்கு ஆண்டுக்கு 10%.

$$\text{எடுப்பு மீது வட்டி} = 90,000 \times \frac{10}{100} \times \frac{1}{12}$$

= ரூ. 750.

**ஆ) Q என்பவரின் எடுப்புகள் மீதான வட்டி:**

| எடுப்பு நாள் | எடுப்புத் தொகை ரூ. | காலம் | பெருக்குத் தொகை ரூ. |
|---|---|---|---|
| 30.9.2004 | 10,000 | 6 | 60,000 |
| 31.3.2005 | 10,000 | 0 | 0 |
| மொத்தப் பெருக்குத் தொகை | | | 60,000 |

எடுப்புகள் மீதான வட்டி ரூ. 60,000க்கு ஆண்டுக்கு 10%.

$$\text{எடுப்பு மீது வட்டி} = 60,000 \times \frac{10}{100} \times \frac{1}{12}$$

= ரூ. 500.

**இ) R என்பவரின் எடுப்புகள் மீதான வட்டி**

| எடுப்பு நாள் | எடுப்புத் தொகை ரூ. | காலம் | பெருக்குத் தொகை ரூ. |
|---|---|---|---|
| 01.05.2004 | 2,000 | 11 | 22,000 |
| 31.10.2004 | 3,000 | 5 | 15,000 |
| 30.11.2004 | 5,000 | 4 | 20,000 |
| மொத்தப் பெருக்குத் தொகை | | | 57,000 |

எடுப்புகள் மீதான வட்டி ரூ. 57,000க்கு ஆண்டுக்கு 10%.

$$\text{எடுப்பு மீது வட்டி} = 57,000 \times \frac{10}{100} \times \frac{1}{12}$$

= ரூ. 475.

### 6.3.3 கூட்டாளிகளின் ஊதியம் மற்றும் கழிவு : (Salary or Commission to partners)

சில கூட்டாளிகள் பிற கூட்டாளிகளைக் காட்டிலும் அனுபவமிக்கவர்களகவும், திறமைசாலிகளாகவும், அதிக நேரத்தை தொழிலில் செலவிடுபவராகவும் இருக்கலாம். அதற்காக அவர்களுக்கு ஊதியம் அல்லது கழிவு வழங்கலாம்.

கழிவுக்கு முன் உள்ள நிகர இலாபத்தில் குறிப்பிட்ட சதவிகிதமாக அல்லது கழிவுக்குப் பின் உள்ள நிகர இலாபத்தில் குறிப்பிட்ட சதவிகிதமாக அனுமதிக்கப்படுகிறது. அவ்விரு முறைகளைப் பார்ப்போம்.

**i) கழிவுக்கு முன் உள்ள நிகர இலாபத்தில் குறிப்பிட்ட சதவிகிதம்**

$$\text{கழிவு} = \text{கழிவுக்கு முன் நிகர இலாபம்} \times \frac{\text{கழிவு விகிதம்}}{100}$$

**ii) கழிவுக்குப் பின் உள்ள நிகர இலாபத்தில் குறிப்பிட்ட சதவிகிதம்**

$$\text{கழிவு} = \text{கழிவுக்கு முன் நிகர இலாபம்} \times \frac{\text{கழிவு விகிதம்}}{100 + \text{கழிவு விகிதம்}}$$

**ஊதியம் அல்லது கழிவை சரிக்கட்டுதல் செய்வதற்கான பதிவுகள்:**

**அ) கூட்டாளியின் ஊதியம் அல்லது கழிவு சரிக்கட்டுதல் செய்ய**

கூட்டாளி ஊதியம் அல்லது கழிவு க/கு ப ...
 கூட்டாளிகளின் முதல் கணக்குகள் ...
 (மாறுபடும் முதல் முறை)



அல்லது

கூட்டாளிகளின் நடப்புக் கணக்குகள் ...
(நிலை முதல் முறை)

**ஆ) கூட்டாளி ஊதியம் அல்லது கழிவு கணக்கை முடிவுக்கு கொண்டுவர:**

இலாப நட்டப் பகிர்வு க/கு ப ...
 கூட்டாளி ஊதியம் (அ) கழிவு க/கு ...

### 6.3.4 இலாப நட்டப் பகிர்வுக் கணக்கு தயாரித்தல்:

**எடுத்துக்காட்டு : 6**

மகேஷ், ரமேஷ் என்ற கூட்டாளிகள் முறையே ரூ.50,000, ரூ.40,000 முதல் வைத்து, 3:2 எனும் விகிதத்தில் இலாபம் பகிர்ந்து வருகின்றனர். முதல் மீது வட்டி ஆண்டுக்கு 8% வழங்க ஒப்புக்கொண்டுள்ளனர். எடுப்புகள் மீது வட்டி ஆண்டுக்கு 10% நிர்ணயித்துள்ளனர். எடுப்புத் தொகை மகேஷ் ரூ.15,000, ரமேஷ் ரூ.10,000. எடுப்பு மீதான வட்டி மகேஷ் ரூ.750, ரமேஷ் ரூ.500. மகேஷ் ஆண்டுக்கு ரூ.12,000 ஊதியமாகவும், ரமேஷ் கழிவுக்கு முன் நிகர இலாபத்தில் 10% கழிவாகவும் பெறுகின்றனர். மேற்கண்ட சரிக்கட்டுதல்களுக்கு முன் தொழிலின் 2005 மார்ச் 31ஆம் நாளோடு முடிவடையும் ஆண்டின் நிகர இலாபம் ரூ.60,000.

இலாப நட்டப் பகிர்வுக் கணக்கைத் தயாரிக்க.

**விடை:**

**நிறுவன ஏடுகளில் இலாப நட்டப் பகிர்வு கணக்கு**

ப வ

| நாள் | விவரம் | ரூ. | நாள் | விவரம் | ரூ. |
|---|---|---|---|---|---|
| 2005 | | | 2005 | | |
| மார்ச் 31 | முதல் மீது வட்டி | | மார்ச் 31 | நிகர இலாபம் | |
| | மகேஷ் 4,000 | | | கீ/கொ | 60,000 |
| | ரமேஷ் 3,200 | 7,200 | | | |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| | கூட்டாளி ஊதியம்: | | „ | எடுப்புகள் மீதான | |
| | மகேஷ் | 12,000 | | வட்டி: | |
| | கழிவு: ரமேஷ் | 4,205 | | மகேஷ் 750 | |
| | (10% ரூ.42,050 மீது) | | | ரமேஷ் 500 | 1,250 |
| | இலாபம் கணக்கிற்கு மாற்றப்படுவது | | | | |
| | மகேஷ் 22,707 | | | | |
| | ரமேஷ் 15,138 | 37,845 | | | |
| | | 61,250 | | | 61,250 |

**குறிப்பு: கழிவு கணக்கிடுதல்**

நிலை 1 → இலாப நட்டப் பகிர்வுக் கணக்கின் வரவுப் பக்கத்தைக் கூட்டுக. அதாவது ரூ.61,250.

நிலை 2 → இலாப நட்டப் பகிர்வுக் கணக்கின் பற்றுப் பக்கத்தைக் கூட்டுக. அதாவது ரூ.19,200.

நிலை 3 → இருப்புக் கட்டுக. அதாவது ரூ.42,050.

நிலை 4 → வாய்ப்பாட்டைப் பயன்படுத்துக.

$$\text{கழிவு} = \text{கழிவுக்கு முன் நிகர இலாபம்} \times \frac{\text{கழிவு வீதம்}}{100}$$

$$= 42,050 \times \frac{10}{100}$$

$$= \text{ரூ. } 4,205.$$

இருப்புத்தொகை ரூ.37,845 (ரூ.42,050 − ரூ.4,205) கூட்டாளிகளின் முதல் கணக்குகளுக்கு 3:2 எனும் விகிதத்தில் மாற்றப்படுகின்றது.

**எடுத்துக்காட்டு : 7**

X,Y என்ற இரு கூட்டாளிகள் சமமாக இலாப நட்டத்தைப் பகிர்ந்துகொண்டு தொழில் புரிகின்றனர். X என்பவருக்கு மாத



ஊதியமாக ரூ.5,000 வழங்கவும், Y என்பவருக்கு கழிவுக்கு பின் உள்ள நிகர இலாபத்தில் 10% கழிவு வழங்கவும் ஒப்புக்கொள்ளப்பட்டுள்ளது. ஊதியம் மற்றும் கழிவுக்கு முன் நிகர இலாபம் ரூ.1,48,000. இலாப நட்டப் பகிர்வுக் கணக்குத் தயாரிக்க.

**விடை:**

**அ) X என்பவரின் ஊதியம் கணக்கிடல்**

மாத ஊதியம் ரூ.5,000

ஆண்டுக்கு $= 12 \times 5,000$

$= \text{ரூ.}60,000$

**ஆ) Y என்பவரின் கழிவு கணக்கிடல்**

$$\text{கழிவு} = \text{கழிவுக்கு முன் நிகர இலாபம்} \times \frac{\text{கழிவு விகிதம்}}{100 + \text{கழிவு வீதம்}}$$

கழிவுக்கு முன் நிகர இலாபம் $= 1,48,000 - 60,000$

$= \text{ரூ. } 88,000.$

கழிவு $= 88,000 \times \frac{10}{100 + 10}$

$= 88,000 \times \frac{10}{110}$

$= \text{ரூ. } 8,000.$

### நிறுவன ஏடுகளில் இலாப நட்டப் பகிர்வுக் கணக்கு

ப வ

| நாள் | விவரம் | ரூ. | நாள் | விவரம் | ரூ. |
|---|---|---|---|---|---|
| | X - ன் ஊதியம் | 60,000 | | நிகர இலாபம் | 1,48,000 |
| | Y - ன் கழிவு | 8,000 | | கீ/கொ | |
| | நிகர இலாபம்: | | | | |
| | X 40,000 | | | | |
| | Y 40,000 | 80,000 | | | |
| | | 1,48,000 | | | 1,48,000 |

## 6.4 நற்பெயர் (Goodwill):

கூட்டாண்மை நிறுவனம் மாற்றி அமைக்கப்படும் பொழுது, நிறுவனத்தின் நற்பெயரை மதிப்பீடு செய்து, கூட்டாளிகள் பங்கிட்டுக் கொள்கின்றனர். நற்பெயர் என்பது நிறுவனம் வருங்காலத்தில் எதிர்பார்க்கும் கூடுதல் இலாபத்தைக் கணக்கிட்டு உருவாக்கப்படும் தற்போதைய மதிப்பு ஆகும். இது கடந்த காலங்களில் கூட்டாளிகளின் ஒட்டு மொத்த முயற்சிகளின் பலன் ஆகும். நிறுவனம் சாதாரண இலாபத்தைவிட அதிக இலாபம் ஈட்டும்பொழுது தான் நற்பெயர் உண்மையாக உருவாகிறது.

### 6.4.1 பொருள் மற்றும் தன்மை :

நற்பெயர் என்பது நிறுவனம் வாடிக்கையாளர்களுக்குச் செய்துள்ள சிறந்த சேவை மற்றும் பொருள்களின் தரத்தினை அடிப்படையாகக் கொண்டு ஈட்டியுள்ள மதிப்பின் அளவீடு ஆகும். இது தொழில் நிறுவனத்திற்குச் சாதகமான அம்சங்களின் மதிப்பீடு ஆகும். கடந்த காலத்தில் மதிப்போடு இருந்தது என்பதைக் காட்டிலும் வருங்காலத்திலும் அது தொடர்ந்து நீடிக்கும் என்பதில் தான் நற்பெயர் என்ற சொத்தின் மதிப்பு அடங்கியிருக்கிறது. நற்பெயரைக் கண்ணாலோ, தொட்டோ பார்க்க இயலாது. அது ஒரு புலனாகாச் சொத்து. ஆனால் கற்பனைச் சொத்தல்ல.



### 6.4.2 நற்பெயர் மதிப்பை பாதிக்கும் காரணிகள்:

நற்பெயர் நிறுவனத்தின் இலாபம் ஈட்டும் திறனை அடிப்படையாகக் கொண்டது. எனவே நிறுவனத்தின் நற்பெயர் மதிப்பு கீழ்க்கண்ட காரணிகளால் பாதிக்கப்படுகிறது.

1. **தரம்:** நிறுவனத்தின் பொருள்கள் தரமாக இருப்பதனால் ஏற்பட்டுள்ள நன்மதிப்பு காரணமாக பொருள்கள் உடனடியாக விற்பனை ஆகின்றன. எனவே நற்பெயர் மதிப்பு உயர்கிறது.
2. **இடம்:** நிறுவனம் அமைந்துள்ள இடம் முக்கியமான இடமாக இருந்தாலே, மதிப்பு கூடும்.
3. **சிறந்த மேலாண்மை:** நிறுவனம் சிறப்புடன் மேலாண்மை செய்யப்படுவதன் மூலம் அதிக இலாபம் ஈட்டப்படுவதால் நிறுவனத்தின் மதிப்பு உயர்வடைகிறது.
4. **போட்டி:** போட்டி இல்லாமலோ அல்லது போட்டி குறைவாகவோ இருந்தாலே நிறுவனத்தின் மதிப்பு கூடுகிறது.
5. **புனைஉரிமையின் நன்மைகள்:** வணிகக்குறி, புனைஉரிமை அல்லது பதிப்புரிமை ஆகியவை பெற்றிருந்தால் நிறுவனத்தின் மதிப்பு உயர்வடைகிறது.
6. **காலம்:** நிறுவனம் தொடர்ந்து பலஆண்டுகள் இலாபம் ஈட்டுவதால் நன்மதிப்பு வளர்ந்துகொண்டே இருக்கிறது.
7. **வாடிக்கையாளர்களின் மனப்பாங்கு:** ஒரு நிறுவனம் பெற்றுள்ள வாடிக்கையாளர்களின் மனப்பாங்கும் முக்கியமானதாகும். அதிக வாடிக்கையாளர்களைப் பெற்றிருத்தலும் நிறுவனத்தின் நற்பெயரை உயர்த்துகிறது.
8. **தொழிலின் தன்மை:** நிறுவனத்தின் நிலைத்த தேவையினால் அதிக இலாபம் ஈட்டப்படுகிறது. அதனால் நற்பெயர் அதிகரிக்கிறது.

### 6.4.3 நற்பெயரின் மதிப்பைக் கணக்கிடும் முறைகள்:

நிறுவனத்தின் நற்பெயரை கீழ்க்காணும் மூன்று முறைகளில் மதிப்பிடலாம். அவையாவன:

1) சராசரி இலாப முறை

2) உயர் இலாப முறை

3) மூலதனமாக்க முறை

எனினும், நாம் இந்த அத்தியாயத்தில் முதல் இரண்டு முறைகளை மட்டும் பார்ப்போம்.

**1. சராசரி இலாப முறை** (Average Profit Method) :

இம்முறையில், கடந்த ஆண்டுகளில் ஈட்டிய இலாபத்தைக் கணக்கில் எடுத்துக்கொள்ள வேண்டும்.அந்த இலாபங்களைக் கூட்டி சராசரி இலாபத்தைக் கண்டுபிடிக்க வேண்டும். சராசரி இலாபத்தைக் கொள்முதல் ஆண்டுகளின் எண்ணிக்கையால் பெருக்கினால் நற்பெயரின் மதிப்புக் கிடைக்கும்.

**நற்பெயர் மதிப்பைக் கணக்கிடுதல்**

நிலை 1 → இலாபங்களைக் கூட்டி நட்டத்தைக் கழித்து மொத்த இலாபத்தைக் கணக்கிடுக.

நிலை 2 → கீழ்க்காணும் வாய்ப்பாட்டைப் பயன்படுத்தி சராசிரி இலாபத்தைக் கணக்கிடுக.

$$\text{சராசரி இலாபம்} = \frac{\text{மொத்த இலாபம்}}{\text{ஆண்டுகளின் எண்ணிக்கை}}$$

நிலை 3 → கீழ்க்காணும் வாய்ப்பாட்டைப் பயன்படுத்தி நற்பெயரைக் கணக்கிடுக.

நற்பெயர் = சராசரி இலாபம் x கொள்முதல் ஆண்டுகளின் எண்ணிக்கை

**எடுத்துக்காட்டு : 8**

நிறுவனத்தின் நற்பெயர் கடந்த நான்கு ஆண்டுகளின் சராசரி இலாபத்தின் இரண்டு ஆண்டு கொள்முதல் என மதிப்பிடப்படுகிறது. நான்கு ஆண்டுகளின் இலாபங்கள் முறையே ரூ.40,000, ரூ.32,000, ரூ.15,000, ரூ.13000. நற்பெயரின் மதிப்பைக் கணக்கிடுக.



**விடை:**

**அ) சராசரி இலாபத்தைக் கணக்கிடுதல்:**

| | ரூ. |
|---|---|
| முதல் ஆண்டு | 40,000 |
| இரண்டாம் ஆண்டு | 32,000 |
| மூன்றாம் ஆண்டு | 15,000 |
| நான்காம் ஆண்டு | 13,000 |
| மொத்த இலாபம் | 1,00,000 |

$$\text{சராசரி இலாபம்} = \frac{\text{மொத்த இலாபம்}}{\text{ஆண்டுகளின் எண்ணிக்கை}}$$

$$= \frac{1,00,000}{4}$$

= ரூ. 25,000

**ஆ) நற்பெயரைக் கணக்கிடுதல்:**

நற்பெயர் = சராசரி இலாபம் x கொள்முதல் ஆண்டுகள் எண்ணிக்கை

= 25,000 x 2

= ரூ. 50,000.

**எடுத்துக்காட்டு : 9**

கடந்த நான்கு ஆண்டுகளின் சராசரி இலாபங்களின் மூன்று ஆண்டு கொள்முதல் என நற்பெயர் மதிப்பீடு செய்ய ஒப்புக்கொள்ளப்பட்டது. கடந்த நான்கு ஆண்டுகளின் இலாப நட்டங்கள்: முதல் ஆண்டு ரூ.50,000, இரண்டாம் ஆண்டு ரூ.80,000, மூன்றாம் ஆண்டு ரூ.30,000 (நட்டம்), நான்காம் ஆண்டு ரூ.60,000.

நற்பெயர் மதிப்பைக் கண்டுபிடிக்க.

**விடை:**

**அ) சராசரி இலாபத்தைக் கணக்கிடுதல் :**

| | ரூ. |
|---|---|
| முதல் ஆண்டு | 50,000 |
| இரண்டாம் ஆண்டு | 80,000 |
| நான்காம் ஆண்டு | 60,000 |
| | 1,90,000 |
| மூன்றாம் ஆண்டின் நட்டம் | 30,000 |
| மொத்த இலாபம் | 1,60,000 |

$$\text{சராசரி இலாபம்} = \frac{\text{மொத்த இலாபம்}}{\text{ஆண்டுகளின் எண்ணிக்கை}}$$

$$= \frac{1,60,000}{4} = \text{ரூ. } 40,000$$

**ஆ) நற்பெயரைக் கணக்கிடல் :**

நற்பெயர் = சராசரி இலாபம் x கொள்முதல் ஆண்டுகள் எண்ணிக்கை

= 40,000 x 3 = ரூ.1,20,000

**2) உயர் இலாப முறை** (Super Profit Method) :

*சாதாரண இலாபத்தைவிட கூடுதலாகப் பெறக்கூடிய சராசரி இலாபமே உயர் இலாபம் எனப்படுகிறது. உயர் இலாப முறையில், உயர் இலாபத்தை கொள்முதல் ஆண்டுகளால் பெருக்கினால் நற்பெயரைக் கணக்கிடலாம்.*

**நற்பெயரைக் கணக்கிடும் முறை:**

நிலை 1 → சராசரி இலாபத்தைக் கணக்கிடுக. கூட்டாளிகளின் ஊதியத்தைக் கணக்கில் கொள்க.



நிலை 2 → பயன்படுத்தப்பட்ட முதல் மீதான சாதாரண இலாபத்தைக் கீழ்க்காணும் வாய்ப்பாட்டைப் பயன்படுத்தி கணக்கிடுக.

சாதாரண இலாபம் = பயன்படுத்தப்பட்ட முதல் x சாதாரண வருமான வீதம்.

நிலை 3 → உயர் இலாபத்தைக் கீழ்க்காணும் வாய்ப்பாட்டைப் பயன்படுத்தி கணக்கிடுக.

உயர் இலாபம் = சராசரி இலாபம் – சாதாரண இலாபம்.

நிலை 4 → நற்பெயர் மதிப்பைக் கீழ்க்காணும் வாய்ப்பாட்டைப் பயன்படுத்தி கணக்கிடுக.

நற்பெயர் = உயர் இலாபம் x கொள்முதல் ஆண்டுகள்.

**எடுத்துக்காட்டு : 10**

*நிறுவனத்தின் கடந்த மூன்று ஆண்டுகள் இலாபங்கள் ரூ.90,000, ரூ.1,00,000, ரூ.1,10,000 ஆகும். நிறுவனத்தின் பயன்படுத்தப்பட்ட முதல் ரூ.3,00,000. சாதாரண இலாபம் முதல் மீது 10% ஆகும். உயர் இலாபத்தின் இரண்டு ஆண்டு கொள்முதல் என்ற அடிப்படையில் நற்பெயரின் மதிப்பைக் கணக்கிடுக.*

**விடை:**

**அ) சராசரி இலாபத்தைக் கணக்கிடல் :**

| | ரூ. |
|---|---|
| முதல் ஆண்டு | 90,000 |
| இரண்டாம் ஆண்டு | 1,00,000 |
| மூன்றாம் ஆண்டு | 1,10,000 |
| மொத்த இலாபம் | 3,00,000 |

$$\text{சராசரி இலாபம்} = \frac{3,00,000}{3} = \text{ரூ. } 1,00,000$$

**ஆ) சாதாரண இலாபத்தைக் கணக்கிடல் :**

சாதாரண இலாபம் = பயன்படுத்தப்பட்ட முதல் x சாதாரண இலாப விகிதம்

$= 3,00,000 \times \frac{10}{100} = $ ரூ. 30,000.

**இ) உயர் இலாபத்தைக் கணக்கிடல் :**

உயர் இலாபம் = சராசரி இலாபம் – சாதாரண இலாபம்

= 1,00,000 – 30,000 = ரூ.70,000.

**ஈ) நற்பெயரைக் கணக்கிடல் :**

நற்பெயர் = உயர் இலாபம் x கொள்முதல் ஆண்டுகள்

= ரூ.70,000 x 2 = ரூ.1,40,000

## வினாக்கள்

### I. புற வகை வினாக்கள்

**அ) கோடிட்ட இடங்களை நிரப்புக:**

1. தனியாள் வாணிகத்தில் உரிமையாளரும் மேலாண்மை செய்பவரும் ________ .
2. இந்தியக் கூட்டாண்மைச் சட்டம் உருவாக்கப்பட்ட ஆண்டு ________.
3. கூட்டாண்மையின் மிக முக்கிய சிறப்பியல்பு பரஸ்பர ________ முகமை ஆகும்.
4. தொழிலின் இலாப நட்டங்களை கூட்டாளிகளிடையே ________ விகிதத்தில் பங்கிட்டுக் கொள்கின்றனர்.



5. மாறுபடும் முதல் முறையில், ஒரு ஆண்டின் இலாபம் அல்லது நட்டம் உரிய ________ கணக்குகளுக்கு மாற்றப்படும்.
6. கூட்டாளிகளின் முதல் கணக்குகள் ________ அல்லது மாறுபடும் முதலாக இருக்கும்.
7. ________ முதல் ஏற்பாட்டில் நடப்புக் கணக்குகள் தயாரிக்கப்படமாட்டாது.
8. நடப்புக் கணக்கின் பற்று இருப்பு, இருப்பு நிலைக்குறிப்பில் ________ பக்கத்தில் இடம்பெறும்.
9. கூட்டாளிகளின் முதல் மீதான வட்டி ________, குறிப்பிட்டிருந்தால் மட்டுமே அனுமதிக்கப்படும்.
10. கூட்டாளி தொழில் நிறுவனத்திற்கு தரும் கடன் அவருடைய ________ கணக்கில் வரவு வைக்கப்பட வேண்டுமே ஒழிய, முதல் கணக்கில் வரவு வைக்கக் கூடாது.
11. கூட்டாளியின் கடன் மீதான வட்டியை, அந்த ஆண்டில் ________ இல்லையென்றாலும் வழங்க வேண்டும்.
12. நற்பெயர் ஒரு ________ சொத்து.
13. சாதாரண இலாபத்தைவிட சராசரி இலாபம் மிகுதிக்கு ________ என்று பெயர்.
14. கூட்டாண்மை உடன்பாடு இல்லாத நிலையில் ________ மீதான வட்டி விதிக்கக் கூடாது.
15. ________ தொழில் செய்வதற்கு மட்டுமே கூட்டாண்மை உருவாக்கப்படும்.
16. கூட்டாண்மையில் ஈடுபடும் நபர்களை ஒட்டு மொத்தமாக ________ என அழைக்கலாம்.

(விடைகள்: 1. ஒருவரே; 2. 1932; 3. உட்கிடை; 4. ஒப்புக் கொண்ட; 5. முதல்; 6. நிலை; 7. மாறுபடும்; 8. சொத்துகள்; 9. கூட்டாண்மை உடன்பாட்டில்; 10. கடன்; 11. இலாபம்; 12. புலனாகா; 13. உயர் இலாபம்; 14. எடுப்புகள்; 15. சட்டப்படியான; 16. நிறுவனம்)

**ஆ) தக்க விடையைத் தேர்ந்தெடு:**

1. கூட்டாண்மை நிறுவனத்தின் குறும எண்ணிக்கை
அ) ஒன்று ஆ) இரண்டு இ) ஏழு

2. கூட்டாண்மையில், ஒப்பந்தம்
அ) கட்டாயமானது ஆ) கட்டாயமில்லை
இ) தேவையில்லாதது

3. கூட்டாண்மையில், கூட்டாளிகள் இலாப நட்டத்தைப் பகிர்ந்து கொள்வது __________ விகிதத்தில்
அ) முதல் ஆ) சமமான இ) ஒப்புக்கொண்ட

4. நிலை முதல் முறையில், கூட்டாளிகளின் இலாப, நட்டங்கள் அவர்களின் ____________ கணக்குகளுக்கு மாற்றப்படுகிறது.
அ) நடப்பு ஆ) எடுப்பு இ) முதல்

5. முதல் மீதான வட்டி கணக்கிடப்படுவது
அ) தொடக்க முதல் ஆ) இறுதிமுதல்
ஈ) சராசரி முதல்

6. கூட்டாளிகளின் நடப்புக் கணக்குகள் தொடங்கப்படுவது
அ) நிலை முதல் முறையில்
ஆ) மாறுபடும் முதல் முறையில்
இ) நிலைமுதல் முறையிலோ அல்லது மாறுபடும் முதல் முறையிலோ

7. உடன்பாடு இல்லாத நிலையில் இலாப நட்டம் பகிரப்படுவது
அ) முதல் விகிதத்தில்
ஆ) ஒவ்வொரு கூட்டாளியும் செலவிட்ட நேர விகிதத்தின் அடிப்படையில்
இ) சமமாக

8. X, Y என்ற கூட்டாளிகள் 2:3 என்ற விகிதத்தில் இலாபம் பகிர்ந்து வந்தனர். அவர்களின் முதல், முறையே ரூ.1,20,000 மற்றும் ரூ.60,000 ஆகும். அவ்வாண்டின் இலாபம் ரூ.9,000. கூட்டாண்மை உடன்பாடு முதல் மீது வட்டி பற்றி எதையும் குறிப்பிடாத பொழுது X, Y இருவருக்கும் கிடைக்கும் இலாபம்
அ) இலாபம் : X – ரூ. 6,000; Y – ரூ. 3,000
ஆ) இலாபம் : X – ரூ. 3,600; Y – ரூ. 5,400
இ) இலாபம் : X – ரூ. 3,000; Y – ரூ. 6,000

9. கூட்டாளி ஒருவர் முதல் மீது வட்டி பெற உரியவராயின், அது கொடுக்கப்படுவது
அ) இலாபத்திலிருந்து மட்டும்
ஆ) முதலிலிருந்து மட்டும்
இ) இலாபத்திலிருந்து மட்டும் அல்லது முதலிலிருந்து மட்டும்

10. கூட்டாண்மை உடன்பாடு இல்லாத பொழுது, கூட்டாளிகளுக்கு
அ) ஊதியம் அளிக்கப்படும்
ஆ) ஊதியம் அளிக்கப்பட மாட்டாது
இ) நிறுவனத்திற்காக உழைத்தவர்களுக்கு சம்பளம் அளிக்கப்படும்.

11. நிலை முதல் முறையில், கூட்டாளிக்குக் கொடுக்கப்படும் ஊதியம் பதியப்படுவது
அ) நடப்புக் கணக்கில்
ஆ) முதல் கணக்கில்
இ) நடப்புக் கணக்கு அல்லது முதல் கணக்கில்

12. ஒரு நிறுவனத்தில் A, B ஆகிய கூட்டாளிகளின் முதல் கணக்குகள் மற்றும் நடப்புக் கணக்குகள் பராமரிக்கப் படுகின்றன. B கொண்டுவரும் கூட்டுதல் முதல் பதியப்படுவது
அ) Bயின் நடப்புக் கணக்கு
ஆ) Bயின் முதல் கணக்கு
இ) Bயின் நடப்புக் கணக்கு அல்லது முதல் கணக்கு

(விடைகள்: 1. (ஆ); 2. (ஆ); 3. (இ); 4. (அ); 5. (அ); 6. (அ); 7. (இ); 8. (ஆ); 9. (அ); 10. (ஆ); 11. (அ); 12. (ஆ))

## II. பிறவினாக்கள்:

1. கூட்டாண்மை — வரைவிலக்கணம் தருக.
2. எடுப்பு என்றால் என்ன?
3. நற்பெயர் என்றால் என்ன?
4. சராசரி இலாபம் என்பது என்ன?
5. உயர் இலாபம் என்றால் என்ன?
6. கூட்டாளிகளின் நடப்புக் கணக்கு என்றால் என்ன?
7. இலாப நட்டப் பகிர்வுக் கணக்கு என்றால் என்ன?
8. கூட்டாண்மையின் சிறப்பியல்புகள் யாவை?
9. கூட்டாளிகளின் முதல் கணக்குகள் பராமரிக்கப்படும் முறைகளை விளக்குக.
10. கூட்டாண்மை உடன்பாடு இல்லாதபொழுது, கீழ்க்காண்பவை நிறுவன ஏடுகளில் எவ்வாறு செயல்படுத்தப்படும்?

    அ) முதல் மீது வட்டி

    ஆ) எடுப்பு மீது வட்டி

    இ) கூட்டாளிகளின் சம்பளம்

    ஈ) கூட்டாளிகளின் கழிவு

    உ) கூட்டாளிகளின் கடன் மீதான வட்டி

    ஊ) இலாபப் பகிர்வு விகிதம்
11. நிலைமுதல் முறைக்கும் மாறுபடும் முதல்முறைக்கும் உள்ள வேறுபாடுகள் யாவை?
12. நற்பெயரைப் பாதிக்கும் காரணிகள் யாவை?
13. நற்பெயர் மதிப்பிடும் முறைகளை விவரி.
14. கூட்டாளிகளின் முதல் நிலை முதலாக உள்ள பொழுது, கீழ்க்காண்பவை எங்கு பதியப்படும்?

    அ) கூட்டாளிக்குத் தரப்படும் ஊதியம்

    ஆ) கூட்டாளியின் எடுப்புகள்
15. ஒரு நிறுவனம் கூட்டாளிகள் A, B ஆகியோரின் முதல் மற்றும் நடப்புக் கணக்குகளைப் பராமரிக்கப்படும் பொழுது கீழ்க்காண்பவை எங்கு பதியப்படும்?

    அ) B கொண்டு வந்த கூடுதல் முதல்



    ஆ) A, B ஆகியோரின் இலாபப் பங்கு
16. மாறுபடும் முதல் முறையில் கூட்டாளியின் முதல் கணக்கில் வரவுப் பகுதியில் தோன்றும் இனங்களைக் குறிப்பிடுக.

## III. பயிற்சி கணக்குகள்

### நிலை முதலும் மாறுபடும் முதலும்:

1. இராமு, சோமு என்போர் மாறுபடும் முதல், நிலைமுதல் கொண்ட கூட்டாளிகளாக இருக்கும்பொழுது கீழ்க்காணும் விவரங்கள் அவர்களின் முதல் கணக்குகளில் எவ்வாறு தோன்றும்?

| | இராமு ரூ. | சோமு ரூ. |
|---|---|---|
| 1.4.2004 அன்றைய முதல் | 90,000 | 60,000 |
| 2004–2005ஆம் ஆண்டின் எடுப்புகள் | 18,000 | 15,000 |
| எடுப்பு மீதான வட்டி | 500 | 300 |
| 2004–2005ஆம் ஆண்டின் இலாபப்பங்கு | 12,000 | 8,000 |
| முதல் மீதான வட்டி | 5,400 | 3,600 |
| கூட்டாளியின் ஊதியம் | 6,000 | — |

(விடை: மாறுபடும் முதல்முறை: முதல் கணக்குகள் – இராமு ரூ.94,900; சோமு ரூ.56,300); நிலை முதல் முறை: நடப்புக்கணக்குகள் — இராமு ரூ.4,900(வ); சோமு ரூ.3,700(ப).

2. கீழ்க்காணும் விவரங்களைக் கொண்டு, மாறுபடும் முதல் முறையில் வாணி, ராணி, ஆகியோரின் முதல் கணக்குகளைத் தயாரிக்க.

| | வாணி ரூ. | இராணி ரூ. |
|---|---|---|
| 1.4.2003 அன்றைய முதல் | 2,10,000 | 1,20,000 |
| 2003–04ஆம் ஆண்டின் எடுப்புகள் | 18,000 | 12,000 |
| முதல் மீது வட்டி 6% | ? | ? |
| எடுப்புகள் மீதான வட்டி | 450 | 300 |

| | | |
|---|---|---|
| 2003–04ஆம் ஆண்டின் இலாபப்பங்கு | 24,000 | 18,000 |
| கூட்டாளியின் ஊதியம் | — | 6,000 |
| கழிவு | 4,800 | 3,600 |
| இராணியின் கடன் மீதான வட்டி | 3,000 | — |

(விடை: வாணியின் முதல் கணக்கு ரூ.2,32,950;
ராணியின் முதல் கணக்கு ரூ.1,42,500)

குறிப்பு: கடன் மீதான வட்டி கடன் கணக்கில் காட்டப்பட வேண்டும்.

3. கீழ்க்காணும் விவரங்களைக் கொண்டு, கண்ணகி, வாசுகி எனும் கூட்டாளிகளின் முதல் கணக்குகளையும், நடப்புக் கணக்குகளையும் தயாரிக்க.

| | கண்ணகி ரூ. | வாசுகி ரூ. |
|---|---|---|
| 1.4.2003 அன்றைய முதல் | 1,00,000 | 60,000 |
| 1.4.2003 அன்றைய நடப்புக் கணக்கு | 3,000(ப) | 2,000(வ) |
| 2003–04ஆம் ஆண்டின் எடுப்புகள் | 8,000 | 5,000 |
| முதல் மீது வட்டி | 5,000 | 3,000 |
| எடுப்பு மீது வட்டி | 240 | 150 |
| 2003–04ஆம் ஆண்டின் இலாபப்பங்கு | 12,000 | 10,000 |
| கூட்டாளியின் ஊதியம் | 4,000 | — |

(விடை: கண்ணகி நடப்புக் க/கு ரூ.9,760(வ)
வாசுகி நடப்புக் க/கு ரூ.9,850(வ))

4. கீழ்க்காணும் விவரங்களைக் கொண்டு, ரவி, ராஜா எனும் கூட்டாளிகளின் முதல் கணக்குகளை மாறுபடும் முதல் முறையில் தயாரிக்க.

| விவரம் | ரவி ரூ. | ராஜா ரூ. |
|---|---|---|
| 1.1.2001 அன்றைய முதல் | 80,000 | 50,000 |
| 2001ஆம் ஆண்டின் எடுப்புகள் | 6,000 | 4,000 |
| முதல் மீது வட்டி 6% | ? | ? |
| எடுப்பு மீது வட்டி 5% | ? | ? |
| 2001ஆம் ஆண்டின் இலாபப் பங்கு | 8,000 | 6,000 |



| | | |
|---|---|---|
| கூட்டாளிகளின் ஊதியம் | — | 2,000 |
| கழிவு | 1,600 | 1,200 |
| இராஜாவின் கடன் மீது வட்டி | — | 3,000 |

(அக்டோபர் 2002)

(விடை: ரவியின் முதல் க/கு ரூ.88,250,
ராஜாவின் முதல் க/கு ரூ.58,100)

## இலாப நட்டப் பகிர்வு :

5. 2004 ஏப்ரல் 1ஆம் நாள் இளவரசன், அமுதரசன் என்னும் இருவர் முறையே ரூ.1,50,000, ரூ.1,00,000 முதலீட்டு சமமான விகிதத்தில் இலாபத்தைப் பகிர்ந்து கொள்ள உடன்பட்டு கூட்டாண்மை நிறுவனம் அமைத்தனர். சரிக்கட்டுகளுக்கு முன் அந்நிறுவனத்தின் 2005 மார்ச் 31ஆம் நாளோடு முடிவடையும் ஆண்டின் இலாபம் ரூ.60,000. முதல் மீது வட்டி 6% அளிக்கப்படும். அமுதரசனுக்கு ஆண்டு ஊதியம் ரூ.15,000 அனுமதிக்கப்படுகிறது. அந்த ஆண்டு இளவரசன் எடுத்த தொகை ரூ.15,000, அமுதரசன் எடுத்த தொகை ரூ.10,000; அதற்கான வட்டி முறையே ரூ.500, ரூ.250 ஆகும்.

2005 மார்ச் 31 அன்று உள்ளபடி கூட்டாளிகளின் இலாப நட்டப் பகிர்வுக் கணக்கையும், முதல் கணக்குகளையும் தயாரிக்க.

(விடை: இலாபம் ரூ.30,750; முதல் கணக்குகள்;
இளவரசன் ரூ.1,58,875; அமுதரசன் ரூ.1,26,125)

6. அமுதன், இராமன் எனும் கூட்டாளிகள் முறையே 3:2 எனும் விகிதத்தில் இலாப நட்டங்கள் பகிர்ந்து வந்தனர். 1.4.2003 அன்றைய அவர்களுடைய முதல் முறையே ரூ.1,60,000, ரூ.1,20,000 ஆகும். கூட்டாண்மை ஒப்பாவணம் கீழ்க்காண்பனவற்றிற்கு வகை செய்கிறது. சரிக்கட்டுதல்களுக்கு முன் 2004 மார்ச் 31ஆம் நாளோடு முடிவடையும் ஆண்டின் நிகர இலாபம் ரூ.60,000. அந்த ஆண்டின் எடுப்புகள் முறையே அமுதன் ரூ.12,000, இராமன் ரூ.8,000 ஆகும்.

1. முதல் மீது வட்டி ஆண்டுக்கு 5%
2. எடுப்புகள் மீது வட்டி ஆண்டுக்கு 6%

3. அமுதன், இராமன் இருவரும் முறையே ரூ.10,000 ஊதியம் பெறுகின்றனர்.

4. அமுதன் கழிவுக்கு முன் உள்ள நிகர இலாபத்தில் 10% கழிவு பெறுகிறார்.

இலாப நட்டப் பகிர்வு கணக்கையும், கூட்டாளிகளின் முதல் கணக்குகளையும் காட்டுக.

(விடை: நிகர இலாபம் ரூ.23,940; முதல் கணக்குகள் அமுதன் ரூ.1,82,664; இராமன் ரூ.1,37,336).

குறிப்பு: எடுப்புகளின் நாள்கள் தரப்படவில்லை எனில், எடுப்பு மீதான வட்டி, சராசரி காலமான ஆறு மாதங்களுக்குக் கணக்கிட வேண்டும்.

7. சேரன், பல்லவன் எனும் கூட்டாளிகள் முறையே ரூ.60,000, ரூ.20,000 முதலிட்டு 2001 ஜனவரி 1ஆம் நாள் அன்று கூட்டாண்மைத் தொழில் தொடங்கினர். 2001 டிசம்பர் 31ஆம் நாளோடு முடிவடையும் ஆண்டின் இலாபம் (உடன்பாட்டில் கூறப்பட்டவைகளைச் சரிக்கட்டும் முன்பு) ரூ.12,000. முதல் மீது வட்டி ஆண்டுக்கு 6% அனுமதிக்கப்படுகிறது. பல்லவனுக்கு ஊதியம் ஆண்டுக்கு ரூ.3,000 அனுமதிக்கப்பட்டுள்ளது. அந்த ஆண்டு சேரன் எடுத்த தொகை ரூ.2,000, பல்லவன் எடுத்த தொகை ரூ.1,000; அதற்கான வட்டி முறையே ரூ.100, ரூ.50 ஆகும்.

சேரன். பல்லவன் ஆகிய இருவரும் சமமான விகிதத்தில் இலாபம் பகிர்ந்து கொள்வதாகக் கொண்டு. இலாப நட்டப் பகிர்வு கணக்கையும், கூட்டாளிகள் முதல் கணக்குகளையும் (மாறுபடும் முதல் முறை) தயாரிக்க.

(ஜுன் 2002)

(விடை: நிகர இலாபம் ரூ.4,350; முதல் கணக்குகள்: சேரன் ரூ.66,625; பல்லவன் ரூ.22,325)

**முதல் மீது வட்டி:**

8. 1.4.2004 அன்று மஞ்சுளா, வெண்ணிலா ஆகியோர் முதல் முறையே ரூ.60,000, ரூ.40,000 முதலிட்டு தொழில் தொடங்கினர். 1.7.2004 அன்று மஞ்சுளா ரூ.8,000



முதலிலிருந்து திரும்ப எடுத்துக்கொண்டார். 30.9.2004 அன்று வெண்ணிலா ரூ.10,000 கூடுதல் முதல் கொண்டு வந்தார். 2005 மார்ச் 31ஆம் நாளுடன் முடியும் ஆண்டின் முதல் மீதான வட்டி 5% கணக்கிடுக.

(விடை: முதல் மீது வட்டி: மஞ்சுளா ரூ.2,700; வெண்ணிலா ரூ.2,750)

9. 1.4.2004 அன்று பிரின்ஸ், குயின், கிங் ஆகியோரின் முதல் முறையே ரூ.80,000, ரூ.60,000, ரூ.40,000. 30.9.2004 அன்று குயின் என்பவர் முதலிலிருந்து ரூ.8,000 எடுத்துக் கொண்டார். 31.12.2004 அன்று கிங் என்பவர் ரூ.12,000 மேலும் முதல் கொண்டு வந்தார். 2005 மார்ச் 31ஆம் நாளோடு முடிவடையும் ஆண்டிற்கு முதல் மீது வட்டி 6% கணக்கிடுக.

(விடை: முதல் மீது வட்டி: பிரின்ஸ் ரூ.4,800; குயின் ரூ.3,360; கிங் ரூ.2,580)

10. X, Y எனும் கூட்டாளிகளின் 1.1.2000 அன்றைய முதல் முறையே ரூ.80,000, ரூ.40,000. 30.6.2000 அன்று X என்பவர் கூடுதல் முதலாக ரூ.10,000 வைத்தார். Y என்பவர் 1.10.2000 அன்று ரூ.5,000 திரும்ப எடுத்துக் கொண்டார். 2000 ஆம் ஆண்டின் முதல் மீது வட்டி 5% கணக்கிடுக.

(அக்டோபர் 2002)

(விடை: முதல் மீது வட்டி: X ரூ.4250; Y ரூ.1,937.50)

**எடுப்புகள் மீது வட்டி:**

11. சுந்தர், சண்முகம் எனும் இரு கூட்டாளிகள் சமமாக இலாப நட்டங்களைப் பகிர்ந்து வருகின்றனர். சுந்தர் ஆண்டு முழுவதும் ஒவ்வொரு மாத இறுதியிலும் ரூ.2000 எடுத்துக் கொள்கிறார். சண்முகம் என்பவர் ஒவ்வொரு மாதத் தொடக்கத்திலும் ரூ.4000 எடுத்துக் கொள்கிறார். ஆண்டுக்கு 10% எடுப்புகள் மீதான வட்டியைக் கணக்கிடுக.

(விடை: எடுப்புகள் மீதான வட்டி: சுந்தர் ரூ.1,100; சண்முகம் ரூ.2,600)

12. பசுபதி, வளையாபதி என்ற இருவரும் கூட்டாளிகள். பசுபதி 2004ஆம் ஆண்டில் ஒவ்வொரு மாத இடையிலும்

தொடர்ந்து ரூ.900 எடுத்துக்கொள்கிறார். வளையாபதி ஒவ்வொரு அரையாண்டு இறுதியிலும் ரூ.5,400 எடுத்துக் கொள்கிறார். ஆண்டுக்கு 5% எடுப்புகள் மீதான வட்டி கணக்கிடுக.

(விடை: எடுப்புகள் மீதான வட்டி: பசுபதி ரூ.270; வளையாபதி ரூ.135)

13. மாதேஸ்வரன், நாகராஜன் எனும் கூட்டாளிகள் 3:2 எனும் விகிதத்தில் இலாபம் பகிர்ந்து வந்தனர். மாதேஸ்வரன் ஒவ்வொரு மாத இறுதியிலும் ரூ.3,000 திரும்ப எடுத்துக் கொண்டார். நாகராஜன் 1.4.2004 அன்று ரூ.10,000, 30.6.2004 அன்று ரூ.6,000, 1.10.2004 அன்று ரூ.8,000 மற்றும் 30.11.2004 அன்று ரூ.4,000 எடுத்துக் கொள்கிறார். 6% எடுப்புகள் மீதான வட்டியைக் கணக்கிடுக.

(விடை: எடுப்புகள் மீதான வட்டி: மாதேஸ்வரன் ரூ.990; நாகராஜன் ரூ.770)

14. அரி, கார்த்தி எனும் இரு கூட்டாளிகள் சமமாக இலாப நட்டங்களைப் பகிர்ந்து வருகின்றனர். அரி ஒவ்வொரு மாத இறுதியிலும் ரூ.400 தொடர்ந்து எடுத்துக் கொள்கிறார். கார்த்தி ஒவ்வொரு மாதத் தொடக்கத்திலும் ரூ.800 எடுத்துக் கொள்கிறார். எடுப்புகள் மீதான வட்டி 10% கணக்கிடுக.

(மார்ச் 2003)

(விடை: எடுப்புகள் மீதான வட்டி: அரி ரூ.100; கார்த்தி ரூ.520)

**நற்பெயர் மதிப்பிடுதல்:**

15. நிறுவனத்தின் நற்பெயர் கடந்த ஐந்து ஆண்டு சராசரி இலாபத்தின் மூன்று ஆண்டு கொள்முதல் என்று மதிப்பிடப்படுகிறது. கடந்த ஐந்து ஆண்டுகளின் இலாபங்கள்:

2000 – ரூ.4,200; 2001 – ரூ.4,500; 2002 – ரூ.4,700; 2003 – 4,600; 2004 – ரூ.5,000.

(விடை: நற்பெயர் ரூ.13,800)

16. நற்பெயரின் மதிப்பு கடந்த நான்கு ஆண்டுகளின் சராசரி இலாபத்தில் இரண்டு ஆண்டு கொள்முதல் எனக் கொண்டு கணக்கிடுக. கடந்த நான்கு ஆண்டுகளின் இலாபங்கள்:

முதல் ஆண்டு ரூ.10,000 (நட்டம்);

இரண்டாம் ஆண்டு இலாபம் ரூ.26,000;

மூன்றாம் ஆண்டு இலாபம் ரூ.34,000;

நான்காம் ஆண்டு இலாபம் ரூ.50,000.

(விடை: நற்பெயர் ரூ.50,000)

17. நற்பெயர் கடந்த நான்கு ஆண்டுகளின் சராசரி இலாபத்தில் மூன்று ஆண்டு கொள்முதல் எனக் கொண்டு கணக்கிடப்படுகிறது. கடந்த நான்கு ஆண்டுகளின் இலாபங்கள் பின்வருமாறு.

2001 – ரூ12,000; 2002 – ரூ.18,000;

2003 – ரூ.16,000; 2004 – ரூ.14,000;

நற்பெயரின் மதிப்பைக் கணக்கிடுக.

(விடை: நற்பெயர் ரூ.45,000)

18. G, P, S எனும் கூட்டாளிகள் 3:2:1 எனும் விகிதத்தில் இலாப நட்டங்களைப் பகிர்ந்து வருகின்றனர். G என்பவரின் விலகலின் பொழுது, நற்பெயர் கடந்த நான்கு ஆண்டுகளின் சராசரி இலாபத்தில் இரண்டு ஆண்டு கொள்முதல் எனக் கொண்டு மதிப்பிடப்படுகிறது.

முதலாண்டு நட்டம் ரூ.6,000; இரண்டாம் ஆண்டு இலாபம் ரூ.10,000; மூன்றாம் ஆண்டு இலாபம் ரூ.17,000; நான்காம் ஆண்டு இலாபம் ரூ.15,000. உரிய குறிப்பேட்டுப் பதிவு தருக..

(அக்டோபர் 2002) (விடை: நற்பெயர் ரூ.18,000)

19. கடந்த நான்கு ஆண்டுகளின் சராசரி இலாபத்தில் இரண்டு ஆண்டு கொள்முதல் எனக்கொண்டு நற்பெயர் கணக்கிடப்படுகிறது. நான்கு ஆண்டுகளின் இலாப நட்டங்கள் பின் வருமாறு.

| | | ரூ. | | | ரூ. |
|---|---|---|---|---|---|
| 1996 | இலாபம் | 20,000 | 1997 | இலாபம் | 30,000 |
| 1998 | நட்டம் | 6,000 | 1999 | இலாபம் | 16,000 |

(ஜுன் 2003) (விடை: நற்பெயர் ரூ.30,000)

20. ஒரு நிறுவனம் கடந்த மூன்று ஆண்டுகளில் கீழ்க்கண்டவாறு நிகர இலாபங்களை ஈட்டியுள்ளது.

| | ரூ. |
|---|---|
| முதல் ஆண்டு | 36,000 |
| இரண்டாம் ஆண்டு | 40,000 |
| மூன்றாம் ஆண்டு | 44,000 |

நிறுவனத்தின் பயன்படுத்தப்பட்ட முதல் ரூ.1,20,000. நியாயமான முதல் மீதான வருமானம் 10%.

உயர் இலாபத்தின் மூன்று ஆண்டு கொள்முதல் எனக் கொண்டு நற்பெயரைக் கணக்கிடுக.

(விடை: நற்பெயர் ரூ.84,000)

21. பின்வரும் செய்திகளைக் கொண்டு, உயர் இலாபத்தின் மூன்று ஆண்டுக் கொள்முதல் எனக்கொண்டு நற்பெயரின் மதிப்பைக் கணக்கிடுக.

அ) தொழிலின் பயன்படுத்தப்பட்ட சராசரி முதல் ரூ.6,00,000.

ஆ) கடந்த மூன்று ஆண்டுகளில் நிறுவனத்தின் நிகர இலாபங்கள்: ரூ.1,07,600, ரூ.90,700, ரூ.1,12,500.

இ) முதல் மீது எதிர்பார்க்கும் வட்டி 12%

ஈ) கூட்டாளிகளின் ஊதியம் ஆண்டுக்கு ரூ.12,000.

(விடை: நற்பெயர் ரூ.58,800)

22. ஒரு நிறுவனத்தின் ஆண்டுதோறும் எதிர்பார்க்கும் சராசரி நிகர இலாபம் ரூ.54,000. தொழிலில் பயன்படுத்தப்பட்டுள்ள சராசரி முதல் ரூ.3,00,000. தொழிலில் போட்டுள்ள முதல் மீது எதிர்பார்க்கும் வட்டி 10%. கூட்டாளிகளின் ஊதியம் ஆண்டுக்கு ரூ.9,000 என நிர்ணயிக்கப்பட்டுள்ளது.

உயர் இலாபத்தின் இரண்டு ஆண்டு கொள்முதல் என்ற அடிப்படையில் நற்பெயரின் மதிப்பைக் கணக்கிடுக.

(விடை: நற்பெயர் ரூ.30,000)

## அத்தியாயம் – 7

# கூட்டாண்மைக் கணக்குகள் - சேர்ப்பு

## (PARTNERSHIP ACCOUNTS - ADMISSION)

---

**கற்றல் நோக்கங்கள்**

இந்த அத்தியாயத்தைக் கற்றபின், நீங்கள்

- ➢ கூட்டாளி சேர்ப்பின் தேவையைப் புரிந்து கொள்ளலாம்.
- ➢ புதிய இலாப விகிதத்தையும், தியாக விகிதத்தையும் கணக்கிடலாம்.
- ➢ சொத்துகள், பொறுப்புகள் மறுமதிப்பீடு செய்வதைப் புரிந்து கொள்ளலாம்.
- ➢ குவிந்த காப்புகள், பகிர்ந்துதரா இலாபம் அல்லது நட்டம் பகிர்ந்து கொள்வதின் அவசியத்தைப் புரிந்து கொள்ளலாம்.
- ➢ நற்பெயர் குறித்த கணக்குப்பதிவினைத் தெரிந்து கொள்ளலாம்.
- ➢ மறுமதிப்பீட்டுக் கணக்கு, முதல் கணக்குகள் மற்றும் புதிய நிறுவனத்தின் இருப்புநிலைக் குறிப்பு ஆகியவற்றைத் தயாரிக்கலாம்.

---

ஒரு கூட்டாண்மை நிறுவனம் நிதிவளத்தைப் பெருக்கிக் கொள்வதற்காகவும், நிர்வாகத்திறனை அதிகப்படுத்திக் கொள்வதற்காகவும் ஒரு புதிய கூட்டாளியைச் சேர்க்க

முடிவெடுக்கலாம். ஒரு கூட்டாளியைச் சேர்ப்பது நிறுவனத்தை மாற்றியமைக்கும் வழிகளில் ஒன்று ஆகும். இந்தியக் கூட்டாண்மைச் சட்டம் 1932, பிரிவு 31 (1)–ன் படி, நிறுவனத்தில் இருக்கும் அனைத்துக் கூட்டாளிகளின் விருப்பத்துடன்தான் ஒரு புதிய நபரைச் சேர்க்க முடியும். நிறுவனத்தில் சேர்க்கப்படும் நபர் உள்வரும் கூட்டாளி (incoming partner) அல்லது புதிய கூட்டாளி (new partner) என்று அழைக்கப்படுகிறார். ஒரு புதிய கூட்டாளியைச் சேர்க்கும் பொழுது, தற்போதைய கூட்டாண்மை முடிவுக்கு வந்து புதிய கூட்டாண்மை உருவாகிறது. அதாவது, புதிய கூட்டாண்மை நிறுவனம் ஒரு புதிய கூட்டாண்மை ஒப்பந்தத்தின் மூலம் மாற்றியமைக்கப் படுகிறது.

கூட்டாண்மை நிறுவனத்தில் ஒரு கூட்டாளி சேர்க்கப்படும்பொழுது, அவர் இரண்டு உரிமைகளைப் பெறுகிறார்.

1. கூட்டாண்மை நிறுவனத்தின் சொத்துகளில் பங்கெடுக்கும் உரிமை
2. கூட்டாண்மை நிறுவனத்தின் வருங்கால இலாபங்களில் பங்கெடுக்கும் உரிமை.

கூட்டாண்மைச் சொத்துக்களில் பங்கெடுப்பதற்கான உரிமையைப் பெறுவதற்காக புதிய கூட்டாளி கொண்டுவரும் தொகை அவரின் முதல் என அழைக்கப்படுகிறது. அது அவரின் முதல் கணக்கில் வரவு வைக்கப்படும். எதிர்கால இலாபங்களில் பங்கெடுக்கும் உரிமைபெற புதிய கூட்டாளி பழைய கூட்டாளிகளுக்கு வழங்கும் தொகை நற்பெயர் (Goodwill) என்று அழைக்கப்படுகிறது.

## 7.1 சரிக்கட்டுதல்கள்

கூட்டாளியைச் சேர்க்கும்பொழுது, கீழ்க்காணும் சரிக்கட்டுதல்கள் அத்தியாவசியமாகக் கருதப்படுகின்றன.

1. புதிய கூட்டாளியின் முதல் தொகையைப் பதிவு செய்தல்



2. புதிய இலாப விகிதம் மற்றும் தியாக விகிதத்தைக் கணக்கிடுதல்
3. சொத்துகள், பொறுப்புகளை மறுமதிப்பீடு செய்தல்
4. பகிர்ந்துதரா இலாப நட்டத்தை மாற்றுதல்
5. குவிந்த காப்புகளை மாற்றுதல்
6. நற்பெயர் குறித்து ஆவன செய்தல்

### 7.1.1 புதிய கூட்டாளியின் முதல் தொகையைப் பதிவுசெய்தல் (Recording the Capital of a new partner)

கூட்டாண்மையில் சேரும் புதிய கூட்டாளி முதல் கொண்டு வந்தே ஆகவேண்டும் என்ற கட்டாயமில்லை. அவருடைய தனித்திறமை, வல்லமை, புகழ் இவற்றைக் கருதி, கூட்டாளியாகச் சேர்க்கலாம். ஆயினும், பொதுவாக, புதிய கூட்டாளி முதல் கொண்டுவருவது வழக்கம். அனைத்து பழைய கூட்டாளிகளின் விருப்பத்துடன், புதிய கூட்டாளி கொண்டு வரும் முதல் – ரொக்கமாகவோ அல்லது அறைகலன், சரக்கு போன்ற சொத்துக்களாகவோ அல்லது இரண்டும் சேர்ந்தும் இருக்கலாம்.

**குறிப்பேட்டுப் பதிவு:**

| | | | |
|---|---|---|---|
| ரொக்கக் க/கு | ப | ... | |
| சரக்கிருப்பு க/கு | ப | ... | |
| அறைகலன் க/கு | ப | ... | |
| புதிய கூட்டாளியின் முதல் க/கு | | | ... |

**எடுத்துக்காட்டு : 1**

ஆனந்தன், பலராமன் எனும் கூட்டாளிகள் முறையே ரூ.70,000, ரூ.50,000 முதலிட்டு தொழில் புரிகின்றனர். அவர்கள் சந்திரன் என்பவரைச் சேர்த்துக்கொள்ள முடிவு செய்தனர். சந்திரன் கொண்டு வந்த முதல் ரூ.40,000. சந்திரன் கொண்டு வந்த முதலுக்கு குறிப்பேட்டுப் பதிவு தருக.

**விடை:**

குறிப்பேட்டுப் பதிவு

| நாள் | விவரம் | பே.ப.எ. | பற்று ரூ. | வரவு ரூ. |
|---|---|---|---|---|
| | ரொக்கக் க/கு ப | | 40,000 | |
| | சந்திரன் முதல் க/கு | | | 40,000 |
| | (சந்திரன் கொண்டு வந்த முதல்) | | | |

## 7.2 புதிய இலாப விகிதம் மற்றும் தியாக விகிதத்தைக் கணக்கிடுதல் (Calculation of New Profit sharing ratio and sacrificing ratio):

புதிய கூட்டாளியைச் சேர்க்கும்பொழுது, பழைய கூட்டாளிகளிடமிருந்து, அவர்களுடைய இலாபத்தில் பங்கினைப் பெறுகிறார். இதன்மூலம் பழைய கூட்டாளிகளின் இலாபப் பங்கு குறையும். எனவே புதிய இலாபப் பகிர்வு விகிதம் கணக்கிடப்படவேண்டும்.

**புதிய இலாபப் பகிர்வு விகிதம் :**

வருங்காலத்தில் அனைத்துக் கூட்டாளிகளும் (புதிய கூட்டாளி உள்பட) இலாப நட்டங்களைப் பகிர்ந்துகொள்ளும் விகிதமே புதிய இலாபப் பகிர்வு விகிதம் எனப்படும்.

புதிய இலாபப் பகிர்வு விகித நிர்ணயம் புதிய கூட்டாளி பழைய கூட்டாளிகளிடமிருந்து பெறக்கூடிய இலாபப் பங்கினை சார்ந்துள்ளது.

புதிய பங்கு = பழைய பங்கு — தியாகம்

**தியாக விகிதம்** (Sacrificing Ratio) :

பழைய கூட்டாளிகள் புதிய கூட்டாளிக்கு அவர்கள் இலாபத்தின் ஒரு பகுதியினை வழங்க ஒப்புக் கொண்ட விகிதமே தியாக விகிதம் எனப்படும்.

தியாகம் = பழைய பங்கு — புதிய பங்கு



தியாக விகிதம் = பழைய இலாபப் பகிர்வு விகிதம் — புதிய இலாபப் பகிர்வு விகிதம்

இந்த விகிதம் கணக்கிடுவதின் நோக்கம் புதிய கூட்டாளி பழைய கூட்டாளிகளுக்கு அவர்கள் விட்டுக் கொடுக்கும் தியாகத்திற்கு ஈடுகட்டும் தொகையை, (நற்பெயர்) நிர்ணயிக்க உதவுகிறது.

தியாக விகிதங்களைப் பொறுத்து, கீழ்க்காணும் பல்வேறு சூழல்களுக்கேற்றவாறு புதிய இலாபப் பகிர்வு விகிதம் கணக்கிடலாம்.

1. புதிய கூட்டாளியின், இலாபப் பங்கு குறிப்பிடப்பட்டிருந்து
   - அ) பழைய கூட்டாளிகளின் தியாகம் குறிப்பிடாமல் இருத்தல் (தியாகம் பழைய இலாபப் பகிர்வு விகிதத்தின்படி)
   - ஆ) பழைய கூட்டாளிகளின் தியாகம் சமமில்லாதிருத்தல் (சமனற்ற தியாகம்)
   - இ) பழைய கூட்டாளிகளின் தியாகம் சமமாக இருத்தல் (சமமான தியாகம்)
   - ஈ) ஏதேனும் ஒரு பழைய கூட்டாளி முழுமையாக தியாகம் செய்தல்.
2. புதிய கூட்டாளியின் புதிய இலாபப் பங்கு குறிப்பிடாத பொழுது – பழைய கூட்டாளிகளின் தியாகம் மட்டும் குறிப்பிட்டிருத்தல்
3. புதிய இலாப விகிதம் குறிப்பிட்டிருத்தல்

**1. புதிய கூட்டாளியின் புதிய இலாபப் பங்கு குறிப்பிடப்பட்டிருந்து**

**அ) பழைய கூட்டாளியின் தியாகம் குறிப்பிடாத பொழுது (பழைய இலாபப் பகிர்வு விகிதத்தில் தியாகம்)**

**எடுத்துக்காட்டு 2:**

A, B என்ற கூட்டாளிகள் முறையே 3:2 என்ற விகிதத்தில் இலாபம் பகிர்ந்து கொள்கின்றனர். அவகள் C என்பவரை

*கூட்டாண்மையில் 1/5 பங்கு இலாபப்பங்கு தர இசைந்து சேர்த்துக் கொண்டனர். அவர்களுடைய புதிய இலாபப் பகிர்வு விகிதம் மற்றும் தியாக விகிதம் கணக்கிடுக.*

**விடை:**

**அ. புதிய இலாபப் பகிர்வு விகிதம்:**

மொத்த இலாபம் = 1 எனக் கொள்க.

C யின் பங்கு $= \frac{1}{5}$

A மற்றும் Bயின் மீதமுள்ள பகுதி $= 1 - \frac{1}{5} = \frac{5-1}{5} = \frac{4}{5}$

| | A | : | B | : | C |
|---|---|---|---|---|---|
| பழைய இலாபப் பகிர்வு விகிதம் | = 3 | : | 2 | | |
| பழைய பங்கு | $= \frac{3}{5}$ | : | $\frac{2}{5}$ | | |
| புதிய பங்கு | $= \frac{4}{5} \times \frac{3}{5}$ | : | $\frac{4}{5} \times \frac{2}{5}$ | : | $\frac{1}{5}$ |
| | $= \frac{12}{25}$ | : | $\frac{8}{25}$ | : | $\frac{5}{25}$ |
| புதிய இலாபப் பகிர்வு விகிதம் | = 12 | : | 8 | : | 5 |



**ஆ. தியாக விகிதம்:**

தியாகம் = பழைய பங்கு – புதிய பங்கு

Aயின் தியாகம் $= \frac{3}{5} - \frac{12}{25}$

$= \frac{15-12}{25} = \frac{3}{25}$

Bயின் தியாகம் $= \frac{2}{5} - \frac{8}{25}$

$= \frac{10-8}{25} = \frac{2}{25}$

தியாக விகிதம் $= \frac{3}{25} : \frac{2}{25}$

$= 3 : 2$

**ஆ) பழைய கூட்டாளிகளின் சமனற்ற தியாகம்** (Unequal sacrifice):

**எடுத்துக்காட்டு : 3**

*இராதை, கோதை எனும் கூட்டாளிகள் முறையே 3:2 என்ற விகிதத்தில் இலாபம் பகிர்ந்து வருகின்றனர். அவர்கள் கண்மணி என்பவரை 1/5 பங்கிற்குக் கூட்டாளியாகச் சேர்த்தனர். கண்மணி இராதையிடமிருந்து 3/20 பங்கும், கோதையிடமிருந்து 1/20 பங்கும் பெறுகிறார். புதிய இலாபப் பகிர்வு விகிதத்தையும் பழைய கூட்டாளிகளின் தியாக விகிதத்தையும் கணக்கிடுக.*

**விடை:**

**அ) புதிய இலாபப் பகிர்வு விகிதம் :**

இராதை : கோதை : கண்மணி

பழைய இலாபப் பகிர்வு விகிதம் $= 3 : 2$

பழைய பங்கு $= \frac{3}{5} : \frac{2}{5}$

தியாகம் $= \frac{3}{20} : \frac{1}{20}$

புதிய பங்கு (பழைய பங்கு − தியாகம்) $= \frac{3}{5} - \frac{3}{20} : \frac{2}{5} - \frac{1}{20} : \frac{1}{5}$

$= \frac{12-3}{20} = \frac{9}{20} : \frac{8-1}{20} = \frac{7}{20} : \frac{1}{5}$

$= \frac{9}{20} : \frac{7}{20} : \frac{4}{20}$

$= \frac{9 : 7 : 4}{20}$

புதிய இலாபப் பகிர்வு விகிதம் $= 9 : 7 : 4$



**ஆ) தியாக விகிதம் :**

இராதை : கோதை

தியாகம் $= \frac{3}{20} : \frac{1}{20}$

தியாக விகிதம் $= 3 : 1$

**இ) பழைய கூட்டாளிகளின் சமமான தியாகம்** (Equal sacrifice) :

**எடுத்துக்காட்டு : 4**

P, Q என்ற கூட்டாளிகள் முறையே 3:2 எனும் விகிதத்தில் இலாபம் பகிர்ந்து வருகின்றனர். அவர்கள் R என்பவரை 1/5 பங்குக்கு இருவரும் சமமாகத் தியாகம் செய்து சேர்த்துக் கொள்கின்றனர். அவர்களுடைய புதிய இலாபப் பகிர்வு விகிதம் மற்றும் தியாக விகிதம் கணக்கிடுக.

**விடை:**

**அ) புதிய இலாபப் பகிர்வு விகிதம் :**

P : Q : R

பழைய இலாபப் பகிர்வு விகிதம் $= 3 : 2$

பழைய பங்கு $= \frac{3}{5} : \frac{2}{5}$

தியாகம் $= \frac{1}{5} \times \frac{1}{2} : \frac{1}{5} \times \frac{1}{2}$

$= \frac{1}{10} : \frac{1}{10}$

புதிய பங்கு (பழைய பங்கு − தியாகம்) $= \frac{3}{5} - \frac{1}{10} : \frac{2}{5} - \frac{1}{10} : \frac{1}{5}$

$$= \frac{6-1}{10} = \frac{5}{10} : \frac{4-1}{10} = \frac{3}{10} : \frac{1}{5}$$

$$= \frac{5}{10} : \frac{3}{10} : \frac{2}{10}$$

*புதிய இலாபப் பகிர்வு விகிதம்* = 5 : 3 : 2

**ஆ) தியாக விகிதம்**

| | P | : | Q |
|---|---|---|---|
| *தியாகம்* = | $\frac{1}{10}$ | : | $\frac{1}{10}$ |

*தியாக விகிதம்* = 1 : 1

**ஈ) ஏதேனும் ஒரு கூட்டாளியின் முழுத் தியாகம் :**
(Entire sacrifice by one partner)

**எடுத்துக்காட்டு : 5**

G, H, *என்ற கூட்டாளிகள் முறையே 3:2 எனும் விகிதத்தில் இலாபம் பகிர்ந்து கொள்கின்றனர். அவர்கள்* I *என்பவரை 1/5 பங்குக்கு சேர்ப்பது எனவும் இப்பங்கு முழுவதையும்* G *என்பவரிடம் பெறுவது எனவும் முடிவு செய்கின்றனர். அவர்களுடைய புதிய இலாபப் பகிர்வு விகிதம் மற்றும் தியாக விகிதம் பகிர்வு கணக்கிடுக.*

**விடை:**

**அ) புதிய இலாபப் பகிர்வு விகிதம்:**

| | G | : | H | : | I |
|---|---|---|---|---|---|
| *பழைய விகிதம்* = | 3 | : | 2 | | |



*பழைய பங்கு* $= \frac{3}{5} : \frac{2}{5}$

*தியாகம்* $= \frac{1}{5}$

*புதிய பங்கு* $= \frac{3}{5} - \frac{1}{5} : \frac{2}{5} : \frac{1}{5}$

$= \frac{2}{5} : \frac{2}{5} : \frac{1}{5}$

*புதிய இலாபப் பகிர்வு விகிதம்* = 2 : 2 : 1

**ஆ) தியாக விகிதம் :**

G*யின் தியாகம்* $= \frac{1}{5}$

*ஒரு கூட்டாளி மட்டும் தியாகம் செய்துள்ளார். மற்ற கூட்டாளிக்கு எந்த இழப்பும் இல்லை.*

**2. புதிய கூட்டாளியின் புதிய இலாபப் பங்கு குறிப்பிடாமல் பழைய கூட்டாளிகளின் தியாகம் மட்டும் தரும்பொழுது**

**எடுத்துக்காட்டு : 6**

S, T *என்ற கூட்டாளிகள் முறையே 3:2 எனும் விகிதத்தில் இலாபம் பகிர்ந்து வருகின்றனர். அவர்கள்* U *என்பவரை புதிய கூட்டாளியாகச் சேர்த்துக் கொள்ள முடிவு செய்கின்றனர்.* S *என்பவர் தன் பங்கில் 1/5 பங்கும்,* T *என்பவர் தன் பங்கில் 2/5 பங்கும் தியாகம் செய்கின்றனர். அவர்களுடைய புதிய இலாபப் பகிர்வு விகிதம் மற்றும் தியாக விகிதம் கணக்கிடுக.*

**விடை:**

**அ) புதிய இலாப விகிதம் :**

| | S | : | T | : | U |
|---|---|---|---|---|---|
| பழைய இலாபப் பகிர்வு விகிதம் = | 3 | : | 2 | | |

பழைய பங்கு $= \frac{3}{5} : \frac{2}{5}$

தியாகம் $= \frac{3}{5} \times \frac{1}{5} : \frac{2}{5} \times \frac{2}{5}$

$= \frac{3}{25} : \frac{4}{25}$

புதிய பங்கு (பழைய பங்கு − தியாகம்) $= \frac{3}{5} - \frac{3}{25} : \frac{2}{5} - \frac{4}{25} : \frac{3}{25} + \frac{4}{25}$

$= \frac{15-3}{25} = \frac{12}{25} : \frac{10-4}{25} = \frac{6}{25} : \frac{7}{25}$

$= \frac{12}{25} : \frac{6}{25} : \frac{7}{25}$

புதிய இலாபப் பகிர்வு விகிதம் $= 12 : 6 : 7$

**ஆ) தியாக விகிதம் :**

S : T

தியாகம் $= \frac{3}{25} : \frac{4}{25}$

தியாக விகிதம் $= 3 : 4$



**3. புதிய இலாப விகிதம் தரப்பட்டிருத்தல்:**

**எடுத்துக்காட்டு : 7**

X, Y கூட்டாளிகள் முறையே 3:2 எனும் விகிதத்தில் இலாபம் பகிர்ந்து கொள்கின்றனர். அவர்கள் Z என்பவரை புதிய கூட்டாளியாகச் சேர்த்துக் கொள்ள முடிவு செய்தனர். அவர்களின் புதிய இலாபப் பகிர்வு விகிதம் 4:3:2 எனும் விகிதத்தில் நிர்ணயிக்கப்பட்டுள்ளது. தியாக விகிதத்தைக் கணக்கிடுக.

**விடை:**

| | X | : | Y | : | Z |
|---|---|---|---|---|---|
| பழைய இலாபப் பகிர்வு விகிதம் = | 3 | : | 2 | | |

பழைய பங்கு $= \frac{3}{5} : \frac{2}{5}$

புதிய இலாபப் பகிர்வு விகிதம் $= 4 : 3 : 2$

புதிய பங்கு $= \frac{4}{9} : \frac{3}{9} : \frac{2}{9}$

தியாகம் (பழைய பங்கு − தியாகம்) $= \frac{3}{5} - \frac{4}{9} : \frac{2}{5} - \frac{3}{9}$

$= \frac{27-20}{45} = \frac{7}{45} : \frac{18-15}{45} = \frac{3}{45}$

$= \frac{7}{45} : \frac{3}{45}$

தியாக விகிதம் $= 7 : 3$

## 7.3 சொத்துகளையும், பொறுப்புகளையும் மறுமதிப்பீடு செய்தல் (Revaluation of Assets and Liabilities)

*மறுமதிப்பீடு என்பது கூட்டாண்மை நிறுவனம் மாற்றியமைக்கப்படும் பொழுது அதன் சொத்துகளையும் பொறுப்புகளையும் மதிப்பீடு செய்வதாகும்.*

*ஒரு கூட்டாளியைச் சேர்க்கும்பொழுது, சொத்துக்கள் மற்றும் பொறுப்புக்களை மறு மதிப்பீடு செய்து, அதன்மூலம் கிடைக்கும் இலாப, நட்டத்தை பழைய கூட்டாளிகளின் முதல் கணக்குகளில் பழைய இலாபப் பகிர்வு விகிதத்தில் சரிக்கட்டப்பட வேண்டும். இதனால் புதிய கூட்டாளிக்கு எந்தவித பாதிப்பும் இல்லை. இதற்காக மறுமதிப்பீட்டுக் கணக்கு தொடங்கப்பட வேண்டும்.*

*மறுமதிப்பீட்டுக் கணக்கில் கீழ்க்கண்ட இலாப இனங்கள் வரவு வைக்கப்படுகின்றன.*

1) *சொத்துகளின் மதிப்பு அதிகரித்தல்*
2) *பொறுப்புகளின் தொகை குறைதல்*
3) *பதிவு பெறாமலிருந்த சொத்துகளைப் பதிவு செய்தல்*

*மறுமதிப்பீட்டுக் கணக்கில் கீழ்க்காணும் நட்ட இனங்கள் பற்று வைக்கப்படுகின்றன.*

1) *சொத்துக்களின் மதிப்பு குறைதல்*
2) *பொறுப்புக்களின் மதிப்பு அதிகரித்தல்*
3) *பதிவுறா பொறுப்புகளை பதிவு செய்தல்*
4) *புதிய பொறுப்பை கணக்கில் கொண்டுவருதல்*

*மறுமதிப்பீட்டுக் கணக்கின் இருப்பு அதாவது மறுமதிப்பீட்டின் இலாபம் அல்லது நட்டம் பழைய கூட்டாளிகளின் முதல் கணக்குகளுக்கு பழைய இலாப விகிதத்தில் மாற்றப்படுகின்றன. புதிய நிறுவனத்தின் இருப்பு நிலைக் குறிப்பில் சொத்துகளும் பொறுப்புகளும் நடப்பு மதிப்பில் தோன்றும்.*



**சொத்துக்கள் மற்றும் பொறுப்புக்கள் மறுமதிப்பீட்டைப் பதிவு செய்வதற்கான கணக்கியல் பதிவுகள்**

**அ. சொத்தின் மதிப்பு அதிகரிக்கும் பொழுது :**

| | | | |
|---|---|---|---|
| *குறிப்பிட்ட சொத்து க/கு* | *ப* | ..... | |
| *மறுமதிப்பீட்டுக் க/கு* | | | ..... |

**ஆ. சொத்தின் மதிப்பு குறையும் பொழுது :**

| | | | |
|---|---|---|---|
| *மறுமதிப்பீட்டுக் க/கு* | *ப* | ..... | |
| *குறிப்பிட்ட சொத்து க/கு* | | | ..... |

**இ. பொறுப்பின் தொகை கூடும்பொழுது :**

| | | | |
|---|---|---|---|
| *மறுமதிப்பீட்டுக் க/கு* | *ப* | ..... | |
| *குறிப்பிட்ட பொறுப்பு க/கு* | | | ..... |

**ஈ. பொறுப்பின் தொகை குறையும்பொழுது :**

| | | | |
|---|---|---|---|
| *குறிப்பிட்ட பொறுப்பு க/கு* | *ப* | ..... | |
| *மறுமதிப்பீட்டுக் க/கு* | | | ..... |

**உ. பதிவு செய்யாத சொத்து பதிவு செய்யப்படும் பொழுது :**

| | | | |
|---|---|---|---|
| *பதிவு செய்யப்படாத சொத்துக் க/கு* | *ப* | ..... | |
| *மறுமதிப்பீட்டுக் க/கு* | | | ..... |

**ஊ. பதிவு செய்யாத பொறுப்பு பதிவு செய்யப்படும் பொழுது :**

| | | | |
|---|---|---|---|
| *மறு மதிப்பீட்டுக் க/கு* | *ப* | ..... | |
| *பதிவு செய்யப்படாத பொறுப்புக் க/கு* | | | ..... |

**எ. புதிய பொறுப்பு பதிவு செய்யப்படும் பொழுது :**

| | | | |
|---|---|---|---|
| *மறுமதிப்பீட்டுக் க/கு* | *ப* | ..... | |
| *புதிய பொறுப்பு க/கு* | | | ..... |

**ஏ. மறுமதிப்பீட்டின் இருப்பு மாற்றப்படுவது:**

i) *பற்றுப்பக்கத்தைவிட வரவுப் பக்கம் அதிகமானால் (இலாபம்)*

மறுமதிப்பீட்டுக் க/கு ப .....
பழைய கூட்டாளிகளின் முதல் க/கு .....

ii) வரவு பக்கத்தைவிட பற்றுப்பக்கம் அதிகமானால் (நட்டம்)

பழைய கூட்டாளிகளின் முதல் க/கு ப .....
மறுமதிப்பீட்டுக் க/கு .....

சுருக்கமாக, மூன்று கூட்டுப் பதிவுகள் செய்தால் போதுமானது.

1. **இலாப இனங்கள்:** i) சொத்துகளின் மதிப்பு கூடுதல், ii) பதிவு செய்யப்படாத சொத்துக்களைப் பதிதல், iii) பொறுப்புகளின் மதிப்பு குறைதல்.

அந்தந்த சொத்துகள் க/கு ப .....
அந்தந்த பொறுப்புகள் க/கு ப .....
மறுமதிப்பீட்டுக் க/கு .....

2. **நட்ட இனங்கள்:** i) சொத்துகளின் மதிப்பு குறைதல், ii) பொறுப்புகளின் மதிப்பு கூடுதல், iii) பதிவு செய்யப்படாத பொறுப்புகளைப் பதிதல், iv) புதிய பொறுப்புகள் உருவாகுதல்.

மறுமதிப்பீட்டுக் க/கு ப .....
அந்தந்த சொத்துகள் க/கு .....
அந்தந்த பொறுப்புகள் க/கு .....

3. **மறுமதிப்பீட்டின் இலாபம் அல்லது நட்டத்தை மாற்றுதல் :**

**அ) இலாபமாயின்:**

மறுமதிப்பீட்டுக் க/கு ப .....
பழைய கூட்டாளிகளின் முதல் க/கு .....



**ஆ) நட்டமாயின்:**

பழைய கூட்டாளிகளின் முதல் க/கு ப .....
மறுமதிப்பீட்டுக் க/கு .....

**படிவம்:**

ப **மறுமதிப்பீட்டுக் கணக்கு** வ

| விவரம் | ரூ. | விவரம் | ரூ. |
|---|---|---|---|
| சொத்துகள் (தனித்தனியாக) (குறைந்த மதிப்பு) | .... | சொத்துகள் (தனித்தனியாக) (அதிகரித்த மதிப்பு, பதிவுறாதது) | .... |
| பொறுப்புகள் (அதிகரித்த மதிப்பு, பதிவுறாதது, புதியது) | .... | பொறுப்புகள் (குறைந்த மதிப்பு) | .... |
| கூட்டாளிகளின் முதல் கணக்குகள் (மறுமதிப்பீட்டின் இலாபம்) | .... | கூட்டாளிகளின் முதல் கணக்குகள் (மறுமதிப்பீட்டின் நட்டம்) | .... |
| | .... | | .... |

**எடுத்துக்காட்டு : 8**

சங்கர், சலீம் என்ற கூட்டாளிகள் 3:2 எனும் விகிதத்தில் நிறுவனத்தின் இலாப நட்டத்தைப் பகிர்ந்து வந்தனர். 2005 மார்ச் 31ஆம் நாளைய இருப்புநிலைக் குறிப்பு பின்வருமாறு.

| பொறுப்புகள் | ரூ. | சொத்துகள் | ரூ. |
|---|---|---|---|
| பற்பல கடனீந்தோர் | 90,000 | ரொக்கம் | 5,000 |
| செலுத்தற்குரிய மாற்றுச் சீட்டுகள் | 25,000 | வங்கி | 40,000 |
| | | சரக்கிருப்பு | 60,000 |
| முதல் கணக்குகள்: | | அறைகலன் | 20,000 |
| சங்கர் 1,50,000 | | நிலம், கட்டடம் | 2,00,000 |
| சலீம் 1,20,000 | 2,70,000 | பற்பல கடனாளிகள் 62,000<br>கழிக்க: ஐயக்கடன் ஒதுக்கு 2,000 | 60,000 |
| | 3,85,000 | | 3,85,000 |

2005, ஏப்ரல் 1ஆம் நாளன்று அவர்கள் சாலமன் என்பவரை கீழ்க்காணும் சரிக்கட்டுதல்களுக்கு ஒப்புக்கொண்டு கூட்டாண்மையில் சேர்த்துக் கொண்டனர்.

1. சாலமன் ரூ.1,00,000 முதல் கொண்டு வருவது,
2. நிலம் கட்டடத்தின் மதிப்பு ரூ.20,000 அதிகரிப்பது,
3. சரக்கிருப்பு மற்றும் அறைகலன் முறையே ரூ.10,000, ரூ.4,000 தேய்மானம் அனுமதிப்பது,
4. கடனீந்தோரில் ரூ.15,000த்தை போக்கெழுதுவது,
5. ஐயக்கடன் ஒதுக்கை ரூ.1,000 அதிகரிப்பது.

குறிப்பேட்டுப் பதிவுகள் தந்து, மறுமதிப்பீட்டுக் கணக்கு, முதல் கணக்குகள், வங்கிக் கணக்கு மற்றும் புதிய நிறுவனத்தின் இருப்புநிலைக் குறிப்பைத் தயாரிக்க.

**விடை:**

**குறிப்பேட்டுப் பதிவுகள்**

| நாள் | விவரம் | பே.ப.எ | பற்று ரூ. | வரவு ரூ. |
|---|---|---|---|---|
| 2005 ஏப்ரல் 1 | நிலம், கட்டடக் க/கு ப | | 20,000 | |
| | பற்பல கடனீந்தோர் க/கு ப | | 15,000 | |
| | மறுமதிப்பீட்டுக் க/கு | | | 35,000 |
| | (இலாப இனங்கள் மறுமதிப் பீட்டுக் கணக்கில் வரவு செய்யப்படுதல்) | | | |
| ” | மறுமதிப்பீட்டுக் க/கு ப | | 15,000 | |
| | சரக்கிருப்பு க/கு | | | 10,000 |
| | அறைகலன் க/கு | | | 4,000 |
| | ஐயக்கடன் ஒதுக்கு க/கு | | | 1,000 |
| | (நட்ட இனங்கள் மறுமதிப் பீட்டுக் கணக்கில் பற்று செய்யப்படுதல்) | | | |
| ” | மறுமதிப்பீட்டுக் க/கு ப | | 20,000 | |
| | சங்கர் முதல் க/கு | | | 12,000 |
| | சலீம் முதல் க/கு | | | 8,000 |
| | (மறுமதிப்பீட்டின் இலாபம் பழைய கூட்டாளிகளின் முதல் கணக்குகளில் பழைய விகிதத்தில் மாற்றுதல்) | | | |
| ” | வங்கிக் க/கு ப | | 1,00,000 | |
| | சாலமன் முதல் க/கு | | | 1,00,000 |
| | (சாலமன் முதல் கொண்டு வந்தது) | | | |

ப **மறுமதிப்பீட்டுக் கணக்கு** வ

| விவரம் | ரூ. | விவரம் | ரூ. |
|---|---|---|---|
| சரக்கிருப்பு | 10,000 | நிலம், கட்டடம் | 20,000 |
| அறைகலன் | 4,000 | பற்பல கடனீந்தோர் | 15,000 |
| ஐயக்கடன் ஒதுக்கு | 1,000 | | |
| மறுமதிப்பீட்டின் இலாபம் மாற்றப்படுவது: | | | |
| சங்கர் முதல் க/கு 12,000 | | | |
| சலீம் முதல் க/கு 8,000 | 20,000 | | |
| | 35,000 | | 35,000 |

ப **முதல் கணக்குகள்** வ

| விவரம் | சங்கர் ரூ. | சலீம் ரூ. | சைமன் ரூ. | விவரம் | சங்கர் ரூ. | சலீம் ரூ. | சைமன் ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| இருப்பு கீ/இ | 1,62,000 | 1,28,000 | 1,00,000 | இருப்பு கீ/கொ | 1,50,000 | 1,20,000 | – – |
| | | | | வங்கி க/கு | – – | – – | 1,00,000 |
| | | | | மறுமதிப்பீட்டுக் க/கு | 12,000 | 8,000 | – – |
| | 1,62,000 | 1,28,000 | 1,00,000 | | 1,62,000 | 1,28,000 | 1,00,000 |

| ப | வங்கிக் கணக்கு | | வ |
|---|---|---|---|
| விவரம் | ரூ. | விவரம் | ரூ. |
| இருப்பு கீ/கொ | 40,000 | இருப்பு கீ/இ | 1,40,000 |
| சாலமன் முதல் க/கு | 1,00,000 | | |
| | 1,40,000 | | 1,40,000 |

**சங்கர், சலீம், சாலமன் ஆகியோரின் 2005 ஏப்ரல் 1–ம் நாளைய இருப்பு நிலைக் குறிப்பு**

| பொறுப்புகள் | ரூ. | சொத்துகள் | ரூ. |
|---|---|---|---|
| பற்பல கடனீந்தோர் | 75,000 | ரொக்கம் | 5,000 |
| செலுத்தற்குரிய மாற்றுச் | | வங்கி | 1,40,000 |
| சீட்டுகள் | 25,000 | சரக்கிருப்பு | 50,000 |
| முதல் கணக்குகள்: | | அறைகலன் | 16,000 |
| சங்கர் 1,62,000 | | நிலம், கட்டடம் | 2,20,000 |
| சலீம் 1,28,000 | | பற்பல கடனாளிகள் 62,000 | |
| சாலமன் 1,00,000 | 3,90,000 | கழிக்க: ஐயக்கடன் | |
| | | ஒதுக்கு 3,000 | 59,000 |
| | 4,90,000 | | 4,90,000 |

## எடுத்துக்காட்டு : 9

அமர், அக்பர் என்ற கூட்டாளிகள் 2:1 எனும் விகிதத்தில் கூட்டாண்மையில் இலாப நட்டத்தைப் பகிர்ந்து வந்தனர். அவர்களுடைய 2005 மார்ச் 31ஆம் நாளைய இருப்புநிலைக் குறிப்பு பின்வருமாறு:

| பொறுப்புகள் | ரூ. | சொத்துகள் | ரூ. |
|---|---|---|---|
| கடனீந்தோர் | 80,000 | ரொக்கம் | 10,000 |
| செலுத்தற்குரிய மாற்றுச் | | வங்கி | 70,000 |
| சீட்டுகள் | 40,000 | சரக்கிருப்பு | 80,000 |
| முதல் கணக்குகள்: | | பொறி, பொறித்தொகுதியும் | 1,00,000 |
| அமர் 2,70,000 | | நிலம், கட்டடம் | 3,00,000 |
| அக்பர் 2,10,000 | 4,80,000 | கடனாளிகள் | 40,000 |
| | 6,00,000 | | 6,00,000 |



2005 ஏப்ரல் 1ஆம் நாள், கீழ்க்காணும் சரிக்கட்டுதல்களுக்குட்பட்டு அந்தோணி என்பவரை சேர்த்துக்கொள்ள இசைந்தனர்.

1. அந்தோணி ரூ.1,50,000 முதல் கொண்டு வருவது; அவருக்கு வருங்கால இலாபத்தில் 1/5 பங்கு தருவது.
2. சரக்கிருப்பு மற்றும் பொறியும் பொறித் தொகுதியும் முறையே ரூ.6,000, ரூ.15,000 மதிப்பு குறைக்கப்படுவது.
3. ஏடுகளில் பதிவுறா முதலீடுகள் ரூ.15,000 கணக்குக்கு கொண்டு வருவது.
4. கடனாளிகள் மீது 5% ஐயக்கடன் ஒதுக்கு உருவாக்குவது.
5. கொடுபடா பழுதுபார்ப்புக் கட்டணம் ரூ.4,000 விடுபட்டதை கணக்கில் பதிவு செய்வது.

குறிப்பேட்டுப் பதிவுகள் தந்து, மறுமதிப்பீட்டுக் கணக்கு, முதல் கணக்குகள், வங்கிக் கணக்கு மற்றும் இருப்புநிலைக் குறிப்பு ஆகியவற்றைத் தயாரிக்க.

**விடை:**

**குறிப்பேட்டுப் பதிவுகள்**

| நாள் | விவரம் | பே.ப.எ. | பற்று ரூ. | வரவு ரூ. |
|---|---|---|---|---|
| 2005 ஏப்ரல் 1 | முதலீடுகள் க/கு ப | | 15,000 | |
| | மறுமதிப்பீட்டுக் க/கு | | | 15,000 |
| | (இலாப இனம் மறுமதிப்பீட்டுக் கணக்கிற்கு மாற்றுவது) | | | |
| „ | மறுமதிப்பீட்டுக் க/கு ப | | 27,000 | |
| | சரக்கிருப்பு க/கு | | | 6,000 |
| | பொறித்தொகுதி க/கு | | | 15,000 |
| | ஐயக்கடன் ஒதுக்கு க/கு | | | 2,000 |
| | கொடுபடா பழுது பார்ப்புக் க/கு | | | 4,000 |
| | (நட்ட இனம் மறுமதிப்பீட்டுக் கணக்கிற்கு மாற்றுவது) | | | |

| | | | | |
|---|---|---|---|---|
| 2005 ஏப்ரல் 1 | அமர் முதல் க/கு ப | | 8,000 | |
| | அக்பர் முதல் க/கு ப | | 4,000 | |
| | மறுமதிப்பீட்டுக் க/கு | | | 12,000 |
| | (மறுமதிப்பீட்டின் நட்டம் பழைய கூட்டாளிகளின் முதல் கணக்குகளுக்கு பழைய இலாப விகிதத்தில் மாற்றுவது) | | | |
| ” | வங்கி க/கு ப | | 1,50,000 | |
| | அந்தோணி முதல் க/கு | | | 1,50,000 |
| | (அந்தோணி முதல் கொண்டு வந்தது) | | | |

ப **மறுமதிப்பீட்டுக் கணக்கு** வ

| விவரம் | ரூ. | விவரம் | ரூ. |
|---|---|---|---|
| சரக்கிருப்பு | 6,000 | முதலீடுகள் | 15,000 |
| பொறியும், தொகுதியும் | 15,000 | மறுமதிப்பீட்டின் நட்டம் மாற்றுவது | |
| ஐயக்கடன் ஒதுக்கு | 2,000 | அமர் முதல் க/கு 8,000 | |
| கொடுபடா பழுதுபார்ப்பு | 4,000 | அக்பர் முதல் க/கு 4,000 | 12,000 |
| | 27,000 | | 27,000 |

ப **முதல் கணக்குகள்** வ

| விவரம் | அமர் ரூ. | அக்பர் ரூ. | அந்தோணி ரூ. | விவரம் | அமர் ரூ. | அக்பர் ரூ. | அந்தோணி ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| மறுமதிப்பீட்டுக் க/கு | 8,000 | 4,000 | – – | இருப்பு கீ/கொ | 2,70,000 | 2,10,000 | – – |
| இருப்பு கீ/இ | 2,62,000 | 2,06,000 | 1,50,000 | வங்கிக் க/கு | – – | – – | 1,50,000 |
| | 2,70,000 | 2,10,000 | 1,50,000 | | 2,70,000 | 2,10,000 | 1,50,000 |

ப **வங்கிக் கணக்கு** வ

| விவரம் | ரூ. | விவரம் | ரூ. |
|---|---|---|---|
| இருப்பு கீ/கொ | 70,000 | இருப்பு கீ/இ | 2,20,000 |
| அந்தோணி முதல் க/கு | 1,50,000 | | |
| | 2,20,000 | | 2,20,000 |



**அமர், அக்பர், அந்தோணி ஆகியோரின் 2000 ஏப்ரல் 1ஆம் நாளைய இருப்பு நிலைக் குறிப்பு**

| பொறுப்புகள் | | ரூ. | சொத்துகள் | | ரூ. |
|---|---|---|---|---|---|
| கடனீந்தோர் | | 80,000 | ரொக்கம் | | 10,000 |
| செலுத்தற்குரிய மாற்றுச் சீட்டுகள் | | 40,000 | வங்கி | | 2,20,000 |
| | | | சரக்கிருப்பு | | 74,000 |
| கொடுபடா பழுதுபார்ப்பு செலவுகள் | | 4,000 | பொறி, பொறித்தொகுதி | | 85,000 |
| | | | முதலீடுகள் | | 15,000 |
| முதல் கணக்குகள்: | | | நிலம், கட்டடம் | | 3,00,000 |
| அமர் | 2,62,000 | | பற்பல கடனாளிகள் | 40,000 | |
| அக்பர் | 2,06,000 | | கழிக்க: ஐயக்கடன் ஒதுக்கு | 2,000 | 38,000 |
| அந்தோணி | 1,50,000 | 6,18,000 | | | |
| | | 7,42,000 | | | 7,42,000 |

## 7.4 பகிர்ந்து தரா இலாபம் அல்லது நட்டத்தை மாற்றுதல் (Transfer of Undistributed Profit or Loss):

சில நேரங்களில், நிறுவனத்தின் இருப்புநிலைக் குறிப்பில் பொறுப்புக்கள் பக்கத்தில் இலாப நட்டக் கணக்கு என்ற பெயரில் பகிர்ந்து தரா இலாபமும், சொத்துக்கள் பக்கத்தில் இலாப நட்டக் கணக்கு என்ற பெயரில் பகிர்ந்து தரா நட்டமும் காட்டப்படுகின்றன. பகிர்ந்து தரா இலாப நட்டத்தில் புதிய கூட்டாளிக்கு எந்தவித பங்கும் கிடையாது. எனவே, பகிர்ந்துதரா இலாபம் அல்லது பகிர்ந்துதரா நட்டம் பழைய கூட்டாளிகளின் முதல் கணக்குகளுக்கு பழைய இலாபப் பகிர்வு விகிதத்தில் மாற்றப்பட வேண்டும்.

**இதற்குரிய குறிப்பேட்டுப் பதிவு :**

**அ) பகிர்ந்து தரா இலாபத்தை மாற்றுவது**

இலாப நட்டக் க/கு ப ....

பழைய கூட்டாளிகளின் முதல் க/கு ....

ஆ) பகிர்ந்து தரா நட்டத்தை மாற்றுவது

பழைய கூட்டாளிகளின் முதல் க/கு ப ....
இலாப நட்டக் க/கு ....

**எடுத்துக்காட்டு : 10**

சுமதி, சுந்தரி என்ற கூட்டாளிகள் முறையே 4:3 எனும் விகிதத்தில் நிறுவனத்தின் இலாப நட்டத்தை பகிர்ந்து கொள்கின்றனர். சங்கரி என்பவரை புதிய கூட்டாளியாகச் சேர்த்துக்கொள்ளும் பொழுது அவர்களுடைய இருப்பு நிலைக் குறிப்பின் பொறுப்புக்கள் பக்கத்தில் இலாப நட்டக் கணக்கு ரூ.14,000 என குறிப்பிடப்பட்டுள்ளது. குறிப்பேட்டுப் பதிவு தருக.

**விடை:**

**குறிப்பேட்டுப் பதிவுகள்**

| நாள் | விவரம் | பே.ப.எ. | பற்று ரூ. | வரவு ரூ. |
|---|---|---|---|---|
| | இலாப நட்டக் க/கு ப | | 14,000 | |
| | சுமதியின் முதல் க/கு | | | 8,000 |
| | சுந்தரியின் முதல் /கு | | | 6,000 |
| | (பகிர்ந்து தரா இலாபம் பழைய கூட்டாளிகளுக்கு பழைய இலாப விகிதத்தில் மாற்றம் செய்யப்பட்டது) | | | |

**எடுத்துக்காட்டு : 11**

மகாலட்சுமி, தனலட்சுமி என்ற இரு கூட்டாளிகள் முறையே 3:2 எனும் விகிதத்தில் இலாப நட்டம் பகிர்ந்து வந்தனர். 2005 ஜனவரி 1ஆம் நாள் அன்று தீபலட்சுமி என்பவரை புதிய கூட்டாளியாக சேர்த்துக்கொள்ள இசைந்தனர். அந்நாளில் அவர்களுடைய இருப்புநிலைக் குறிப்பின் சொத்துகள் பக்கத்தில் இலாப நட்டக் கணக்கு ரூ.25,000 எனக் காட்டுகிறது. குறிப்பேட்டில் பதிவு தருக.



**விடை:**

**குறிப்பேட்டுப் பதிவுகள்**

| நாள் | விவரம் | பே.ப.எ. | பற்று ரூ. | வரவு ரூ. |
|---|---|---|---|---|
| 2005 ஜன. 1 | மகாலட்சுமியின் முதல் க/கு ப | | 15,000 | |
| | தனலட்சிமியின் முதல் க/கு ப | | 10,000 | |
| | இலாப நட்டக் க/கு | | | 25,000 |
| | (பகிர்ந்து தரா நட்டம் பழைய கூட்டாளிகளுக்கு பழைய இலாப விகிதத்தில் மாற்றம் செய்வது). | | | |

## 7.5 குவிந்த காப்புகள் மாற்றுதல்
(Transfer of Accumulated Reserves):

சில நேரங்களில், நிறுவனத்தின் கூட்டாளிகள், இலாபத்தின் ஒரு பகுதி அல்லது சதவிகிதத்தினை வருங்காலத்தில் எதிர்பாராமல் ஏற்படும் நட்டங்கள் மற்றும் இழப்புகளைச் சரிகட்ட ஒதுக்கீடு செய்கின்றனர். இவை காப்பு, பொதுக்காப்பு, காப்புநிதி, நிகழ்வடையா காப்பு (Contingency Reserve) போன்ற பெயர்களில் உருவாக்கப்படுகின்றன. ஒரு புதிய கூட்டாளியைச் சேர்க்கும்பொழுது, காப்புகள் ஏதேனும் இருப்பின், அவை பழைய கூட்டாளிகளின் முதல் கணக்குகளுக்கு பழைய இலாப விகிதத்தில் மாற்றறப்பட வேண்டும்.

அதற்குரிய குறிப்பேட்டுப் பதிவு:

காப்பு நிதி க/கு ப ....
பழைய கூட்டாளிகளின் முதல் க/கு ....

**எடுத்துக்காட்டு : 12**

மகேந்திரன், நரசிம்மன் என்ற ஒரு நிறுவனத்தின் கூட்டாளிகள் 5:4 எனும் விகிதத்தில் இலாப, நட்டம் பகிர்ந்து வந்தனர். 2005, மார்ச் 31ஆம் நாள் அன்று, நிறுவனத்தின்

ஏடுகளில் காப்பு நிதி ரூ.36,000 உள்ளது. அவர்கள் 2005 ஏப்ரல் 1 அன்று அபராஜிதன் என்பவரை 1/3 பங்குக்கு கூட்டாளியாகச் சேர்த்துக் கொண்டனர். குறிப்பேட்டுப் பதிவு தருக.

**விடை:**

**குறிப்பேட்டுப் பதிவுகள்**

| நாள் | விவரம் | பே.ப.எ. | பற்று ரூ. | வரவு ரூ. |
|---|---|---|---|---|
| 2005 ஏப்ரல் 1 | காப்பு நிதிக் க/கு ப | | 36,000 | |
| | மகேந்திரனின் முதல் க/கு | | | 20,000 |
| | நரசிம்மனின் முதல் க/கு | | | 16,000 |
| | (காப்புநிதி பழைய கூட்டாளி களின் முதல் கணக்குகளுக்கு பழைய இலாப விகிதத்தில் மாற்றுவது) | | | |

## 7.6 நற்பெயர் குறித்து ஆவன செய்தல் (Treatment of Goodwill)

நற்பெயர் என்பது பழைய கூட்டாளிகளின் கடந்த கால முயற்சிகளின் பலன் ஆகும். எனவே, புதிய கூட்டாளியைச் சேர்க்கும்பொழுது நற்பெயரின் அப்பொழுதைய மதிப்பினை பழைய கூட்டாளிகளின் முதல் கணக்குகளில் சரிக்கட்டுதல் செய்ய வேண்டும்.

கணக்கியல் நோக்கில் பார்க்கும்பொழுது, நற்பெயர் கீழ்க்காணும் முறைகளில் ஏதேனும் ஒரு முறையைப் பின்பற்றி சரிக்கட்டுதல் செய்ய வேண்டும்.

1. மறுமதிப்பீட்டு முறை (Revaluation Method)
2. நினைவுக் குறிப்பு மறுமதிப்பீட்டு முறை (Memorandum Revaluation Method)
3. முனைமம் முறை (Premium Mehod)

மேற்காணும் மூன்று முறைகளில், மறுமதிப்பீட்டு முறை மட்டுமே இந்த அத்தியாயத்தில் விளக்கப்படும்.



### 1. மறுமதிப்பீட்டு முறை:

இம்முறையில், புதிய கூட்டாளி அவருடைய நற்பெயர் பங்காக ரொக்கம் கொண்டு வருவதில்லை. நிறுவனத்தின் ஏடுகளில் நற்பெயர் சரிக்கட்டுதலுக்காக கீழ்க்காணும் பதிவுகள் செய்யப்படுகின்றன.

**அ) நிறுவன ஏடுகளில் நற்பெயர் தோற்றுவித்தல்:**

நிறுவனத்திற்கு நற்பெயர் இருந்தாலும், அந்நிறுவனத்தின் இருப்புநிலைக் குறிப்பில் சொத்தாகத் தோன்றுவதில்லை. அதாவது, நற்பெயர் ஒரு மறைவான சொத்தாக உள்ளதே தவிர ஏடுகளில் பதிவு செய்யப்படவில்லை என்பதை இது குறிக்கின்றது. புதிய கூட்டாளியைச் சேர்க்கும்பொழுது, நற்பெயரை தற்பொழுதைய மதிப்பில் தோற்றுவித்து, பழைய கூட்டாளிகள் பழைய இலாப விகிதத்தில் பிரித்துக் கொள்கின்றனர்.

அதற்கானப் பதிவு:

| | | | |
|---|---|---|---|
| நற்பெயர் க/கு | ப | .... | |
| பழைய கூட்டாளிகளின் முதல் க/கு | | | .... |
| (தோற்றுவிக்கப்பட்ட நற்பெயரின் மதிப்பு பழைய கூட்டாளிகளின் முதல் கணக்கில் வரவு செய்யப்பட்டுள்ளது) | | | |

**ஆ) நிறுவன ஏடுகளில் நற்பெயர் தோன்றுவது – குறைவான தொகை:**

நிறுவனத்தின் இருப்புநிலைக் குறிப்பில் நற்பெயர் மதிப்பு தற்போதைய மதிப்பைவிட குறைவாகத் தோன்றுகிறது. நற்பெயரின் தற்பொழுதைய மதிப்பிற்கும், ஏற்கனவே பதிவு செய்யப்பட்டுள்ள மதிப்பிற்குமிடையேயான வேறுபாட்டுத் தொகை பழைய கூட்டாளிகளின் முதல் கணக்குகளுக்கு பழைய இலாப விகிதத்தில் மாற்றப்பட வேண்டும்.

அதற்கானப் பதிவு:

| | | | |
|---|---|---|---|
| நற்பெயர் க/கு | ப | .... | |
| பழைய கூட்டாளிகளின் முதல் கணக்குகள் | | | .... |
| (நற்பெயரின் மதிப்பு கூடுதல் பழைய கூட்டாளிகளின் | | | |

முதல் கணக்குகளுக்கு பழைய
இலாப விகிதத்தில் மாற்றப்படுவது)

**இ) நிறுவன ஏடுகளில் நற்பெயர் தோன்றுவது – மிகையான தொகை:**

நற்பெயரின் மதிப்பு நிறுவனத்தின் இருப்புநிலைக் குறிப்பில் தற்போதைய மதிப்பைவிட கூடுதலாக இருக்கும்பொழுது, அதன் வேறுபாட்டுத்தொகை பழைய கூட்டாளிகளின் முதல் கணக்குகளுக்கு பழைய இலாப விகிதத்தில் மாற்றப்படுகின்றன.

அதற்கானப் பதிவு:

பழைய கூட்டாளிகளின் முதல் க/கு ப ....

நற்பெயர் க/கு ....

(நற்பெயரின் மதிப்புக் குறைவு
பழைய கூட்டாளிகளின் முதல்
கணக்குகளுக்கு பழைய இலாப
விகிதத்தில் மாற்றப்படுவது)

**எடுத்துக்காட்டு : 13**

தாமோதரன், ஜெகதீசன் என்ற கூட்டாளிகள் முறையே 3:2 எனும் விகிதத்தில் இலாபம் பகிர்ந்து வந்தனர். அவர்கள் விஜயன் என்பவரை 1/5 பங்குக்கு கூட்டாளியாகச் சேர்க்க முடிவு செய்தனர். நற்பெயர் ரூ.50,000 ஆக தற்பொழுது மதிப்பிடப்பட்டுள்ளது.

கீழ்க்கண்ட தருணங்களில் குறிப்பேட்டுப் பதிவுகளைத் தருக.

அ) நற்பெயர் இதுவரை நிறுவன ஏடுகளில் இல்லாமலிருந்தால்

ஆ) ஏடுகளில் நற்பெயரின் மதிப்பு ரூ.30,000 எனக் காட்டப்பட்டிருந்தால்

இ) ஏடுகளில் நற்பெயரின் மதிப்பு ரூ.60,000 எனக் காட்டப்பட்டிருந்தால்



**விடை:**

### குறிப்பேட்டுப் பதிவுகள்

| நாள் | விவரம் | பே.ப.எ | பற்று ரூ. | வரவு ரூ. |
|---|---|---|---|---|
| | **நிலை அ :** | | | |
| | நற்பெயர் க/கு ப | | 50,000 | |
| | தாமோதரனின் முதல் க/கு | | | 30,000 |
| | ஜெகதீசனன் முதல் க/கு | | | 20,000 |
| | (நற்பெயர் தோற்றுவிக்கப்பட்டு பழைய கூட்டாளிகளுக்கு வரவு செய்யப்பட்டது) | | | |
| | **நிலை ஆ :** | | | |
| | நற்பெயர் க/கு ப | | 20,000 | |
| | தாமோதரனின் முதல் க/கு | | | 12,000 |
| | ஜெகதீசனின் முதல் க/கு | | | 8,000 |
| | (நற்பெயர் மதிப்பு ரூ.30,000 லிருந்து ரூ.50,000 ஆனதால், மிகைத்தொகை ரூ.20,000 பழைய கூட்டாளிகளின் முதல் கணக்கில் பழைய இலாப விகிதத்தில் வரவு செய்யப்பட்டது) | | | |
| | **நிலை இ :** | | | |
| | தாமோதரனின் முதல் க/கு ப | | 6,000 | |
| | ஜெகதீசனின் முதல் க/கு ப | | 4,000 | |
| | நற்பெயர் க/கு | | | 10,000 |
| | (நற்பெயர் மதிப்பு ரூ.60,000லிருந்து ரூ.50,000 ஆகையால் குறைந்த தொகை ரூ.10,000 பழைய கூட்டாளிகளின் முதல் கணக்கில் பற்று செய்யப்பட்டது) | | | |

*குறிப்பு: நினைவு குறிப்பு மறுமதிப்பீட்டு முறை மற்றும் முனைம முறையிலான நற்பெயர் இப்புத்தகத்தின் பாட வரம்பிற்கு அப்பால் உள்ளதால் அவை பற்றி விவாதிக்கப் படவில்லை.*

## 7.7. புதிய கூட்டாளியின் சேர்க்கைக்குப் பின் மறுமதிப்பீட்டுக் கணக்கு, முதல் கணக்குகள், வங்கிக் கணக்கு மற்றும் இருப்புநிலைக் குறிப்பு தயாரித்தல்:

### எடுத்துக்காட்டு : 14

அனிதா, வனிதா என்ற கூட்டாளிகள் முறையே 3:1 எனும் விகிதத்தில் இலாப நட்டம் பகிர்ந்து வருகின்றனர். 2005 மார்ச் 31ம் நாளன்றைய இருப்புநிலைக் குறிப்பு பின்வருமாறு:

| பொறுப்புகள் | ரூ. | சொத்துகள் | ரூ. |
|---|---|---|---|
| கடனீந்தோர் | 60,000 | ரொக்கம் | 5,000 |
| செலுத்தற்குரிய மாற்றுச் சீட்டுகள் | 20,000 | கடனாளிகள் | 70,000 |
| பொதுக்காப்பு | 40,000 | சரக்கிருப்பு | 30,000 |
| முதல்: | | பொறியும், பொறித் தொகுதியும் | 25,000 |
| அனிதா 80,000 | | கட்டடம் | 1,00,000 |
| வனிதா 40,000 | 1,20,000 | இலாப நட்டக் க/கு | 10,000 |
| | 2,40,000 | | 2,40,000 |

2005 ஏப்ரல் 1ஆம் நாள் கவிதா என்பவரை 1/5 பங்குக்கு சேர்த்துக் கொள்வதெனவும் கீழ்க்கண்ட சரிக்கட்டுகளுக்கும் சம்மதித்தனர்.

அ) கட்டடத்தை ரூ.1,20,000 என மறுமதிப்பீடு செய்வது.

ஆ) சரக்கிருப்பு ரூ.21,500 என மதிப்பீடு செய்வது.

இ) நற்பெயர் ரூ.40,000 என தோற்றுவிப்பது.

ஈ) வாரா ஐயக்கடன் ஒதுக்கு 5%.

உ) கவிதா ரூ.50,000 முதல் கொண்டுவருவது.

மேற்கண்டவற்றைச் செயல்படுத்துவதற்குரிய குறிப் பேட்டுப் பதிவுகள் தந்து, மறுமதிப்பீட்டுக் க/கு, முதல் கணக்குகள், ரொக்கக் கணக்கு மற்றும் மாற்றியமைக்கப்பட்ட நிறுவனத்தின் இருப்புநிலைக் குறிப்பு ஆகியவற்றைத் தயாரிக்க.



**விடை:**

### குறிப்பேட்டுப் பதிவுகள்

| நாள் | விவரம் | பே.ப.எ. | பற்று ரூ. | வரவு ரூ. |
|---|---|---|---|---|
| 2005 ஏப். 1 | கட்டடம் க/கு ப | | 20,000 | |
| | மறுமதிப்பீட்டுக் க/கு | | | 20,000 |
| | (மறுமதிப்பீடு மீதான இலாப இனம்) | | | |
| „ | மறுமதிப்பீட்டுக் க/கு ப | | 12,500 | |
| | சரக்கிருப்பு க/கு | | | 8,500 |
| | ஐயக்கடன் ஒதுக்கு க/கு | | | 3,500 |
| | (மறுமதிப்பீட்டு மீதான நட்ட இனம்) | | | |
| „ | மறுமதிப்பீட்டுக் க/கு ப | | 8,000 | |
| | அனிதா முதல் க/கு | | | 6,000 |
| | வனிதா முதல் க/கு | | | 2,000 |
| | (மறுமதிப்பீட்டின் இலாபம் பழைய கூட்டாளிகளுக்கு பழைய இலாப விகிதத்தில் மாற்றுவது) | | | |
| „ | அனிதா முதல் க/கு ப | | 7,500 | |
| | வனிதா முதல் க/கு ப | | 2,500 | |
| | இலாப நட்டக் க/கு | | | 10,000 |
| | (பகிர்ந்து தரா நட்டம் பகிர்ந்து மாற்றுவது) | | | |
| „ | பொதுக்காப்பு க/கு ப | | 40,000 | |
| | அனிதா முதல் க/கு | | | 30,000 |
| | வனிதா முதல் க/கு | | | 10,000 |
| | (குவிந்த பொதுக்காப்பு பழைய கூட்டாளிகளுக்கு பழைய விகிதத்தில் மாற்றுவது) | | | |

| | | | |
|---|---|---|---|
| நற்பெயர் க/கு ப | | 40,000 | |
| அனிதா முதல் க/கு | | | 30,000 |
| வனிதா முதல் க/கு | | | 10,000 |
| (நற்பெயர் தோற்றுவித்து பழைய கூட்டாளிகள் பழைய இலாப விகிதத்தில் பங்கெடுத்துக் கொள்வது) | | | |
| ரொக்கக் க/கு ப | | 50,000 | |
| கவிதா முதல் க/கு | | | 50,000 |
| (கவிதா முதல் கொண்டு வந்தது) | | | |

ப **மறுமதிப்பீட்டுக் கணக்கு** வ

| விவரம் | ரூ. | விவரம் | ரூ. |
|---|---|---|---|
| சரக்கிருப்பு க/கு | 8,500 | கட்டடக் க/கு | 20,000 |
| ஐயக்கடன் ஒதுக்கு க/கு | 3,500 | | |
| மறுமதிப்பீட்டு இலாபம் முதல் கணக்குகளுக்கு மாற்றுவது: | | | |
| அனிதா 6,000 | | | |
| வனிதா 2,000 | 8,000 | | |
| | 20,000 | | 20,000 |

ப **முதல் கணக்குகள்** வ

| விவரம் | அனிதா ரூ. | வனிதா ரூ. | கவிதா ரூ. | விவரம் | அனிதா ரூ. | வனிதா ரூ. | கவிதா ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| இலாப நட்டக் க/கு | 7,500 | 2,500 | – | இருப்பு கீ/கொ | 80,000 | 40,000 | – |
| | | | | ரொக்கக் க/கு | – | – | 50,000 |
| இருப்பு கீ/இ | 1,38,500 | 59,500 | 50,000 | பொதுக்காப்பு க/கு | 30,000 | 10,000 | |
| | | | | நற்பெயர் க/கு | 30,000 | 10,000 | |
| | | | | மறுமதிப்பீட்டு க/கு | 6,000 | 2,000 | |
| | 1,46,000 | 62,000 | 50,000 | | 1,46,000 | 62,000 | 50,000 |



ப **ரொக்கக் கணக்கு** வ

| விவரம் | ரூ. | விவரம் | ரூ. |
|---|---|---|---|
| இருப்பு கீ/கொ | 5,000 | இருப்பு கீ/இ | 55,000 |
| கவிதா முதல் க/கு | 50,000 | | |
| | 55,000 | | 55,000 |

**அனிதா, வனிதா, கவிதா ஆகியோரின் 2005, ஏப்ரல் 1ஆம் நாளைய இருப்புநிலைக் குறிப்பு**

| பொறுப்புகள் | ரூ. | சொத்துகள் | ரூ. |
|---|---|---|---|
| கடனீந்தோர் | 60,000 | ரொக்கம் | 55,000 |
| செலுத்தற்குரிய மாற்றுச் சீட்டுகள் | 20,000 | கடனாளிகள் 70,000 | |
| முதல் கணக்குகள்: | | கழிக்க: ஐயக்கடன் ஒதுக்கு 3,500 | 66,500 |
| அனிதா 1,38,500 | | சரக்கிருப்பு | 21,500 |
| வனிதா 59,500 | | பொறியும், பொறித் தொகுதியும் | 25,000 |
| கவிதா 50,000 | 2,48,000 | கட்டடம் | 1,20,000 |
| | | நற்பெயர் | 40,000 |
| | 3,28,000 | | 3,28,000 |

## எடுத்துக்காட்டு : 15

*சங்கரி, சுதா என்ற கூட்டாளிகள் முறையே 3:2 எனும் விகிதத்தில் இலாப நட்டம் பகிர்ந்து வந்தனர். 2005 மார்ச் 31ஆம் நாளைய இருப்புநிலைக் குறிப்பு பின்வருமாறு:*

| பொறுப்புகள் | ரூ. | சொத்துகள் | ரூ. |
|---|---|---|---|
| முதல்: | | நிலம், கட்டடம் | 1,20,000 |
| சங்கரி 90,000 | | பொறியும், பொறித் | |
| சுதா 75,000 | 1,65,000 | தொகுதியும் | 90,000 |
| இலாப நட்டக் க/கு | 30,000 | சரக்கிருப்பு | 33,000 |
| பற்பல கடனீந்தோர் | 48,000 | பற்பல கடனாளிகள் 15,000 | |
| செலுத்தற்குரிய மாற்றுச் | | கழிக்க: ஐயக்கடன் | |
| சீட்டுகள் | 50,000 | ஒதுக்கு 1,000 | 14,000 |
| | | ரொக்கம் | 6,000 |
| | | நற்பெயர் | 30,000 |
| | 2,93,000 | | 2,93,000 |

அவர்கள் பின்வரும் பகிர்வுகளில் 2005 ஏப்ரல் 1 அன்று சாந்தி என்பவரைக் கூட்டாண்மையில் சேர்த்துக் கொள்ள ஒப்புக் கொண்டனர்.

அ) சாந்தி என்பவர் 1/3 இலாபப் பங்குக்கு ரூ.60,000 முதல் கொணர்வது.

ஆ) நற்பெயரை ரூ.45,000 என மதிப்பீடு செய்வது.

இ) நிலம் ரூ.1,50,000 என மதிப்பிடப்பட்டது.

ஈ) சரக்கிருப்பு ரூ.8,000 போக்கெழுதுவது.

உ) ஐயக்கடன் ஒதுக்கை ரூ.3,000 ஆக அதிகரிப்பது.

ஊ) பற்பல கடனீந்தோரில் ரூ.5,000 யைப் போக்கெழுதுவது.

எ) பதிவு பெறாத முதலீடுகள் ரூ.10,000 ஏடுகளில் கொணர்வது.

மறுமதிப்பீட்டுக் கணக்கு, முதல் கணக்குகள், ரொக்கக் கணக்கு மற்றும் புதிய நிறுவனத்தின் இருப்புநிலைக் குறிப்பு ஆகியவற்றைத் தயாரிக்க.

**விடை:**

ப **மறுமதிப்பீட்டுக் கணக்கு** வ

| விவரம் | | ரூ. | விவரம் | ரூ. |
|---|---|---|---|---|
| சரக்கிருப்பு | | 8,000 | நிலம் | 30,000 |
| ஐயக்கடன் ஒதுக்கு | | 2,000 | கடனீந்தோர் | 5,000 |
| மறுமதிப்பீட்டு இலாபம்: | | | முதலீடுகள் | 10,000 |
| சங்கரி | 21,000 | | | |
| சுதா | 14,000 | 35,000 | | |
| | | 45,000 | | 45,000 |



ப **முதல் கணக்குகள்** வ

| விவரம் | சங்கரி ரூ. | சுதா ரூ. | சாந்தி ரூ. | விவரம் | சங்கரி ரூ. | சுதா ரூ. | சாந்தி ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| இருப்பு கீ/இ | 1,38,000 | 1,07,000 | 60,000 | இருப்பு கீ/கொ | 90,000 | 75,000 | – |
| | | | | ரொக்கக் க/கு | – | – | 60,000 |
| | | | | நற்பெயர் க/கு | 9,000 | 6,000 | – |
| | | | | இலாப நட்டக் க/கு | 18,000 | 12,000 | – |
| | | | | மறுமதிப்பீட்டு க/கு | 21,000 | 14,000 | – |
| | 1,38,000 | 1,07,000 | 60,000 | | 1,38,000 | 1,07,000 | 60,000 |

ப **ரொக்கக் கணக்கு** வ

| விவரம் | ரூ. | விவரம் | ரூ. |
|---|---|---|---|
| இருப்பு கீ/கொ | 6,000 | இருப்பு கீ/இ | 66,000 |
| சாந்தி முதல் க/கு | 60,000 | | |
| | 66,000 | | 66,000 |

**சங்கரி, சுதா, சாந்தி ஆகியோரின் 2005 ஏப்ரல் 1 ஆம் நாளைய இருப்புநிலைக் குறிப்பு**

| பொறுப்புகள் | | ரூ. | சொத்துகள் | | ரூ. |
|---|---|---|---|---|---|
| முதல்: | | | நிலம், கட்டடம் | | 1,50,000 |
| சங்கரி | 1,38,000 | | பொறியும், பொறித் | | |
| சுதா | 1,07,000 | | தொகுதியும் | | 90,000 |
| சாந்தி | 60,000 | 3,05,000 | சரக்கிருப்பு | | 25,000 |
| பற்பல கடனீந்தோர் | | 43,000 | பற்பல கடனாளிகள் | 15,000 | |
| செலுத்தற்குரிய மாற்றுச் | | | கழிக்க: ஐயக்கடன் | | |
| சீட்டுகள் | | 50,000 | ஒதுக்கு | 3,000 | 12,000 |
| | | | நற்பெயர் | | 45,000 |
| | | | ரொக்கம் | | 66,000 |
| | | | முதலீடுகள் | | 10,000 |
| | | 3,98,000 | | | 3,98,000 |

## வினாக்கள்

**I. புற வகை**

**அ) கோடிட்ட இடங்களை நிரப்புக:**

1. ஒரு புதிய கூட்டாளியைச் சேர்ப்பது என்பது, சட்டப்படி பழைய கூட்டாண்மை _________ ஆகும்.

2. ஒரு புதிய கூட்டாளியைச் சேர்க்கும் பொழுது _________ இலாபப் பகிர்வு விகிதம் கணக்கிட வேண்டும்.

3. ஒரு புதிய கூட்டாளியைச் சேர்க்கும்பொழுது, சொத்துக்கள் பொறுப்புக்களை _________ செய்வது அவசியம்.

4. ஒரு சொத்தின் மதிப்பு அதிகரிக்கும் பொழுது, அது _________ இனமாகும்.

5. பதிவுறா பொறுப்பை ஏடுகளில் கொணர்வது, _________ இனமாகும்.

6. மறு மதிப்பீட்டில் ஏற்பட்ட _________ மறுமதிப்பீட்டுக் கணக்கின் இருப்பு வெளிப்படுத்தும்.

7. மறுமதிப்பீட்டின் இலாபம் அல்லது நட்டம், பழைய கூட்டாளியின் முதல் கணக்குகளுக்கு அவர்களுடைய _________ மாற்றப்படுகின்றன.

8. கூட்டாளி சேர்க்கையின் பொழுது, பழைய இலாபப் பகிர்வு விகிதத்திற்குப், புதிய இலாபப் பகிர்வு விகிதத்திற்கும் இடையேயான வேறுபாடு _________ விகிதம் ஆகும்.

9. பகிர்ந்து தரா இலாபம் இருப்புநிலைக் குறிப்பின் _________ பக்கத்தில் தோன்றும்.

10. கூட்டாளி சேர்க்கையின் பொழுது நற்பெயர் தோற்று விக்கப்படுகையில் _________ விகிதத்தில் பழைய கூட்டாளி களின் முதல் கணக்குகளில் வரவு செய்யப்படும்.

11. கூட்டாண்மையில் சேர்க்கப்படும் புதிய கூட்டாளி, நிறுவனத்தின் _________ பங்கெடுக்கும் உரிமையையும் நிறுவனத்தின் வருங்கால _________ பங்கெடுக்கும் உரிமையையும் பெறுகிறார்.

12. புதிய இலாபப் பகிர்வு விகித நிர்ணயம், புதிய கூட்டாளி பழைய கூட்டாளிகளிடமிருந்து பெறக்கூடிய _________ சார்ந்துள்ளது.

13. _________ நற்பெயர் முறையில், பழைய இலாபப் பகிர்வு விகித அடிப்படையில் பழைய கூட்டாளிகளின் முதல் கணக்குகளில் வரவு வைத்து, நற்பெயர் தோற்றுவிக்கப்படும்.

(விடை: 1. கலைப்பு; 2. புதிய; 3. மறு மதிப்பீடு; 4. இலாப; 5. நட்ட; 6. இலாப அல்லது நட்டத்தினை; 7. பழைய இலாபப் பகிர்வு விகிதத்தில்; 8. தியாக; 9. பொறுப்புகள்; 10. பழைய இலாபப் பகிர்வு; 11. சொத்துகளில், இலாபங்களில்; 12. இலாபப் பங்கினை; 13. மறுமதிப்பீடு)

**ஆ) தக்க விடையைத் தேர்ந்தெடு:**

1. A, B என்ற கூட்டாளிகள் முறையே 3:2 எனும் விகிதத்தில் இலாப நட்டத்தைப் பகிர்ந்து கொள்கின்றனர். அவர்கள் C என்பவரை 1/3 கூட்டுக்குச் சேர்த்தனர். அந்த இலாபப் பங்கை A மற்றும் B பகிர்ந்து கொள்வது

   அ) சமமாக

   ஆ) அவர்களுடைய முதல் விகிதத்தில்

   இ) அவர்களுடைய இலாப விகிதத்தில்

2. சேர்க்கையில், மறுமதிப்பீட்டின் இலாபத்தை பழைய கூட்டாளிகளின் முதல் கணக்குகளில் மாற்றப்படுவது

   அ) பழைய இலாபப் பகிர்வு விகிதத்தில்

   ஆ) தியாக விகிதத்தில்

   இ) புதிய இலாபப் பகிர்வு விகிதத்தில்

3. பழைய கூட்டாளிகளின் தியாகம் தரப்படாமல் புதிய கூட்டாளியின் புதிய இலாபப் பங்கு தரப்பட்டிருந்தால், பழைய கூட்டாளிகளின் தியாகம் _________ இருக்கும் எனக் கொள்ளலாம்.

அ) பழைய இலாபப் பகிர்வு விகிதத்தில்

ஆ) ஆதாய விகிதத்தில்

இ) முதல் விகிதத்தில்

4. கூட்டாளி சேர்க்கையின் பொழுது சொத்துகளையும், பொறுப்புகளையும் மறு மதிப்பீடு செய்து அவற்றை __________ பதிய வேண்டியது நியாயமான செயல் முறையாகும்.

அ) அடக்க விலையில்

ஆ) அடக்கத்திலிருந்து தேய்மானம் கழித்த தொகையில்

இ) உண்மை மதிப்பில் (நடப்பு மதிப்பில்)

5. கூட்டாளி சேர்க்கையின் பொழுது, நற்பெயர் தோற்றுவிக்கப்படுகையில் பற்று செய்யப்படும் கணக்கு

அ) கூட்டாளிகளின் முதல் கணக்குகள்

ஆ) நற்பெயர் கணக்கு

இ) மறு மதிப்பீடு கணக்கு

6. கூட்டாளிகள் A, B இருவரும் 3:2 என்ற விகிதத்தில் இலாபம் பகிர்ந்து வந்தனர். புதிய கூட்டாளி C 1/5 பங்கிற்குச் சேர்க்கப்பட்டார். A, B ஆகியோர் Cயின் பங்கிற்காகத் தருவது.

அ) சமமாக

ஆ) அவர்களின் முதல் விகிதத்தில்

இ) அவர்களின் இலாபப் பகிர்வு விகிதத்தில்

7. புதிய கூட்டாளி சேர்க்கையில், சொத்தின் மதிப்பேற்றம் பற்று செய்யப்படும் கணக்கு.

அ) சொத்துக் கணக்கு

ஆ) இலாப நட்டப் பகிர்வுக் கணக்கு

இ) பழைய கூட்டாளிகளின் முதல் கணக்குகள்

8. புதிய கூட்டாளி சேர்க்கையில், பொதுக்காப்புக் கணக்கில் உள்ள இருப்பு மாற்றப்படுவது.



அ) புதிய இலாபப் பகிர்வு விகிதத்தில் அனைத்துக் கூட்டாளிகளின் முதல் கணக்குகள்

ஆ) பழைய இலாபப் பகிர்வு விகிதத்தில் பழைய கூட்டாளிகளின் முதல் கணக்குகள்.

இ) புதிய இலாப விகிதத்தில் பழைய கூட்டாளிகளின் முதல் கணக்குகள்

9. புதிய கூட்டாளி சேர்க்கையில், பகிர்ந்து தரா இலாபமும், காப்பு நிதியும் பகிர்ந்து கொள்ளப்படுவது.

அ) புதிய இலாபப் பகிர்வு விகிதம்

ஆ) பழைய இலாபப் பகிர்வு விகிதம்

இ) முதல் விகிதம்

10. கூட்டாண்மை மாற்றியமைக்கையில் பழைய கூட்டாளிகளின் ________ மாற்றப்பட வேண்டும்.

அ) இலாப நட்டப் பகிர்வு விகிதம்

ஆ) முதல் விகிதம்

இ) தியாக விகிதம்

11. புதிய கூட்டாளி சேர்க்கையில் __________ கணக்கிடப்படுகிறது.

அ) ஆதாய விகிதம்

ஆ) முதல் விகிதம்

இ) தியாக விகிதம்

(விடை: 1. (இ), 2. (அ), 3. (அ), 4. (இ), 5. (ஆ), 6. (இ), 7. (அ), 8. (ஆ), 9. (ஆ), 10. (அ), 11. (இ))

## II. பிற வினாக்கள்:

1. கூட்டாளிச் சேர்ப்பு என்றால் என்ன?

2. உள்வரு கூட்டாளி என்பவர் யார்?

3. கூட்டாளி சேர்ப்பின் பொழுது செய்யப்படும் சரிகட்டுதல்கள் யாவை?

4. ஒரு கூட்டாளி சேர்ப்பின் பொழுது ‘புதிய இலாபப் பகிர்வு விகிதம் கணக்கீடு’ என்பது என்ன?

5. தியாக விகிதம் என்றால் என்ன?

6. மறுமதிப்பீடு கணக்கு என்றால் என்ன?

7. மறுமதிப்பீட்டுக் கணக்கு ஏன் தொடங்குகிறோம்?

8. புதிய கூட்டாளி சேர்க்கையில் கூட்டாண்மையின் சொத்துகளையும் பொறுப்புகளையும் மறுமதிப்பீடு செய்வதன் பதிவுகள் யாவை?

9. புதிய கூட்டாளியைச் சேர்க்கும்பொழுது பகிர்ந்து தரா இலாப நட்டங்களை என்ன செய்வாய்?

10. குவிந்த காப்பு என்றால் என்ன?

11. நற்பெயரின் மறுமதிப்பீட்டு முறை என்பது என்ன?

## III. பயிற்சிக் கணக்குகள்

புதிய இலாப விகிதம் மற்றும் தியாக விகிதம் கணக்கிடுதல்:

1. ஷீலா, நீலா என்ற கூட்டாளிகள் முறையே 4:3 எனும் விகிதத்தில் இலாபம் பகிர்ந்து வந்தனர். கமலா என்பவரை 1/5 கூட்டுக்குச் சேர்த்தனர். அவர்களுடைய புதிய இலாபப் பகிர்வு விகிதத்தையும் தியாக விகிதத்தையும் கணக்கிடுக.

(விடை: புதிய இலாப பகிர்வு விகிதம்=16:12:7;
தியாக விகிதம் = 4:3)

2. கோகிலா, மாலா என்ற கூட்டாளிகள் முறையே 4:3 எனும் விகிதத்தில் இலாபம் பகிர்ந்து வந்தனர். சந்திரா என்பவரை 3/7 கூட்டுக்குச் சேர்த்தனர். இப்பங்குக்கு கோகிலா செய்யும் தியாகம் 2/7 மற்றும் மாலா செய்யும் தியாகம் 1/7. புதிய இலாபப் பகிர்வு விகிதம் மற்றும் தியாக விகிதம் கணக்கிடுக.

(விடை: புதிய இலாபப் பகிர்வு விகிதம் = 2:2:3;
தியாக விகிதம் = 2:1



3. ஆனந்தன், பாஸ்கரன் என்ற கூட்டாளிகள் முறையே 3:2 எனும் விகிதத்தில் இலாப நட்டம் பகிர்ந்து வந்தனர். அவர்கள் சந்திரன் என்பவரை 1/3 கூட்டுக்கு இருவரும் சமமாக தியாகம் செய்து சேர்த்தனர். புதிய இலாபப் பகிர்வு விகிதம் மற்றும் தியாக விகிதம் கணக்கிடுக.

(விடை: புதிய இலாப விகிதம் = 13:7:10;
தியாக விகிதம் = 1:1)

4. குன்றன், குமரன் என்ற கூட்டாளிகள் முறையே 9:7 எனும் விகிதத்தில் இலாபம் பகிர்ந்து வந்தனர். குகன் என்பவரை 3/16 கூட்டுக்கு முழுவதும் குன்றன் தியாகம் செய்து சேர்த்தனர். புதிய இலாபப் பகிர்வு விகிதம் மற்றும் தியாக விகிதம் கணக்கிடுக.

(விடை: புதிய இலாப விகிதம் = 6:7:3;
குமரனின் தியாகம் = 3/16)

5. ஈஸ்வரி, ராணிகுமாரி என்ற கூட்டாளிகள் முறையே 7:5 எனும் விகிதத்தில் இலாப நட்டம் பகிர்ந்து வந்தனர். அவர்கள் சித்ரா என்பவரைச் சேர்த்துக்கொள்ள ஒப்புக்கொண்டு ஈஸ்வரி தன் பங்கில் 1/7 பங்கும், ராணிகுமாரி தன் பங்கில் 1/5 பங்கும் தியாகம் செய்தனர். புதிய இலாபப் பகிர்வு விகிதம் மற்றும் தியாக விகிதம் கணக்கிடுக.

(விடை: புதிய இலாபப் பகிர்வு விகிதம் = 3:2:1,
தியாக விகிதம் = 1:1)

6. ரமேஷ் மற்றும் சுரேஷ் என்ற கூட்டாளிகள் முறையே 4:3 எனும் விகிதத்தில் இலாபம் பகிர்ந்து வந்தனர். அவர்கள் மக்ஷே என்பவரைச் சேர்த்த பிறகு புதிய இலாப விகிதம் 7:4:3, தியாக விகிதம் கண்டுபிடிக்க.

(விடை: தியாக விகிதம் = 1:2)

7. மணி, சுந்தரம் என்ற ஒரு நிறுவனத்தின் கூட்டாளிகள் முறையே 7:3 எனும் விகிதத்தில் இலாப நட்டங்கள் பகிர்ந்து வந்தனர். முத்தையன் புதிய கூட்டாளியாகச் சேர்க்கப்பட்டார். மணி அவருடைய பங்கில்

*1/7 பங்கும், சுந்தரம் அவருடைய பங்கில் 1/3 பங்கும் தியாகம் செய்கின்றனர். புதிய இலாப விகிதத்தையும், தியாக விகிதத்தையும் கணக்கிடுக.*

*(விடை: புதிய இலாபப் பகிர்வு விகிதம் = 3:1:1;*
*தியாக விகிதம் = 1:1)*

8. *முத்து, சிவா என்ற கூட்டாளிகள் முறையே 7:3 எனும் விகிதத்தில் இலாபம் பகிர்ந்து வந்தனர். அவர்கள் பாலா என்பவரை 1/5 கூட்டுக்குச் சேர்த்தனர். பின்வரும் ஒவ்வொரு நிலையிலும் அவர்களுடைய புதிய இலாபப் பகிர்வு விகிதம் மற்றும் தியாக விகிதம் கணக்கிடுக.*

   *அ) பாலா, அவருடைய பங்கை பழைய கூட்டாளிகளிட மிருந்து சமமாகப் பெற்றிருந்தால்*

   *ஆ) புதிய கூட்டாளி அவருடைய பங்கை பழைய கூட்டாளிகளிடமிருந்து பழைய இலாப விகிதத்தில் பெற்றிருந்தால்*

   *இ) அவர், முத்துவிடமிருந்து 3/20 பங்கும், சிவாவிட மிருந்து 1/20 பங்கும் பெற்றிருந்தால்*

   *ஈ) அவர் தன்பங்கை முத்துவிடமிருந்து, முழுமையும் பெற்றிருந்தால்*

*(விடைகள்: அ) 3:1:1; ஆ) 14:6:5; இ) 11:5:4; ஈ) 5:3:2*
*தியாக விகிதம் = அ) 1:1; ஆ) 7:3;*
*இ) 3:1; ஈ) முத்து மட்டும் 1/5 பங்கு*

9. *'அ', 'ஆ' என்ற இரு கூட்டாளிகள் முறையே 6:4 எனும் விகிதத்தில் இலாப நட்டங்கள் பகிர்ந்து வந்தனர். 'இ' என்பவரை புதிய கூட்டாளியாகச் சேர்த்தனர். 'அ' என்பவர் 'இ' என்பவருக்கு தன் பங்கில் 1/5ம், ஆ என்பவர் 'இ' என்பவருக்கு தன் பங்கில் 2/5ம் வழங்கினர்.*

   *புதிய இலாபப் பகிர்வு விகிதம் கணக்கிடுக.*

*(மார்ச் 2003)*
*(விடை: 12:6:7)*



**சொத்துக்கள், பொறுப்புக்கள் மறுமதிப்பீடு செய்தல்:**

10. *ஸ்ரீதேவி, சிந்தியா என்ற கூட்டாளிகள் முறையே 3:2 எனும் விகிதத்தில் இலாப நட்டம் பகிர்ந்து வந்தனர். அவர்கள் பாத்திமா என்பவரை கூட்டாண்மையில் சேர்க்க முடிவு செய்து கீழ்க்காணும் சொத்துக்கள் பொறுப்புக்களை மறு மதிப்பீடு செய்தனர்.*

   *அ) ஏடுகளில் பதிவு பெறாமலுள்ள முதலீடுகள் ரூ.18,000 தற்பொழுது பதிவு செய்தல் வேண்டும்.*

   *ஆ) சரக்கிருப்பு, அறைகலன் மற்றும் எந்திரத்தின் மதிப்புகளை முறையே ரூ.18,000, ரூ.6,000, ரூ.30,000 என குறைக்க வேண்டும்.*

   *இ) தொழிலாளர்களுக்கு ஈட்டுத்தொகை ரூ.24,000க்கு ஒதுக்கு உருவாக்க வேண்டும்.*

   *குறிப்பேட்டுப் பதிவுகள் தந்து, மறுமதிப்பீட்டுக் கணக்கைத் தயாரிக்கவும்.*

*(விடை: மறுமதிப்பீட்டு நட்டம் ரூ.60,000)*

11. *இராமன், இலட்சுமணன் என்ற கூட்டாளிகள் முறையே 4:3 எனும் விகிதத்தில் இலாப நட்டம் பகிர்ந்து வந்தனர். வேலன் என்பவரைச் சேர்க்க முடிவு செய்தபிறகு, பின்வருமாறு சொத்துக்கள் மற்றும் பொறுப்புக்களை மறுமதிப்பீடு செய்தனர்.*

   *அ) கட்டட மதிப்பை ரூ.60,000 அதிகப்படுத்த வேண்டும்.*

   *ஆ) ஐயக்கடன் ஒதுக்கு ரூ.800 குறைக்க வேண்டும்.*

   *இ) இயந்திர மதிப்பை ரூ.16,000, அறைகலன் ரூ.4,000 மற்றும் சரக்கிருப்பு ரூ.12,000 குறைக்க வேண்டும்.*

   *ஈ) கொடுபடாமலுள்ள பொறுப்புக்களுக்கு ரூ.800க்கு வகை செய்ய வேண்டும்.*

   *மறுமதிப்பீட்டுக் கணக்கைத் தயாரிக்கவும்.*

*(விடை: மறுமதிப்பீட்டு இலாபம் ரூ.28,000)*

12. M, G என்ற கூட்டாளிகள் முறையே 3:2 எனும் விகிதத்தில் இலாபம் பகிர்ந்து கொள்கின்றனர். L என்ற புதிய கூட்டாளியைச் சேர்ப்பதை முன்னிட்டு, அவர்கள் அந்நிறுவனத்தின் சொத்துக்களையும், பொறுப்புக்களையும் பின்வருமாறு மறுமதிப்பீடு செய்ய முடிவு செய்கின்றனர்.

அ) ஏடுகளில் பதிவு பெறா முதலீடுகள் ரூ.12,000 ஐ இப்பொழுது பதிவு செய்ய வேண்டும்.

ஆ) சரக்கிருப்பு மதிப்பை ரூ.3000ம், அறைகலன் மதிப்பை ரூ.1,000ம் எந்திரத்தின் மதிப்பை ரூ.5,000ம் குறைக்க வேண்டும்.

இ) கொடுபடாமலுள்ள பொறுப்புக்களுக்கு ரூ.4,000 ஒதுக்கு உருவாக்க வேண்டும்.

குறிப்பேட்டுப்பதிவுகள் தந்து, மறுமதிப்பீட்டுக் கணக்கு காட்டிடுக.

(மார்ச் 2003)

(விடை: மறுமதிப்பீட்டு நட்டம் ரூ.1,000)

13. வள்ளுவன், கம்பன் என்ற கூட்டாளிகள் முறையே வள்ளுவன் 60%, கம்பன் 40%, இலாப நட்டங்கள் பகிர்ந்து கொள்கின்றனர். 2005 ஜனவரி 1ஆம் நாளைய இருப்பு நிலைக் குறிப்பு பின்வருமாறு:

| பொறுப்புகள் | | ரூ. | சொத்துகள் | ரூ. |
|---|---|---|---|---|
| பற்பல கடனீந்தோர் | | 96,000 | கை ரொக்கம் | 4,000 |
| செலுத்தற்குரிய | | | பற்பல கடனாளிகள் | 56,000 |
| மாற்றுச்சீட்டுகள் | | 34,000 | சரக்கிருப்பு | 40,000 |
| முதல் கணக்குகள்: | | | பொறியும், பொறித் | |
| வள்ளுவன் | 90,000 | | தொகுதியும் | 80,000 |
| கம்பன் | 80,000 | 1,70,000 | நிலமும் கட்டடமும் | 1,20,000 |
| | | 3,00,000 | | 3,00,000 |

பின்வரும் இனங்களின் மறுமதிப்பீட்டுக்கு உட்பட்டு, அவர்கள் இளங்கோவன் என்பவரைக் கூட்டாளியாகச் சேர்த்துக் கொள்ள ஒப்புக் கொண்டனர்.



அ) சரக்கிருப்பு மதிப்பில் ரூ.4,000 குறைக்க வேண்டும்.

ஆ) நிலம், கட்டடம் ரூ.1,60,000 என மதிப்பிடப்பட்டது.

இ) ஐயக்கடன் ஒதுக்கு 2½% உருவாக்க வேண்டும்.

ஈ) கொடுபடாச் செலவுகள் ரூ.2,600 ஏடுகளில் பதிவு செய்யாமல் விடுபட்டுள்ளது.

மறுமதிப்பீட்டுக் கணக்கு, முதல் கணக்குகள் மற்றும் இருப்புநிலைக் குறிப்பைத் தயாரிக்க.

(விடை: மறுமதிப்பீட்டு இலாபம் ரூ.32,000
இருப்புநிலைக் குறிப்பு மொத்தம் ரூ.3,34,600)

14. நாராயணன், பெருமாள் என்ற கூட்டாளிகள் சமமாக இலாப நட்டம் பகிர்ந்து வருகின்றனர். அவர்களுடைய 2005 ஏப்ரல் 1ஆம் நாளைய இருப்புநிலைக் குறிப்பு பின்வருமாறு:

| பொறுப்புகள் | | ரூ. | சொத்துகள் | | ரூ. |
|---|---|---|---|---|---|
| பற்பல கடனீந்தோர் | | 24,000 | கையிருப்பு ரொக்கம் | | 2,000 |
| முதல் கணக்குகள்: | | | வங்கியிருப்பு ரொக்கம் | | 19,000 |
| நாராயணன் | 60,000 | | பற்பல கடனாளிகள் | 12,000 | |
| பெருமாள் | 60,000 | 1,20,000 | கழிக்க: ஐயக்கடன் | | |
| | | | ஒதுக்கு | 1,000 | 11,000 |
| | | | சரக்கிருப்பு | | 24,000 |
| | | | அறைகலன் | | 8,000 |
| | | | கட்டடம் | | 80,000 |
| | | 1,44,000 | | | 1,44,000 |

அவர்கள் பின்வரும் பகிர்வுகளில் பழனி என்பவரைக் கூட்டாண்மையில் சேர்த்துக் கொண்டனர்.

அ) சரக்கிருப்பு மற்றும் அறைகலன் ஆகியவற்றில் 10% தேய்மானம் நீக்குவது.

ஆ) கட்டடத்தின் மதிப்பை ரூ.15,000 உயர்த்துவது.

இ) ஐயக்கடன் ஒதுக்கு ரூ.1,500 ஆக அதிகரிப்பது.

மறுமதிப்பீட்டுக் கணக்கு, முதல் கணக்குகள் மற்றும் சரிக்கட்டுகளுக்குப்பின் இருப்புநிலைக் குறிப்பு ஆகியவற்றைத் தயார் செய்க.

(விடை: மறுமதிப்பீட்டு இலாபம் ரூ.11,300; இருப்புநிலைக் குறிப்பு மொத்தம் ரூ.1,55,300)

15. கீதா, சீதா என்ற கூட்டாளிகள் முறையே 2:1 எனும் விகிதத்தில் இலாப நட்டம் பகிர்ந்து கொள்கின்றனர். அவர்களின் 2004 டிசம்பர் 31ஆம் நாளைய இருப்பு நிலைக் குறிப்பு பின்வருமாறு.

| பொறுப்புகள் | | ரூ. | சொத்துகள் | ரூ. |
|---|---|---|---|---|
| பற்பல கடனீந்தோர் | | 60,000 | வங்கி | 24,000 |
| பொதுக்காப்பு | | 45,000 | நிலமும் கட்டடமும் | 1,45,000 |
| இலாப நட்டக் க/கு | | 60,000 | பொறியும், பொறித் தொகுதியும் | 1,00,000 |
| முதல் கணக்குகள்: | | | | |
| கீதா | 1,40,000 | | சரக்கிருப்பு | 60,000 |
| சீதா | 80,000 | 2,20,000 | பற்பல கடனாளிகள் | 56,000 |
| | | 3,85,000 | | 3,85,000 |

அவர்கள் பின்வரும் பகிர்வுகளுக்குட்பட்டு லதா என்பவரைச் சேர்த்துக்கொள்ள முடிவு செய்தனர்.

அ) நிலம் கட்டடத்தின் மதிப்பை 20% உயர்த்துவது.

ஆ) பொறியும் பொறித்தொகுதி 5% மற்றும் சரக்கிருப்பு 10% தேய்மானம் நீக்குவது.

இ) இழப்பீடுகள் கோரப்பட்டுள்ளதற்கு ரூ.3,000 ஒதுக்கு உருவாக்குவது.

மறுமதிப்பீட்டுக் கணக்கு, முதல் கணக்குகள் மற்றும் இருப்பு நிலைக் குறிப்பு தயாரிக்கவும்.

(விடை: மறுமதிப்பீட்டு இலாபம் ரூ.15,000; இருப்பு நிலைக்குறிப்பு மொத்தம் ரூ.4,03,000)

**குவிந்த காப்பு, பகிர்ந்து தரா இலாபம் அல்லது நட்டம் மாற்றுதல்:**

16. அமலா, விமலா என்ற ஒரு கூட்டாண்மை நிறுவனத்தின் கூட்டாளிகளில் முறையே 5:3 எனும் விகிதத்தில் இலாபம்



பகிர்ந்து வருகின்றனர். 1.4.2004 அன்று ஏடுகளில் காப்பு நிதி 48,000 ஆகக் காட்டுகிறது. அதே நாளில் கோமளா என்பவரைச் சேர்க்க முடிவெடுத்தனர். குறிப்பேட்டுப் பதிவு தருக.

17. காயத்ரி, சுமித்ரா என்ற கூட்டாளிகள் முறையே 3:2 எனும் விகிதத்தில் இலாபம் பகிர்ந்து கொள்கின்றனர். 31.12.2002 அன்று நிறுவனத்தின் ஏடுகள் பொதுக்காப்பு ரூ.50,000 ஆகவும் இலாப நட்டக் கணக்கு பற்று இருப்பாக ரூ.30,000 மும் காட்டுகின்றன. பவித்ரா என்பவரை கூட்டாண்மையில் சேர்ப்பதென முடிவு எடுத்தனர். குறிப்பேட்டுப் பதிவுகள் தருக.

**நற்பெயர் குறித்து ஆவன செய்தல்**

18. ஜபீன், கதிஜா என்ற கூட்டாளிகள் முறையே 2:1 எனும் விகிதத்தில் இலாப நட்டங்க்ள் பகிர்ந்து வருகின்றனர். அவர்கள் சுல்தானா என்பவரை சேர்த்துக் கொண்டனர். அவர்களுடைய புதிய இலாப விகிதம் 3:2:1. சேர்ப்பின் பொழுது நற்பெயர் ஏடுகளில் இல்லாததால் ரூ.36,000 என மதிப்பிடப்பட்டு தோற்றுவிக்கப்பட்டது.

மறுமதிப்பீட்டு முறையில் நற்பெயர் குறித்த குறிப்பேட்டுப் பதிவு தருக.

19. பொன்மலர், தேன்மொழி என்ற கூட்டாளிகள் முறையே 7:3 விகிதத்தில் இலாபம் பகிர்ந்து வந்தனர். அவர்கள் கனிமொழி என்பவரை 1/6 கூட்டுக்குச் சேர்ப்பதென முடிவு செய்தனர். ஏடுகளில் நற்பெயர் ரூ.60,000 ஆகக் காட்டுகிறது. ஆனால் சேர்ப்பின் பொழுது ரூ.40,000 என மதிப்பிடப்பட்டது. நற்பெயரின் ஒப்புக்கொள்ளப்பட்ட மதிப்புக்கு பதிவு தருக.

20. கலாவதி, மாலதி என்ற கூட்டாளிகள் முறையே 4:3 எனும் விகிதத்தில் இலாபம் பகிர்ந்து வந்தனர். லீலாவதி என்பவரை 1/3 கூட்டுக்குச் சேர்த்துக் கொண்டனர். நற்பெயர் மூன்று ஆண்டுகளின் சராசரி இலாபத்தில் இரண்டு ஆண்டு கொள்முதல் எனக்கொண்டு

மதிப்பிடப்பட்டது. மூன்று ஆண்டுகளின் இலாபங்கள் முறையே ரூ.44,000, ரூ.56,000, ரூ.68,000 ஆகும். கீழ்க்காணும் தருணங்களில் குறிப்பேட்டுப் பதிவுகளைத் தருக.

அ) நற்பெயர் இதுவரை ஏடுகளில இல்லாமலிருந்தால்

ஆ) ஏடுகளில் நற்பெயரின் மதிப்பு ரூ.28,000 எனக் காட்டப்பட்டிருந்தால்

இ) ஏடுகளில் நற்பெயரின் மதிப்பு ரூ.1,68,000 எனக் காட்டப்பட்டிருந்தால்

(விடை: நற்பெயர் ரூ.1,12,000)

**அனைத்து அல்லது சில சரிக்கட்டுதல்கள் இணைந்த வினாக்கள்:**

21. அமுதா, ரமா என்ற கூட்டாளிகள் முறையே 3:2 எனும் விகிதத்தில் இலாபம் பகிர்ந்து வந்தனர். 31.3.2005 ஆம் நாளைய இருப்பு நிலைக்குறிப்பு பின்வருமாறு:

| பொறுப்புகள் | | ரூ. | சொத்துகள் | ரூ. |
|---|---|---|---|---|
| பற்பல கடனீந்தோர் | | 80,000 | வங்கி | 10,000 |
| செலுத்துதற்குரிய | | | பற்பல கடனாளிகள் | 30,000 |
| மாற்றுச்சீட்டுகள் | | 20,000 | சரக்கிருப்பு | 20,000 |
| முதல் கணக்குகள்: | | | இயந்திரம் | 40,000 |
| அமுதா | 40,000 | | நிலமும் கட்டடமும் | 70,000 |
| ரமா | 30,000 | 70,000 | | |
| | | 1,70,000 | | 1,70,000 |

1.4.2005 அன்று லதா என்பவரை பின்வரும் பகிர்வுகளுக்குட்பட்டு சேர்த்துக்கொள்ள முடிவு செய்தனர்.

அ) லதா ரூ.30,000 முதல் கொண்டு வருவது.

ஆ) ஏடுகளில் நற்பெயர் ரூ.20,000 எனத் தோற்றுவிப்பது.

இ) நிலம்–கட்டடத்தை 10% மதிப்பேற்றம் செய்வது.

ஈ) சரக்கிருப்பை ரூ.3,000 குறைப்பது.

உ) கொடுபடாப் பொறுப்பு ரூ.2,000 உருவாக்குவது.

மறுமதிப்பீட்டுக் கணக்கு, முதல் கணக்குகள், வங்கிக் கணக்கு புதிய கூட்டாண்மையின் இருப்பு நிலைக் குறிப்பு ஆகியவற்றைத் தயாரிக்கவும்.



(விடை: மறுமதிப்பீட்டு இலாபம் ரூ.2,000; இருப்புநிலைக் குறிப்பு மொத்தம் ரூ.2,24,000)

22. காவேரி, பவானி என்ற கூட்டாளிகள் முறையே 65%, 35% என்றவாறு இலாபம் பகிர்ந்து கொள்கின்றனர். 1.5.2004 ஆம் நாளைய இருப்பு நிலைக் குறிப்பு பின்வருமாறு:

| பொறுப்புகள் | | ரூ. | சொத்துகள் | ரூ. |
|---|---|---|---|---|
| பற்பல கடனீந்தோர் | | 25,000 | ரொக்கம் | 2,000 |
| வங்கி மேல்வரைப்பற்று | | 13,000 | கடனாளிகள் | 30,000 |
| இலாப நட்டக் க/கு | | 14,000 | சரக்கிருப்பு | 20,000 |
| முதல்: | | | அறைகலன் | 8,000 |
| காவேரி | 40,000 | | நிலம் கட்டடம் | 50,000 |
| பவானி | 30,000 | 70,000 | நற்பெயர் | 12,000 |
| | | 1,22,000 | | 1,22,000 |

அவர்கள் தாமிரபரணி என்பவரை 1/10 கூட்டுக்கு பின்வரும் பகிர்வுகளுக்குடபட்டு கூட்டாண்மையில் சேர்த்துக்கொண்டனர்.

அ) தாமிரபரணி ரூ.30,000 முதல் கொண்டு வருவது

ஆ) நற்பெயரின் தற்பொழுதைய மதிப்பு ரூ.15,000 ஆக அதிகரிப்பது.

இ) கொடுபடாமலுள்ள பழுதுபார்ப்புச் செலவுகளுக்கு ரூ.1,000 ஒதுக்குவது.

ஈ) நிலம்—கட்டடத்தின் தற்பொழுதைய மதிப்பு ரூ.60,000 ஆகக் கொள்வது.

மறுமதிப்பீட்டுக் கணக்கு, முதல் கணக்குகள், வங்கிக்கணக்கு மற்றும் புதிய கூட்டாண்மை நிறுவனத்தின் இருப்புநிலைக் குறிப்பு ஆகியவற்றைத் தயார் செய்க.

(விடை: மறுமதிப்பீட்டு இலாபம் ரூ.9,000; இருப்புநிலைக் குறிப்பு மொத்தம் ரூ.1,65,000).

23. பிரசன்னா, நிர்மலா என்ற கூட்டாளிகள் முறையே 7:5 எனும் விகிதத்தில் இலாப நட்டம் பகிர்ந்து வந்தனர்.

அவர்களுடைய 2004 டிசம்பர் 31ஆம் நாளன்றைய இருப்புநிலைக் குறிப்பு பின்வருமாறு:

| பொறுப்புகள் | ரூ. | சொத்துகள் | ரூ. |
|---|---|---|---|
| முதல் : | | நிலம், கட்டடம் | 80,000 |
| பிரசன்னா 60,000 | | பொறி, பொறித்தொகுதி | 20,000 |
| நிர்மலா 50,000 | 1,10,000 | முதலீடுகள் | 40,000 |
| காப்பு நிதி | 30,000 | சரக்கிருப்பு | 22,000 |
| பற்பல கடனீந்தோர் | 22,000 | பற்பல கடனாளிகள் 10,000 | |
| செலுத்தற்குரிய | | கழிக்க: ஐயக்கடன் | |
| மாற்றுச்சீட்டுகள் | 13,600 | ஒதுக்கு 400 | 9,600 |
| | | ரொக்கம் | 4,000 |
| | 1,75,600 | | 1,75,600 |

2005 ஜனவரி 1ஆம் நாள் பரிமளா என்பவரை கீழ்க்காணும் பகிர்வுகளுக்கு உட்பட்டு சேர்த்தனர்.

அ) பரிமளா ரூ.40,000, 1/3 கூட்டுக்கு முதல் கொண்டு வருவது.

ஆ) நிறுவனத்தின் நற்பெயரை ரூ.72,000 என மதிப்பிடுவது.

இ) நிலம் ரூ.90,000 எனவும் முதலீடுகள் ரூ.50,000 எனவும் மதிப்பிடப்பட்டது.

ஈ) சரக்கிருப்பின் மதிப்பு ரூ.4,000 குறைக்கப்பட்டது.

உ) ஐயக்கடன் ஒதுக்கு ரூ.600 ஆக அதிகரிக்கப்பட்டது.

ஊ) கடனீந்தோரில் ரூ.1,000 போக்கெழுதுவது.

மறுமதிப்பீட்டுக் கணக்கு, கூட்டாளிகளின் முதல் கணக்குகள், வங்கிக்கணக்கு மற்றும் மாற்றியமைக்கப்பட்ட கூட்டாண்மையின் இருப்புநிலைக் குறிப்பு ஆகியவற்றைத் தயார் செய்க.

(விடை: மறுமதிப்பீட்டின் இலாபம் ரூ.16,800; இருப்புநிலைக் குறிப்பு மொத்தம் ரூ.3,03,400)

24. இலட்சுமி, சரசுவதி என்ற கூட்டாளிகள் முறையே முதல் விகிதத்தில் இலாபம் பகிர்ந்து வருகின்றனர். அவர்களின் 31.3.2005 ஆம் நாளைய இருப்புநிலைக் குறிப்பு பின்வருமாறு:



| பொறுப்புகள் | ரூ. | சொத்துகள் | ரூ. |
|---|---|---|---|
| பற்பல கடனீந்தோர் | 60,000 | வங்கி | 12,000 |
| செலுத்தற்குரிய | | பற்பல கடனாளிகள் | 40,000 |
| மாற்றுச்சீட்டுகள் | 40,000 | சரக்கிருப்பு | 40,000 |
| முதல் கணக்குகள்: | | பொறியும், பொறித் | |
| லட்சுமி 60,000 | | தொகுதியும் | 90,000 |
| சரசுவதி 40,000 | 1,00,000 | அறைகலன் | 18,000 |
| | 2,00,000 | | 2,00,000 |

அவர்கள் பின்வரும் இனங்களைக் கருத்தில் கொண்டு சுலோச்சனா என்பவரைக் 2005 ஏப்ரல் 1 அன்று கூட்டாண்மையில் சேர்த்துக் கொள்ள முடிவு எடுத்தனர்.

அ) சுலோச்சனா தன் 1/5 பங்குக்கு ரூ.50,000 முதல் கொண்டுவருவது.

ஆ) நற்பெயர் ரூ.40,000 என மதிப்பிடுவது.

இ) பொறியும் பொறித்தொகுதியும் மற்றும் அறைகலன் மீது 5% தேய்மானம் நீக்குவது.

ஈ) பற்பலக கடனாளிகள் மீது ஐயக்கடன் ஒதுக்கு 1½% உருவாக்குவது.

மறுமதிப்பீட்டுக் கணக்கு, முதல்கணக்குகள், வங்கிக்கணக்கு மற்றும் இருப்பு நிலைக் குறிப்பு ஆகியவற்றைத் தயார் செய்க.

(விடை: மறுமதிப்பீட்டு நட்டம் ரூ.6,000; இருப்புநிலைக் குறிப்பு மொத்தம் ரூ.2,84,000)

25. பாண்டியன், பல்லவன், சோழன் என்ற கூட்டாளிகள் முறையே 1/2, 1/3, 1/6 எனும் விகிதத்தில் இலாப நட்டம் பகிர்ந்து கொள்ளும் கூட்டாண்மை நிறுவனத்தின் 31.12.2004 ஆம் நாளன்றைய இருப்பு நிலைக் குறிப்பு பின்வருமாறு:

| பொறுப்புகள் | ரூ. | சொத்துகள் | ரூ. |
|---|---|---|---|
| பற்பல கடனீந்தோர் | 94,500 | ரொக்கம் | 10,000 |
| செலுத்தற்குரிய | | வங்கி | 1,20,000 |
| மாற்றுச்சீட்டுகள் | 31,500 | நிலமும் கட்டடமும் | 2,50,000 |
| காப்பு நிதி | 1,20,000 | அறைகலன் | 35,000 |
| கொடுபடாச் செலவுகள் | 4,000 | சரக்கிருப்பு | 1,45,000 |
| முதல் : | | கடனாளிகள் | 1,30,000 |
| பாண்டியன் 1,80,000 | | | |
| பல்லவன் 1,65,000 | | | |
| சோழன் 95,000 | 4,40,000 | | |
| | 6,90,000 | | 6,90,000 |

அவர்கள், பின்வரும் பகிர்வுகளுக்குட்பட்டு, 2005 ஜனவரி 1ஆம் நாள் சேரன் என்பவரைச் சேர்த்துக்கொள்ள முடிவு செய்தனர்.

அ) சேரன் தன்னுடைய 1/4 பங்குக்கு ரூ.80,000 முதல் கொண்டு வருவது.

ஆ) அறைகலன் மீது ரூ.3,500 தேய்மானம் நீக்குவது.

இ) சரக்கிருப்பு மதிப்பு 10% குறைப்பது.

ஈ) நிலம், கட்டடத்தின் மதிப்பு ரூ.3,25,000 ஆக மதிப்பேற்றம் செய்வது.

மறுமதிப்பீட்டுக் கணக்கு, முதல் கணக்குகள், வங்கிக் கணக்கு மற்றும் மாற்றியமைக்கப்பட்ட கூட்டாண்மையின் இருப்பு நிலைக் குறிப்பு ஆகியவற்றைத் தயார் செய்க. மேலும் புதிய இலாப விகிதத்தைக் கண்டுபிடிக்கவும்.

(விடை: புதிய இலாப விகிதம் 3:2:1:2;
மறுமதிப்பீட்டு இலாபம் ரூ.57,000;
இருப்புநிலைக் குறிப்பு மொத்தம் ரூ.8,27,000)

26. A, B என்ற கூட்டாளிகள் 6:4 எனும் விகிதத்தில் இலாபம் பகிர்ந்து வந்தனர். 2000 ஜனவரி 1 அன்று C என்பவரை 1/3 பங்குக்குச் சேர்த்துக் கொண்டனர். பின்வரும் நிபந்தனைகளுக்கு ஒப்புக் கொண்டனர்.



அ) C என்பவர் ரூ.25,000 முதல் கொண்டு வரவேண்டும்).

ஆ) நற்பெயர் ரூ.26,000 என மதிப்பிடப்படும்.

இ) நிலம், கட்டடம் 40% மதிப்பேற்றம் செய்யப்படும்.

ஈ) பொறி, பொறித்தொகுதி 10% தேய்மானம் நீக்கப்படும்.

உ) ஐயக்கடன் ஒதுக்கு ரூ.800 அதிகரிக்கப்படும்.

ஊ) பற்பல கடனீந்தோரில் ரூ.1,000 போக்கெழுதப்படும்.

C யின் சேர்ப்புக்கு முந்தைய 31.12.1999 ஆம் நாளைய இருப்பு நிலைக் குறிப்பு பின்வருமாறு:

| பொறுப்புகள் | ரூ. | சொத்துகள் | ரூ. |
|---|---|---|---|
| பற்பல கடனீந்தோர் | 29,000 | ரொக்கம் | 9,000 |
| செலுத்தற்குரிய | | நிலமும், கட்டடமும் | 25,000 |
| மாற்றுச்சீட்டுகள் | 6,000 | பொறி, பொறித்தொகுதி | 30,000 |
| முதல் : | | சரக்கிருப்பு | 15,000 |
| A 50,000 | | பற்பல கடனாளிகள் 20,000 | |
| B 35,000 | 85,000 | கழிக்க: ஐயக்கடன் | |
| பொதுக்காப்பு | 16,000 | ஒதுக்கு 1,000 | 19,000 |
| | | நற்பெயர் | 10,000 |
| | | இலாப நட்டக் க/கு | 28,000 |
| | 1,36,000 | | 1,36,000 |

குறிப்பேட்டுப் பதிவுகள் தந்து, முக்கிய பேரேட்டுக் கணக்குகளையும், C யின் சேர்ப்புக்குப் பிறகு 1.1.2000 ஆம் நாளின் புதிய இருப்பு நிலைக் குறிப்பையும் தயார் செய்க.

(ஜுன் 2003)

(விடை: மறுமதிப்பீட்டு இலாபம் ரூ.7,200;
இருப்புநிலைக்குறிப்பு மொத்தம் ரூ.1,55,200)

27. A, B என்ற கூட்டாளிகள் முறையே 3:2 எனும் விகிதத்தில் இலாப நட்டங்கள் பகிர்ந்து வந்தனர். அவர்களது 31.12.2001 ஆம் நாளைய இருப்பு நிலைக் குறிப்பு பின்வருமாறு:

| பொறுப்புகள் | | ரூ. | சொத்துகள் | | ரூ. |
|---|---|---|---|---|---|
| முதல்: | | | நிலம், கட்டடம் | | 40,000 |
| A | 30,000 | | பொறி, இயந்திரம் | | 10,000 |
| B | 25,000 | 55,000 | முதலீடுகள் | | 10,000 |
| காப்பு நிதி | | 10,000 | சரக்கிருப்பு | | 11,000 |
| பற்பல கடனீந்தோர் | | 16,000 | இலாப நட்டக் க/கு | | 10,000 |
| செலுத்தற்குரிய | | | பற்பல கடனாளிகள் | 5,000 | |
| மாற்றுச்சீட்டுகள் | | 6,800 | கழிக்க: ஐயக்கடன் | | |
| | | | ஒதுக்கு | 200 | 4,800 |
| | | | ரொக்கம் | | 2,000 |
| | | 87,800 | | | 87,800 |

அவர்கள் C என்பவரை 1.1.2002 அன்று பின்வரும் பகிர்வுகளில் சேர்த்துக்கொள்ள முடிவு செய்தனர்.

1) C என்பவர் தன் 1/3 பங்குக்கு, ரூ.20,000 முதல் கொண்டு வருவது.

2) நற்பெயரை ரூ.36,000 என ஏடுகளில் தோற்றுவிப்பது.

3) நிலம், கட்டடம் ரூ.45,000 எனவும் முதலீடுகள் ரூ.25,000 எனவும் மதிப்பீடு செய்வது.

4) சரக்கிருப்பின் மதிப்பை ரூ.2,000 போக்கெழுதுவது.

5) ஐயக்கடன் ஒதுக்கை ரூ.300 ஆக அதிகப்படுத்துவது.

6) பற்பல கடனீந்தோரில் ரூ.500 போக்கெழுதுவது.

குறிப்பேட்டுப் பதிவுகள் தந்து, மறுமதிப்பீட்டுக் கணக்கு, கூட்டாளிகளின் முதல் கணக்குகள், புதிய கூட்டாண்மையின் இருப்பு நிலைக் குறிப்பு ஆகியவற்றைக் காட்டுக.

(அக்டோபர் 2002)

(விடை: மறுமதிப்பீட்டு இலாபம் ரூ.18,400;
இருப்பு நிலைக் குறிப்பு மொத்தம் ரூ.1,51,700)

அத்தியாயம் – 8

# கூட்டாண்மைக் கணக்குகள் - விலகல்
## (PARTNERSHIP ACCOUNTS - RETIREMENT)

---

**கற்றல் நோக்கங்கள்**

இந்த அத்தியாயத்தைக் கற்றபின், நீங்கள்

- ➢ கூட்டாளி விலகுதலின் பொருள் மற்றும் காரணங்கள் தெரிந்து கொள்ளலாம்.
- ➢ புதிய இலாபப் பகிர்வு விகிதம் மற்றும் ஆதாய விகிதம் கணக்கிடலாம்.
- ➢ மறுமதிப்பீட்டுக் கணக்கைத் தயாரிக்கலாம்.
- ➢ நற்பெயர் குறித்த கணக்கியல் முறைகளைப் புரிந்து கொள்ளலாம்.
- ➢ விலகும் கூட்டாளியின் கணக்கு தீர்க்கும் வகையினைத் தெரிந்து கொள்ளலாம்.

---

இந்தியக் கூட்டாண்மைச் சட்டம் 1932, பிரிவு 32(1)—ன் படி, பின்வரும் நிலைகளில் ஒரு கூட்டாளி கூட்டாண்மை நிறுவனத்திலிருந்து விலகலாம்.

1. அனைத்துக் கூட்டாளிகளின் ஒப்புதலுடன்
2. கூட்டாளிகளின் வெளிப்படை ஒப்பந்தத்தின்படி
3. விருப்பமுறிக் கூட்டாண்மையில், விலகும் கூட்டாளி விலக விரும்புவதை அனைத்துக் கூட்டாளிகளுக்கும் எழுதப்பட்ட அறிக்கை அளிப்பதன் மூலம்.

சில நேரங்களில், முதுமை, உடல்நிலை சரியின்மை மற்றும் இதர காரணங்களால் ஒரு கூட்டாளி விலகலாம். சட்டப்படி விலகுதலின்போது, பழைய கூட்டாண்மை முடிவுக்கு வருகிறது. இதர கூட்டாளிகளுடன் புதிய கூட்டாண்மை உருவாகின்றது. எனினும் நிறுவனம் தொடர்ந்து நடைபெறுகின்றது. கூட்டாண்மை நிறுவனத்திலிருந்து விலகும் நபருக்கு வெளிச்செல்லும் கூட்டாளி (Outgoing Partner) அல்லது விலகும் கூட்டாளி (Retiring Partner) என்று பெயர். விலகும் கூட்டாளி விலகுவதற்கு முன்பு வரை, நிறுவனத்தின் அனைத்துக் கடன்களுக்கும் பொறுப்பாவார். ஆனால், விலகலுக்குப் பின் நடைபெறும் எந்தவித செயல்களுக்கு விலகும் கூட்டாளி பொறுப்பு ஏற்கமாட்டார்.

ஒரு கூட்டாளி விலகும்பொழுது, அந்நிறுவனத்தின் சொத்துக்களில் அக்கூட்டாளிக்குரிய பங்கினைக் கணக்கிட்டு செலுத்த வேண்டும். விலகும் கூட்டாளிக்குரிய தொகையினை நிர்ணயிக்கும்பொழுது சில சரிக்கட்டுதல்கள் செய்யப்பட வேண்டும். இச்சரிக்கட்டுதல்கள் ஏறத்தாழப் புதிய கூட்டாளியைச் சேர்ப்பதற்குச் செய்த சரிக்கட்டுதல்களை ஒத்திருக்கும்.

## 8.1 சரிக்கட்டுதல்கள்:

கூட்டாளி ஒருவர் விலகும்பொழுது, பின்வரும் கணக்கியல் சரிக்கட்டுதல்கள் செய்ய வேண்டியுள்ளன.

1. புதிய இலாபப் பகிர்வு விகிதம் மற்றும் ஆதாய விகிதம் கணக்கிடல்.
2. சொத்துகள் – பொறுப்புகளை மறுமதிப்பீடு செய்தல்.
3. பகிர்ந்து தரா இலாபம் அல்லது நட்டம் ஆகியவற்றை மாற்றுதல்.
4. குவிந்த காப்புகளை மாற்றுதல்.
5. நற்பெயர் குறித்து ஆவன செய்தல்.
6. விலகும் கூட்டாளியின் கணக்கைத் தீர்த்தல்.

### 8.1.1 புதிய இலாப விகிதம் மற்றும் ஆதாய விகிதம் கணக்கிடல்:

கூட்டாளி ஒருவர் கூட்டாண்மையிலிருந்து விலகும் பொழுது, அக்கூட்டாண்மையில் தொடர்ந்து இருக்கும் இதர



கூட்டாளிகள் விலகும் கூட்டாளியின் இலாபப் பங்கினைப் பகிர்ந்து கொள்கின்றனர். இதனால், இதர கூட்டாளிகளின் புதிய இலாப விகிதம் கணக்கிட வேண்டியது அவசியமாகிறது.

**புதிய இலாபப் பகிர்வு விகிதம்** (New Profit Sharing ratio) :

தொடரும் கூட்டாளிகள் வருங்காலத்தில் ஏற்படும் இலாப நட்டங்களைப் பகிர்ந்து கொள்ள முடிவெடுக்கும் விகிதமே புதிய இலாபப் பகிர்வு விகிதம் எனப்படும்.

புதிய இலாபப் பகிர்வு விகிதம் = பழைய இலாபப் பகிர்வு விகிதம் + ஆதாய விகிதம்

புதிய பங்கு = பழைய பங்கு + பெறப்பட்ட பங்கு (ஆதாயம்)

**ஆதாய விகிதம்** (Gaining Ratio):

தொடரும் கூட்டாளிகள் வெளிச்செல்லும் கூட்டாளியின் பங்கினைப் பகிர்ந்து கொள்ளும் விகிதமே ஆதாய விகிதம் எனப்படும். இந்த விகிதம் புதிய இலாபப் பகிர்வு விகிதத்திலிருந்து பழைய இலாபப் பகிர்வு விகிதத்தைக் கழித்துக் கணக்கிடலாம்.

ஆதாய விகிதம் = புதிய இலாபப் பகிர்வு விகிதம் – பழைய இலாபப் பகிர்வு விகிதம்

ஆதாயம் = புதிய பங்கு – பழைய பங்கு

ஆதாய விகிதம் கணக்கிடுவதன் நோக்கம் விலகும் கூட்டாளிக்கு தொடரும் கூட்டாளிகள் ஒவ்வொருவரும் செலுத்தக்கூடிய ஈட்டுத்தொகையை நிர்ணயிக்க உதவுவதாகும்.

**தியாக விகிதத்துக்கும் ஆதாய விகிதத்துக்கும் உள்ள வேறுபாடுகள்:**

தியாக விகிதத்துக்கும் ஆதாய விகிதத்துக்கும் உள்ள வேறுபாடுகள் பின்வருமாறு:

| அடிப்படை | தியாக விகிதம் | ஆதாய விகிதம் |
|---|---|---|
| 1. பொருள் | புதிய கூட்டாளிக்கு தருவதாக பழைய கூட்டாளிகள் ஒப்புக் கொண்ட தியாகப் பங்குகளின் விகிதம் ஆகும். | தொடரும் கூட்டாளிகள் வெளிச்செல்லும் கூட்டாளியிடம் இருந்து பெற்ற பங்குகளின் விகிதம் ஆகும். |

| அடிப்படை | தியாக விகிதம் | ஆதாய விகிதம் |
|---|---|---|
| 2. நோக்கம் | உள்வரும் கூட்டாளி பழைய கூட்டாளிகளுக்குத் தரும் ஈட்டுத் தொகை நிர்ணயிக்க உதவுகிறது. | வெளிச் செல்லும் கூட்டாளிக்கு தொடரும் கூட்டாளிகள் தரும் ஈட்டுத் தொகை நிர்ணயிக்க உதவுகிறது. |
| 3. கணக்கிடுதல் | பழைய விகிதத்திலிருந்து புதிய விகிதத்தைக் கழித்துக் கணக்கிடப் படுகிறது. | புதிய விகிதத்திலிருந்து பழைய விகிதத்தைக் கழித்துக் கணக்கிடப்படுகிறது. |
| 4. காலம் | புதிய கூட்டாளி சேர்ப்பின்போது கணக்கிடப்படுகிறது. | கூட்டாளி ஒருவர் விலகும்பொழுது கணக்கிடப்படுகிறது. |

புதிய இலாப விகிதம் மற்றும் ஆதாய விகிதம் பல்வேறு சூழ்நிலைகளில் எவ்வாறு கணக்கிடப்படுகிறது என்பதைப் பார்ப்போம்.

1. புதிய இலாப விகிதம் குறிப்பிடாத பொழுது
2. சமனற்ற ஆதாயம்
3. சமமான ஆதாயம்
4. ஒரு கூட்டாளிக்கு மட்டும் முழு ஆதாயம்
5. புதிய இலாபப் பகிர்வு விகிதம் குறிப்பிடும் பொழுது

## 8.2 புதிய இலாபப் பகிர்வு விகிதம் மற்றும் ஆதாய விகிதம் கணக்கீடு:

### 1. புதிய இலாபப் பகிர்வு விகிதம் குறிப்பிடாத பொழுது

புதிய இலாபப் பகிர்வு விகிதம் குறித்து ஒன்றும் குறிப்பிடாத பொழுது, தொடரும் கூட்டாளியின் பழைய இலாபப் பகிர்வு விகிதமே அவர்களின் புதிய இலாபப் பகிர்வு விகிதம் ஆகும். இது பின்வரும் எடுத்துக்காட்டின் மூலம் நிரூபிக்கப்படுகிறது.



**எடுத்துக்காட்டு : 1**

A,B,C, என்ற கூட்டாளிகள் முறையே 5:3:2 எனும் விகிதத்தில் இலாபம் பகிர்ந்து வந்தனர். C என்பவர் விலகுகிறார். புதிய இலாபப் பகிர்வு விகிதம் மற்றும் ஆதாய விகிதத்தைக் கண்டுபிடிக்க.

**விடை :**

| | A | : | B | : | C |
|---|---|---|---|---|---|
| பழைய இலாபப் பகிர்வு விகிதம் = | 5 | : | 3 | : | 2 |
| பழைய பங்கு = | $\frac{5}{10}$ | : | $\frac{3}{10}$ | : | $\frac{2}{10}$ |
| புதிய இலாபப் பகிர்வு விகிதம் = | 5 | : | 3 | | |
| புதிய பங்கு = | $\frac{5}{8}$ | : | $\frac{3}{8}$ | | |

ஆதாயம் $= \frac{5}{8} - \frac{5}{10} : \frac{3}{8} - \frac{3}{10}$

$= \frac{25-20}{40} = \frac{5}{40} : \frac{15-12}{40} = \frac{3}{40}$

∴ ஆதாய விகிதம் = 5 : 3

**2. சமனற்ற ஆதாயம்** (Unequal gain):

**எடுத்துக்காட்டு : 2**

D, E, F என்ற கூட்டாளிகள் முறையே 5:3:2 எனும் விகிதத்தில் இலாபம் பகிர்ந்து வந்தனர். F என்பவர் விலகுகிறார். அவருடைய பங்கை D மற்றும் E 2:1 எனும்

விகிதத்தில் எடுத்துக் கொள்கின்றனர். புதிய இலாபப் பகிர்வு விகிதம் கணக்கிடுக.

**விடை:**

| | | D | : | E | : | F |
|---|---|---|---|---|---|---|
| பழைய இலாபப் பகிர்வு விகிதம் | = | 5 | : | 3 | : | 2 |

பழைய பங்கு $= \frac{5}{10} : \frac{3}{10} : \frac{2}{10}$

ஆதாய விகிதம் = 2 : 1

ஆதாயம் $= \frac{2}{3} \times \frac{2}{10} : \frac{1}{3} \times \frac{2}{10}$

$= \frac{4}{30} : \frac{2}{30}$

புதிய பங்கு $= \frac{5}{10} + \frac{4}{30} : \frac{3}{10} + \frac{2}{30}$

$= \frac{15 + 4}{30} = \frac{19}{30} : \frac{9+2}{30} = \frac{11}{30}$

புதிய இலாபப் பகிர்வு விகிதம் = 19 : 11

**3. சமமான ஆதாயம்** (Equal gain):

**எடுத்துக்காட்டு : 3**

G, H, I என்ற கூட்டாளிகள் முறையே 5:3:2 எனும் விகிதத்தில் இலாபம் பகிர்ந்து வந்தனர். I என்பவர் விலகும்பொழுது அவரின் பங்கை G மற்றும் H சமமாக எடுத்துக் கொள்கின்றனர். G மற்றும் H ஆகியோரின் புதிய இலாப விகிதம் யாது?



**விடை:**

| | | G | | H | | I |
|---|---|---|---|---|---|---|
| பழைய விகிதம் | = | 5 | : | 3 | : | 2 |

பழைய பங்கு $= \frac{5}{10} : \frac{3}{10} : \frac{2}{10}$

ஆதாய விகிதம் = 1 : 1

ஆதாயம் $= \frac{1}{2} \times \frac{2}{10} : \frac{1}{2} \times \frac{2}{10}$

$= \frac{2}{20} = \frac{1}{10} : \frac{2}{20} = \frac{1}{10}$

புதிய பங்கு $= \frac{5}{10} + \frac{1}{10} : \frac{3}{10} + \frac{1}{10}$

$= \frac{6}{10} : \frac{4}{10}$

புதிய இலாபப் பகிர்வு விகிதம் = 6 : 4

= 3 : 2

**4. ஒரு கூட்டாளிக்கு மட்டும் முழு ஆதாயம்**
(Entire gain by one partner only)

**எடுத்துக்காட்டு 4:**

J, K, L என்ற கூட்டாளிகள் முறையே 5:3:2 எனும் விகிதத்தில் இலாபம் பகிர்ந்து வந்தனர். L என்பவர் விலகும்பொழுது, அவருடைய பங்கை K என்பவர்

முழுவதுமாக எடுத்துக் கொள்கிறார். தொடரும் கூட்டாளிகளின் புதிய இலாபப் பகிர்வு விகிதம் மற்றும் ஆதாய விகிதம் கணக்கிடுக.

**விடை:**

**அ) புதிய விகிதம்:**

| | J | | K | | L |
|---|---|---|---|---|---|
| பழைய இலாபப் பகிர்வு விகிதம் = | 5 | : | 3 | : | 2 |

பழைய பங்கு $= \frac{5}{10} : \frac{3}{10} : \frac{2}{10}$

ஆதாயம் (K மட்டும்) $=$ ----- $: \frac{2}{10}$

புதிய பங்கு $= \frac{5}{10} : \frac{3}{10} + \frac{2}{10} = \frac{5}{10}$

$= 5 : 5$

புதிய இலாபப் பகிர்வு விகிதம் $= 1 : 1$ i.e. சமம்

**ஆ) ஆதாய விகிதம்:**

ஆதாய விகிதம் = புதிய விகிதம் – பழைய விகிதம்

J என்பவரின் ஆதாயம் $= \frac{5}{10} - \frac{5}{10}$

= ஒன்றுமில்லை

K என்பவரின் ஆதாயம் $= \frac{5}{10} - \frac{3}{10}$



$= \frac{2}{10}$ (அல்லது) $\frac{1}{5}$

## 5. புதிய இலாப விகிதம் தரும்பொழுது (New ratio is given):

**எடுத்துக்காட்டு : 5**

X, Y, Z என்ற கூட்டாளிகள் முறையே 5:3:2 எனும் விகிதத்தில் இலாபம் பகிர்ந்து வந்தனர். Z என்பவர் விலகலுக்குப் பிறகு X மற்றும் Y 3:2 எனும் விகிதத்தில் இலாபம் பகிர்ந்து கொள்ள ஒப்புக் கொண்டனர். ஆதாய விகித்தைக் கணக்கிடுக.

**விடை:**

| | X | | Y | | Z |
|---|---|---|---|---|---|
| பழைய இலாபப் பகிர்வு விகிதம் = | 5 | : | 3 | : | 2 |

பழைய பங்கு $= \frac{5}{10} : \frac{3}{10} : \frac{2}{10}$

புதிய விகிதம் $= 3 : 2$

புதிய பங்கு $= \frac{3}{5} : \frac{2}{5}$

ஆதாயம் $= \frac{3}{5} - \frac{5}{10} : \frac{2}{5} - \frac{3}{10}$

$= \frac{6-5}{10} = \frac{1}{10} : \frac{4-3}{10} = \frac{1}{10}$

$= \frac{1}{10} : \frac{1}{10}$

ஆதாய விகிதம் $= 1 : 1$

## 8.3 சொத்துகள், பொறுப்புகளை மறுமதிப்பீடு செய்தல்
(Revaluation of assets and liabilities):

கூட்டாளி ஒருவர் விலகும்பொழுது, நிறுவனத்தின் சொத்துகளையும் பொறுப்புகளையும் மறுமதிப்பீடு செய்ய வேண்டியது அவசியமாகிறது. விலகும் வரை உள்ள காலத்தில் ஏற்பட்ட அனைத்து இலாபங்களிலும் நட்டங்களிலும் விலகும் கூட்டாளிக்கு பங்கு உண்டு. எனவே மறுமதிப்பீடுக் கணக்கு ஒன்று ஆரம்பித்து, இலாப இனங்களை வரவு செய்யவும் நட்ட இனங்களை பற்று செய்யவும் வேண்டும். மறுமதிப்பீட்டின் இலாபம் அல்லது நட்டம் விலகும் கூட்டாளி உள்பட அனைத்துக் கூட்டாளிகளுக்கும் பழைய இலாப விகிதத்தில் மாற்றப்பட வேண்டும்.

மறுமதிப்பீட்டுப் பதிவுகள் புதிய கூட்டாளியைச் சேர்ப்பின் பொழுது செய்யப்பட்டவை போலவே செய்ய வேண்டும். அவைகள் :

**1. இலாப இனங்களுக்கு** (Profit items) :

அ) சொத்துகளின் மதிப்பு அதிகரித்தல் ஆ) பொறுப்புகளின் தொகை குறைதல் இ) பதிவு பெறா சொத்துகள் பதிதல்

| | | | |
|---|---|---|---|
| அந்தந்த சொத்துகள் க/கு | ப | ..... | |
| அந்தந்த பொறுப்புகள் க/கு | ப | ..... | |
| மறுமதிப்பீட்டுக் க/கு | | | ..... |

**2. நட்ட இனங்களுக்கு** (Loss items) :

அ) சொத்துகளின் மதிப்பு குறைதல் ஆ) பொறுப்புகளின் தொகை அதிகரித்தல் இ) பதிவுபெறா பொறுப்புகள் பதிவு செய்தல் ஈ) புதிய பொறுப்புகள் உருவாதல்

| | | | |
|---|---|---|---|
| மறுமதிப்பீட்டுக் க/கு | ப | ..... | |
| அந்தந்த சொத்துகள் க/கு | | | ..... |
| அந்தந்த பொறுப்புகள் க/கு | | | ..... |



**3. மறுமதிப்பீட்டின் இலாபம் (அ) நட்டம் மாற்றப்படுவற்கு**

**அ) இலாபமாயின்**

| | | | |
|---|---|---|---|
| மறுமதிப்பீட்டுக் க/கு | ப | ..... | |
| அனைத்துக் கூட்டாளிகளின் முதல் க/கு | | | ..... |

**ஆ) நட்டமாயின்**

| | | | |
|---|---|---|---|
| அனைத்து கூட்டாளிகளின் முதல் க/கு | | ..... | |
| மறுமதிப்பீட்டுக் க/கு | | | ..... |

### எடுத்துக்காட்டு : 6

பிரபா, கவிதா, மீனா என்ற கூட்டாளிகள் முறையே 3:2:1 எனும் விகிதத்தில் இலாபம் பகிர்ந்து வந்தனர். மீனா விலக விரும்புகிறார். அவர்கள் கீழ்க்கண்டவாறு நிறுவனத்தின் சொத்துகளையும் பொறுப்புகளையும் மறுமதிப்பீடு செய்தனர்.

அ) இயந்திரத்தின் மதிப்பில் ரூ.10,000, சரக்கிருப்பு மதிப்பில் ரூ.4,000 குறைப்பது.

ஆ) ஏடுகளில் பதிவு பெறாமலுள்ள முதலீடுகள் ரூ.5000 பதிவு செய்வது.

இ) பற்பல கடனீந்தோரிலிருந்து ரூ.3,000 போக்கெழுதுவது.

குறிப்பேட்டுப் பதிவுகள் தந்து, மறுமதிப்பீட்டுக் கணக்கு தயார் செய்க.

**விடை:**

**குறிப்பேட்டுப் பதிவுகள்**

| நாள் | விவரம் | பே.ப.எ. | பற்று ரூ. | வரவு ரூ. |
|---|---|---|---|---|
| | முதலீடுகள் க/கு ப | | 5,000 | |
| | பற்பல கடனீந்தோர் க/கு ப | | 3,000 | |
| | மறுமதிப்பீட்டுக் க/கு | | | 8,000 |
| | (மறுமதிப்பீட்டு இலாப இனங்கள்) | | | |

| | | | | |
|---|---|---|---|---|
| | மறுமதிப்பீட்டுக் க/கு ப | | 14,000 | |
| | இயந்திரக் க/கு | | | 10,000 |
| | சரக்கிருப்பு க/கு | | | 4,000 |
| | (மறுமதிப்பீட்டு நட்ட இனங்கள்) | | | |
| | பிரபா முதல் க/கு ப | | 3,000 | |
| | கவிதா முதல் க/கு ப | | 2,000 | |
| | மீனா முதல் க/கு ப | | 1,000 | |
| | மறுமதிப்பீட்டுக் க/கு | | | 6,000 |
| | (மறுமதிப்பீட்டு நட்டம் அனைத்து கூட்டாளிகளுக்கும் பழைய இலாப விகிதத்தில் மாற்றுவது) | | | |

ப **மறுமதிப்பீட்டுக் கணக்கு** வ

| விவரம் | ரூ. | விவரம் | ரூ. |
|---|---|---|---|
| இயந்திரக் க/கு | 10,000 | முதலீடுகள் க/கு | 5,000 |
| சரக்கிருப்பு க/கு | 4,000 | பற்பல கடனீந்தோர் க/கு | 3,000 |
| | | மறுமதிப்பீட்டு நட்டம் முதல் கணக்குகளுக்கு மாற்றுவது: | |
| | | பிரபா 3,000 | |
| | | கவிதா 2,000 | |
| | | மீனா 1,000 | 6,000 |
| | 14,000 | | 14,000 |

## 8.4 பகிர்ந்து தரா இலாபம் அல்லது நட்டத்தை மாற்றுதல் (Transfer of Undistributed Profit or Loss):

கூட்டாளி ஒருவர் விலகும்பொழுது, பகிர்ந்து தரா இலாபம் அல்லது நட்டம் ஏதும் இருப்பின் அனைத்துக் கூட்டாளிகளின் முதல் கணக்குகளுக்கு பழைய இலாப விகிதத்தில் மாற்றம் செய்ய வேண்டும்.



அதற்கான கணக்கியல் பதிவுகள்:

**அ) பகிர்ந்து தரா இலாபம் மாற்றுவது:**

இலாப நட்டக் க/கு ப .....
அனைத்துக் கூட்டாளிகளின் முதல் க/கு .....

**ஆ) பகிர்ந்து தரா நட்டம் மாற்றுவது:**

அனைத்து கூட்டாளிகளின் முதல் க/கு ப .....
இலாப நட்டக் க/கு .....

**எடுத்துக்காட்டு : 7**

பானுமதி, பாரதி, சாந்தி என்ற கூட்டாளிகள் முறையே 5:3:2 எனும் விகிதத்தில் இலாபம் பகிர்ந்து வந்தனர். 2005 ஏப்ரல் 1 அன்று சாந்தி விலக முடிவெடுத்தார். அந்நாளில் இலாப நட்டக் கணக்கு வரவு இருப்பாக ரூ.60,000 இருந்தது. குறிப்பேட்டுப் பதிவு தருக.

**விடை:**

**குறிப்பேட்டுப் பதிவுகள்**

| நாள் | விவரம் | பே.ப.எ. | பற்று ரூ. | வரவு ரூ. |
|---|---|---|---|---|
| 2005 ஏப்ரல் 1 | இலாப நட்டக் க/கு ப | | 60,000 | |
| | பானுமதி முதல் க/கு | | | 30,000 |
| | பாரதி முதல் க/கு | | | 18,000 |
| | சாந்தி முதல் க/கு | | | 12,000 |
| | (பகிர்ந்து தரா இலாபம் முதல் கணக்குகளுக்கு பழைய விகிதத்தில் மாற்றுவது) | | | |

## 8.5 குவிந்த காப்புகள் மாற்றுதல் (Transfer of Accumulated Reserves):

கூட்டாளி ஒருவர் விலகும்பொழுது, ஏதேனும் தொகை காப்பு, பொதுக்காப்பு, காப்பு நிதி, நிகழ்வடையா காப்பு

ஆகியவற்றிற்கு ஒதுக்கீடு செய்யப்பட்டிருந்தால், அத்தொகை அனைத்து கூட்டாளிகளின் (விலகும் கூட்டாளி உள்பட) முதல் கணக்குகளுக்கும் பழைய இலாப விகிதத்தில் மாற்ற வேண்டும்.

அதற்கான பதிவு

பொதுக்காப்புக் க/கு ப .....
அனைத்துக் கூட்டாளிகளின் முதல் க/கு .....

## எடுத்துக்காட்டு : 8

தங்கமுத்து, ஆனைமுத்து, வைரமுத்து என்ற கூட்டாளிகள் முறையே 3:3:2 எனும் விகிதத்தில் இலாப நட்டம் பகிர்ந்து வந்தனர். தங்கமுத்து என்பவர் விலக முடிவெடுத்த 2005 ஜூன் 1ஆம் நாள், நிறுவன ஏடுகளில் பொதுக் காப்பு ரூ.40,000 இருந்தது. பதிவு தருக.

**விடை:**

**குறிப்பேட்டுப் பதிவுகள்**

| நாள் | விவரம் | பே.ப.எ. | பற்று ரூ. | வரவு ரூ. |
|---|---|---|---|---|
| 2005 ஜூன் 1 | பொதுக்காப்புக் க/கு ப | | 40,000 | |
| | தங்கமுத்து முதல் க/கு | | | 15,000 |
| | ஆனைமுத்து முதல் க/கு | | | 15,000 |
| | வைரமுத்து முதல் க/கு | | | 10,000 |
| | (பொதுக்காப்பு கூட்டாளிகளின் முதல் கணக்குகளுக்கு மாற்றுவது) | | | |

## 8.6 நற்பெயர் குறித்து ஆவன செய்தல் (Treatment of Goodwill):

கூட்டாளி ஒருவர் விலகும்பொழுது, நிறுவனத்தின் நற்பெயரின் மதிப்பைச் சேர்க்கையில் செய்தது போன்றே



சரிகட்டுதல் வேண்டும். விலகலிலும், மறுமதிப்பீட்டு முறை மட்டுமே விளக்கப்படுகிறது.

### அ) நற்பெயர் நிறுவன ஏடுகளில் தோற்றுவித்தல்:

விலகலின் பொழுது, நற்பெயர் தற்பொழுதைய மதிப்பில் உருவாக்கப்பட்டு கணக்கில் கொண்டுவரப்படுகிறது.

அதற்கானப் பதிவு:

நற்பெயர் க/கு ப .....
அனைத்துக் கூட்டாளிகளின் முதல் க/கு .....
(தோற்றுவிக்கப்பட்ட நற்பெயர்
அனைத்து கூட்டாளிகளின் முதல்
கணக்குகளுக்கு பழைய இலாப
விகிதத்தில் மாற்றுவது)

### ஆ) நிறுவன ஏடுகளில் நற்பெயர் குறைவாகத் தோன்றுவது:

நற்பெயரின் மதிப்பு இருப்பு நிலைக்குறிப்பில் தற்பொழுதைய மதிப்பை விட குறைவாக தோற்றமளிக்கும் பொழுது, வேறுபாட்டுத் தொகை அனைத்துக் கூட்டாளிகளின் முதல் கணக்குகளுக்கு பழைய இலாப விகிதத்தில் மாற்ற வேண்டும்.

அதற்கானப் பதிவு:

நற்பெயர் க/கு ப .....
அனைத்துக் கூட்டாளிகளின் முதல் க/கு .....
(நற்பெயரின் மதிப்பு கூடுதல்
அனைத்து கூட்டாளிகளின் முதல் கணக்கு
களுக்கு பழைய இலாபப் பகிர்வு விகிதத்தில்
மாற்றுவது)

**இ) நிறுவன ஏடுகளில் நற்பெயர் அதிகமாகத் தோன்றுவது:**

இருப்பு நிலைக் குறிப்பிலுள்ள நற்பெயரின் மதிப்பு தற்பொழுதைய மதிப்பை விட கூடுதலாக இருக்கும்பொழுது, வேறுபாட்டுத் தொகை அனைத்துக் கூட்டாளிகளின் முதல் கணக்குகளுக்கு பழைய இலாப விகிதத்தில் மாற்ற வேண்டும்.

அதற்கானப் பதிவு:

| | | | |
|---|---|---|---|
| அனைத்துக் கூட்டாளிகளின் முதல் க/கு | ப | ..... | |
| நற்பெயர் க/கு | | | ..... |
| (நற்பெயரின் மதிப்பு குறைவு அனைத்து கூட்டாளிகளின் முதல் கணக்குகளுக்கு பழைய இலாபப் பகிர்வு விகிதத்தில் மாற்றுவது) | | | |

**எடுத்துக்காட்டு : 9**

தமிழ்ச்செல்வி, கலைச்செல்வி, தேன்மொழி என்ற கூட்டாளிகள் முறையே 5:3:2 எனும் விகித்தில் இலாபம் பகிர்ந்து வந்தனர். கலைச்செல்வி விலக முடிவெடுத்தார். நிறுவனத்தின் நற்பெயர் ரூ.40,000 என மதிப்பிடப்பட்டது.

கீழ்க்காண்பனவற்றிற்கு குறிப்பேட்டுப் பதிவுகள் தருக.

அ) நற்பெயர் நிறுவன ஏடுகளில் இல்லாமலிருந்தால்

ஆ) ஏடுகளில் நற்பெயரின் மதிப்பு ரூ.30,000 ஆக இருந்தால்

இ) ஏடுகளில் நற்பெயரின் மதிப்பு ரூ.50,000 ஆக இருந்தால்



**விடை:**

**குறிப்பேட்டுப் பதிவுகள்**

| நாள் | விவரம் | | பே.ப.எ. | பற்று ரூ. | வரவு ரூ. |
|---|---|---|---|---|---|
| | **நிலை அ :** | | | | |
| | நற்பெயர் க/கு | ப | | 40,000 | |
| | தமிழ்ச்செல்வி முதல் க/கு | | | | 20,000 |
| | கலைச்செல்வி முதல் க/கு | | | | 12,000 |
| | தேன்மொழி முதல் க/கு | | | | 8,000 |
| | (நற்பெயர் உருவாக்கப்பட்டு அனைத்து கூட்டாளிகளின் முதல் கணக்குகளுக்கு பழைய இலாப விகிதத்தில் மாற்றுவது) | | | | |
| | **நிலை ஆ :** | | | | |
| | நற்பெயர் க/கு | ப | | 10,000 | |
| | தமிழ்ச்செல்வி முதல் க/கு | | | | 5,000 |
| | கலைச்செல்வி முதல் க/கு | | | | 3,000 |
| | தேன்மொழி முதல் க/கு | | | | 2,000 |
| | (நற்பெயர் கூடுதல் ரூ.10,000 அனைத்து கூட்டாளிகளின் முதல் கணக்குகளுக்கு பழைய இலாப விகிதத்தில் மாற்றுவது) | | | | |
| | **நிலை இ :** | | | | |
| | தமிழ்ச்செல்வி முதல் க/கு | ப | | 5,000 | |
| | கலைச்செல்வி முதல் க/கு | ப | | 3,000 | |
| | தேன்மொழி முதல் க/கு | ப | | 2,000 | |
| | நற்பெயர் க/கு | | | | 10,000 |
| | (நற்பெயர் குறைவு ரூ.10,000 அனைத்து கூட்டாளிகளின் முதல் கணக்குகளுக்கு பழைய இலாப விகிதத்தில் மாற்றுவது) | | | | |

## 8.7 விலகும் கூட்டாளியின் கணக்கைத் தீர்த்தல்
(Settlement of retiring partner's claim):

நிறுவனத்திலுள்ள விலகும் கூட்டாளிக்குச் சேரவேண்டிய தொகையினை அவருக்குச் செலுத்த வேண்டும். விலகும் கூட்டாளிக்குச் சேரவேண்டிய தொகையினை நிர்ணயிக்க அவருடைய முதல் கணக்கில் நற்பெயரில் அவரின் பங்கு, பகிர்ந்து தரா இலாபம் அல்லது நட்டம், குவிந்த காப்பு, மறுமதிப்பீட்டின் இலாபம் அல்லது நட்டம் ஆகிய சரிக்கட்டுதல்கள் செய்தபிறகு உள்ள இருப்பினைக் கொண்டு கணக்கிட வேண்டும்.

விலகும் கூட்டாளிக்குச் சேரவேண்டிய தொகை முழுவதும் உடனடியாகவோ அல்லது தவணை முறையிலோ செலுத்தப்படுகிறது. உடனடியாகச் செலுத்தவில்லை எனில் அத்தொகை விலகும் கூட்டாளியின் கடன் கணக்குக்கு மாற்ற வேண்டும்.

**அ) சேர வேண்டிய தொகை உடனடியாகச் செலுத்தப்பட்டால்**

| | | | |
|---|---|---|---|
| விலகும் கூட்டாளி முதல் க/கு | ப | ..... | |
| வங்கிக் க/கு | | | ..... |

**ஆ) சேரவேண்டிய தொகை உடனடியாகச் செலுத்தவில்லை எனில்**

| | | | |
|---|---|---|---|
| விலகும் கூட்டாளி முதல் க/கு | ப | ..... | |
| விலகும் கூட்டாளி கடன் க/கு | | | ..... |

**இ) சேரவேண்டிய தொகையில் ஒரு பகுதி உடனடியாகவும் மீதித்தொகை பிறகும் செலுத்தினால்**

| | | | |
|---|---|---|---|
| விலகும் கூட்டாளி முதல் க/கு | ப | ..... | |
| வங்கிக் க/கு | | | ..... |
| விலகும் கூட்டாளி கடன் க/கு | | | ..... |

**எடுத்துக்காட்டு : 10**

A, B, C என்ற கூட்டாளிகள் முறையே 5:3:2 எனும் விகிதத்தில் இலாபநட்டம் பகிர்ந்து வந்தனர். C என்பவர் 2005 ஏப்ரல் 1 அன்று விலகினார். அவரின் விலகலுக்குப் பின், அனைத்துச் சரிகட்டுதல்களும் செய்த பிறகு அவரின்



முதல் கணக்கு வரவு இருப்பு ரூ.1,35,000 ஆக காட்டுகிறது. பின்வருவனவற்றிற்கு குறிப்பேட்டுப் பதிவுகள் தருக.

அ) சேரவேண்டிய தொகை உடனடியாகச் செலுத்தப் பட்டால்

ஆ) சேர வேண்டிய தொகை உடனடியாகச் செலுத்த வில்லை என்றால்

இ) ரூ.45,000 உடனடியாகவும் மீதித் தொகை பிறகு செலுத்துவதென்றால்

**விடை:**

**குறிப்பேட்டுப் பதிவுகள்**

| நாள் | விவரம் | | பே.ப.எ | பற்று ரூ. | வரவு ரூ. |
|---|---|---|---|---|---|
| 2005 | **நிலை அ :** | | | | |
| ஏப்ரல் 1 | C முதல் க/கு | ப | | 1,35,000 | |
| | வங்கி க/கு | | | | 1,35,000 |
| | (Cக்கு சேர வேண்டிய தொகை முழுவதும் உடனடியாகச் செலுத்தப்பட்டது) | | | | |
| | **நிலை ஆ :** | | | | |
| ” | C முதல் க/கு | ப | | 1,35,000 | |
| | C கடன் க/கு | | | | 1,35,000 |
| | (Cக்கு சேர வேண்டிய தொகை Cயின் கடன் கணக்கிற்கு மாற்றப்பட்டது) | | | | |
| ” | **நிலை இ :** | | | | |
| | C முதல் க/கு | ப | | 1,35,000 | |
| | வங்கிக் க/கு | | | | 45,000 |
| | C கடன் க/கு | | | | 90,000 |
| | (ரூ.45,000 மட்டும் உடனடியாகச் செலுத்தப்பட்டு மீதித்தொகை Cயின் கடன் க/கு மாற்றப்பட்டது) | | | | |

## 8.8 மறுமதிப்பீட்டுக் கணக்கு, முதல் கணக்குகள், வங்கிக் கணக்கு மற்றும் புதிய நிறுவனத்தின் இருப்புநிலைக் குறிப்பு ஆகியவற்றைத் தயாரித்தல்.

### எடுத்துக்காட்டு : 11

*லலிதா, ஜோதி, கனகா என்ற கூட்டாளிகள் முறையே 3:2:3 எனும் விகிதத்தில் இலாப நட்டங்கள் பகிர்ந்து வந்தனர். அவர்களுடைய 2003 மார்ச் 31ஆம் நாளைய இருப்புநிலைக் குறிப்பு பின்வருமாறு.*

| பொறுப்புகள் | | ரூ. | சொத்துகள் | ரூ. |
|---|---|---|---|---|
| பற்பல கடனீந்தோர் | | 62,500 | கையிருப்பு ரொக்கம் | 750 |
| செலுத்தற்குரிய மாற்றுச் சீட்டுகள் | | 32,000 | வங்கி ரொக்கம் | 2,04500 |
| இலாபநட்டக் க/கு | | 22,000 | கடனாளிகள் | 89,000 |
| கொடுபடாச் செவுகள் | | 500 | சரக்கிருப்பு | 1,11,500 |
| முதல்: | | | அறைகலன் | 17,500 |
| லலிதா | 2,00,000 | | பொறியும் பொறித் தொகுதியும் | 48,750 |
| ஜோதி | 1,25000 | | கட்டடம் | 1,20,000 |
| கனகா | 1,50,000 | 4,75,000 | | |
| | | 5,92,000 | | 5,92,000 |

*பின்வரும் பகிர்வுகளில் 2004 ஏப்ரல் 1ஆம் நாள் லலிதா என்பவர் கூட்டாண்மையிலிருந்து விலகினார்.*

*அ) நற்பெயர் ரூ.30,000 என மதிப்பிடப்பட்டது.*

*ஆ) கீழ்க்கண்டவாறு சொத்துகள் மதிப்பிடப்பட்டன. சரக்கிருப்பு ரூ.1,00,000; அறைகலன் ரூ.15,000; பொறியும், பொறித்தொகுதியும் ரூ.45,000; கட்டடம் ரூ.1,00,000.*

*இ) ஐயக்கடன் ஒதுக்கு ரூ.4,250 உருவாக்கப்பட்டது.*

*ஈ) லலிதாவுக்கு சேரவேண்டிய தொகை உடனடியாகச் செலுத்தப்பட்டது.*

*குறிப்பேட்டுப் பதிவுகள் தந்து, மறுமதிப்பீட்டுக் கணக்கு, முதல் கணக்குகள், வங்கிக் கணக்கு மற்றும் புதிய*



*கூட்டாண்மையின் இருப்புநிலைக் குறிப்பு ஆகியவற்றைத் தயார் செய்க.*

### விடை:

#### குறிப்பேட்டுப் பதிவுகள்

| நாள் | விவரம் | | பே.ப.எ. | பற்று ரூ. | வரவு ரூ. |
|---|---|---|---|---|---|
| 2004 | மறுமதிப்பீட்டுக் க/கு | ப | | 42,000 | |
| ஜன. 1 | சரக்கிருப்புக் க/கு | | | | 11,500 |
| | அறைகலன் க/கு | | | | 2,500 |
| | பொறியும் பொறித் தொகுதி க/கு | | | | 3,750 |
| | ஐயக்கடன் ஒதுக்குக் க/கு | | | | 4,250 |
| | கட்டடக் க/கு | | | | 20,000 |
| | (நட்ட இனங்கள் மாற்றுவது) | | | | |
| ” | லலிதா முதல் க/கு | ப | | 15,750 | |
| | ஜோதி முதல் க/கு | ப | | 10,500 | |
| | கனகா முதல் க/கு | ப | | 15,750 | |
| | மறுமதிப்பீட்டுக் க/கு | | | | 42,000 |
| | (மறுமதிப்பீட்டு நட்டம் அனைத்து கூட்டாளிகளின் முதல் கணக்குகளுக்கு மாற்றுவது) | | | | |
| ” | நற்பெயர் க/கு | ப | | 30,000 | |
| | லலிதா முதல் க/கு | | | | 11,250 |
| | ஜோதி முதல் க/கு | | | | 7,500 |
| | கனகா முதல் க/கு | | | | 11,250 |
| | (நற்பெயர் உருவாக்கப்பட்டு அனைத்து கூட்டாளிகளின் முதல் கணக்குகளுக்கு மாற்றுவது) | | | | |

| | | | | |
|---|---|---|---|---|
| ,, | இலாப நட்டக் க/கு ப | | 22,000 | |
| | லலிதா முதல் க/கு | | | 8,250 |
| | ஜோதி முதல் க/கு | | | 5,500 |
| | கனகா முதல் க/கு | | | 8,250 |
| | (பகிர்ந்து தரா இலாபம் அனைத்து கூட்டாளிகளின் முதல் கணக்குகளுக்கு மாற்றுவது) | | | |
| ,, | லலிதா முதல் க/கு ப | | 2,03,750 | |
| | வங்கிக் க/கு | | | 2,03,750 |
| | (லலிதாவுக்குச் சேர வேண்டிய தொகை உடனடியாகச் செலுத்தப்பட்டது) | | | |

ப **மறுமதிப்பீட்டுக் கணக்கு** வ

| விவரம் | ரூ. | விவரம் | ரூ. |
|---|---|---|---|
| சரக்கிருப்புக் க/கு | 11,500 | நட்டம் முதல் கணக்கிற்கு | |
| அறைகலன்க/கு | 2,500 | மாற்றப்படுவது | |
| பொறியும், பொறித் | | லலிதா முதல் க/கு 15,750 | |
| தொகுதியும் | 3,750 | ஜோதி முதல் க/கு 10,500 | |
| கட்டடக் க/கு | 20,000 | கனகா முதல் க/கு 15,750 | 42,000 |
| ஐயக்கடன் ஒதுக்குக் க/கு | 4,250 | | |
| | 42,000 | | 42,000 |

ப **முதல் கணக்குகள்** வ

| விவரம் | லலிதா ரூ. | ஜோதி ரூ. | கனகா ரூ. | விவரம் | லலிதா ரூ. | ஜோதி ரூ. | கனகா ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| மறுமதிப்பீட்டுக் க/கு | 15,750 | 10,500 | 15,750 | இருப்பு கீ/கொ | 2,00,000 | 1,25,000 | 1,50,000 |
| வங்கி க/கு | 2,03,750 | – – | – – | இலாப நட்டக் | | | |
| இருப்பு கீ/இ | – – | 1,27,500 | 1,53,750 | க/கு | 8,250 | 5,500 | 8.250 |
| | | | | நற்பெயர் க/கு | 11,250 | 7,500 | 11,250 |
| | 2,19,500 | 1,38,000 | 1,69,500 | | 2,19,500 | 1,38,000 | 1,69,500 |



ப **வங்கிக் கணக்கு** வ

| விவரம் | ரூ. | விவரம் | ரூ. |
|---|---|---|---|
| இருப்பு கீ/கொ | 2,04,500 | லலிதா முதல் க/கு | 2,03,750 |
| | | இருப்பு கீ/இ | 750 |
| | 2,04,500 | | 2,04,500 |

**ஜோதி, கனகா ஆகியோரின் 2004 ஏப்ரல் 1ஆம் நாளைய இருப்புநிலைக் குறிப்பு**

| பொறுப்புகள் | ரூ. | சொத்துகள் | ரூ. |
|---|---|---|---|
| பற்பல கடனீந்தோர் | 62,500 | கையிருப்பு ரொக்கம் | 750 |
| செலுத்தற்குரிய மாற்றுச் | | வங்கியிருப்பு ரொக்கம் | 750 |
| சீட்டுகள் | 32,000 | கடனாளிகள் 89,000 | |
| கொடுபடா செலவுகள் | 500 | கழிக்க: ஐயக்கடன் | |
| முதல் கணக்குகள்: | | ஒதுக்கு 4,250 | 84,750 |
| ஜோதி 1,27,500 | | சரக்கிருப்பு | 1,00,000 |
| கனகா 1,53,750 | 2,81,250 | அறைகலன் | 15,000 |
| | | பொறியும், பொறித் | |
| | | தொகுதியும் | 45,000 |
| | | கட்டடம் | 1,00,000 |
| | | நற்பெயர் | 30,000 |
| | 3,76,250 | | 3,76,250 |

### எடுத்துக்காட்டு : 12

பல்லவன், பாண்டியன், சோழன் என்ற கூட்டாளிகள் முறையே 3:2:1 எனும் விகிதத்தில் இலாபம் பகிர்ந்து தொழில்புரிந்து வந்தனர். 2005, மார்ச் 31ஆம் நாளையை இருப்புநிலைக் குறிப்பு பின்வருமாறு:

**இருப்புநிலைக் குறிப்பு**

| பொறுப்புகள் | ரூ. | சொத்துகள் | ரூ. |
|---|---|---|---|
| கடனீந்தோர் | 30,000 | வங்கி | 65,000 |
| பொதுக்காப்பு | 15,000 | கடனாளிகள் | 40,000 |
| முதல்: | | சரக்கிருப்பு | 80,000 |
| பல்லவன் 2,00,000 | | கட்டடம் | 2,50,000 |
| பாண்டியன் 1,20,000 | | இலாப நட்டக் க/கு | 30,000 |
| சோழன் 1,00,000 | 4,20,000 | | |
| | 4,65,000 | | 4,65,0000 |

பின்வரும் பகிர்வுகளுக்கு உட்பட்டு சோழன் என்பவர் *2005 ஏப்ரல் 1 அன்று விலகினார்.*

அ) கட்டடம் ரூ.15,000 மதிப்பேற்றம் செய்வது.

ஆ) கடனாளிகள் மீது ஐயக்கடன் ஒதுக்கு 6% உருவாக்குவது.

இ) நற்பெயர் ரூ.18,000 என மதிப்பிடுவது.

ஈ) சோழன் என்பவருக்குச் சேரவேண்டிய தொகையில் ரூ.50,000 உடனடியாகவும், மீதித்தொகை அவரின் கடன் கணக்குக்கும் மாற்றப்பட்டது.

மறுமதிப்பீட்டுக் க/கு, முதல் கணக்குகள், வங்கிக் கணக்கு மற்றும் சோழனின் விலகலுக்குப் பின் புதிய இருப்புநிலைக் குறிப்பு ஆகியவற்றைத் தயார் செய்க.

**விடை:**

ப **மறுமதிப்பீட்டுக் கணக்கு** வ

| விவரம் | | ரூ. | விவரம் | ரூ. |
|---|---|---|---|---|
| ஐயக்கடன் ஒதுக்கு க/கு | | 2,400 | கட்டடக் க/கு | 15,000 |
| இலாபம் முதல் க/கு மாற்றப்படுவது | | | | |
| லலிதா முதல் க/கு | 6,300 | | | |
| ஜோதி முதல் க/கு | 4,200 | | | |
| கனகா முதல் க/கு | 2,100 | 12,600 | | |
| | | 15,000 | | 15,000 |

ப **முதல் கணக்குகள்** வ

| விவரம் | பல்லவன் ரூ. | பாண்டியன் ரூ. | சோழன் ரூ. | விவரம் | பல்லவன் ரூ. | பாண்டியன் ரூ. | சோழன் ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| இலாப நட்ட க/கு | 15,000 | 10,000 | 5,000 | இருப்பு கீ/கொ | 2,00,000 | 1,20,000 | 1,00,000 |
| வங்கி க/கு | – – | – – | 50,000 | நற்பெயர் க/கு | 9,000 | 6,000 | 3,000 |
| சோழன் கடன் க/கு | – – | – – | 52,600 | மறுமதிப்பீட்டு க/கு | 6,300 | 4,200 | 2,100 |
| இருப்பு கீ/இ | 2,07,800 | 1,25,200 | – – | பொதுக்காப்பு க/கு | 7,500 | 5,000 | 2,500 |
| | 2,22,800 | 1,35,200 | 1,07,600 | | 2,22,800 | 1,35,200 | 1,07,600 |



ப **வங்கிக் கணக்கு** வ

| விவரம் | ரூ. | விவரம் | ரூ. |
|---|---|---|---|
| இருப்பு கீ/கொ | 65,000 | சோழன் முதல் க/கு | 50,000 |
| | | இருப்பு கீ/இ | 15,000 |
| | 65,000 | | 65,0000 |

**பல்லவன், பாண்டியன், ஆகியோரின் 2005 ஏப்ரல் 1 ஆம் நாளைய இருப்புநிலைக் குறிப்பு**

| பொறுப்புகள் | | ரூ. | சொத்துகள் | | ரூ. |
|---|---|---|---|---|---|
| கடனீந்தோர் | | 30,000 | வங்கி | | 15,000 |
| சோழன் கடன் க/கு | | 52,600 | கடனாளிகள் | 40,000 | |
| முதல்: | | | கழிக்க: ஐயக்கடன் | | |
| பல்லவன் | 2,07,800 | | ஒதுக்கு | 2,400 | 37,600 |
| பாண்டியன் | 1,25,200 | 3,33,000 | சரக்கிருப்பு | | 80,000 |
| | | | கட்டடம் | | 2,65,000 |
| | | | நற்பெயர் | | 18,000 |
| | | 4,15,600 | | | 4,15,600 |

## வினாக்கள்

### I. புற வகை வினாக்கள்:

**அ) கோடிட்ட இடங்களை நிரப்புக:**

1. விலகும் கூட்டாளிக்குரிய தொகை உடனே செலுத்தப்படும் அல்லது அவருக்குச் சேர வேண்டிய தொகை அவர் நிறுவனத்திற்குக் __________ கொடுத்ததாகக் கொள்ளப்படும்.

2. கூட்டாளிகள் விலகும்பொழுது, தொடரும் கூட்டாளிகள் __________ பெறுகின்றனர்.

3. பொறுப்புகளின் மதிப்பு குறைவது __________ இனமாகும்.

4. கூட்டாளி விலகலின்பொழுது நற்பெயர் மதிப்பேற்றம் அனைத்துக் கூட்டாளிகளின் முதல் கணக்குகளில் _______ பக்கம் மாற்றப்படும்.

5. கூட்டாளி விலகலின்பொழுது, சொத்துகளையும், பொறுப்புகளையும், மறுமதிப்பீடு செய்ததால் நேர்ந்த இலாபம் அனைத்துக் கூட்டாளிகளின் முதல் கணக்குகளில் _________ பக்கம் மாற்றப்படும்.

6. விலகலின்பொழுது, தொழிலின் மறுமதிப்பீட்டு இலாபம்_________ கூட்டாளிகளாலும் பகிரப்படும்.

(மார்ச் 1999)

7. கூட்டாளிகளிடையே குறிப்பிட்ட ஒப்பந்தம் ஏதும் இல்லாதபொழுது, கூட்டாளியின் கடன் மீது _________ சதவீதம் வட்டி வழங்கப்படும்.

(அக்டோபர் 1999)

8. கூட்டாளி விலகலின் பொழுது குவிந்த காப்பு நிதி அனைத்து கூட்டாளிகளின் முதல் கணக்குகளுக்கு _________ விகிதத்தில் மாற்றப்படும். (மார்ச் 2000)

9. விலகும் கூட்டாளிக்கு உரிய தொகை _________ அல்லது _________ செலுத்தப்படும்.

10. தொடரும் கூட்டாளிகள் வெளிச் செல்லும் கூட்டாளிகளுக்குத் தர வேண்டிய ஈட்டுத் தொகையை நிர்ணயிக்க _________ கணக்கிடப்படுகிறது.

11. A, B, C ஆகிய கூட்டாளிகளின் இலாபப் பங்கு முறையே 1/2, 1/3, 1/6 ஆகும். B கூட்டாண்மையிலிருந்து விலகினால், புதிய இலாபப் பகிர்வு விகிதம் _________.

12. _________ ஆதாயத்திற்காக பழைய கூட்டாளிகள் தியாகம் செய்ய ஒப்புக்கொண்ட _________ விகிதமே தியாக விகிதமாகும்.

(விடை: 1. கடன்; 2. ஆதாயம்; 3. இலாப; 4. வரவு; 5. வரவு; 6. அனைத்து; 7. ஆறு; 8. பழைய இலாபப் பகிர்வு; 9. உடனே செலுத்தப்படும், தவணைகளில்; 10. ஆதாய விகிதம்; 11. 3:1 ; 12. உள்வரு கூட்டாளியின் இலாபப் பங்கு))



**ஆ) தக்க விடையைத் தேர்ந்தெடுக்க:**

1. கூட்டாளி ஒருவர் விலகும் பொழுது, புதிய இலாப விகிதம் கணக்கிடுவது.

   அ) தேவையில்லை  ஆ) தேவை

   இ) கட்டாயமில்லை

2. பகிர்ந்து தரா இலாப நட்டங்கள், விலகலின் பொழுது, அனைத்துக் கூட்டாளிகளின் கணக்கிற்கு

   அ) மாற்றப்பட வேண்டும்  ஆ) மாற்றத் தேவையில்லை

   இ) மாற்றலாம் அல்லது மாற்றாமலும் இருக்கலாம்.

3. கூட்டாளியின் விலகலின் பொழுது இருப்புநிலைக் குறிப்பில் தோன்றக்கூடிய இனங்களாகிய இலாப நட்டக் கணக்கு மற்றும் பொதுக்காப்பு ஆகியவை மாற்றப்படுவது.

   அ) மறுமதிப்பீட்டுக் கணக்கில்

   ஆ) கூட்டாளிகளின் முதல் கணக்குகளில்

   இ) மேற்கண்ட எதுவுமில்லை

4. நற்பெயர் மதிப்பு ரூ.30,000 ஆக தோற்றுவிக்கும் பொழுது, அத்தொகை பற்று வைக்கக்கூடிய கணக்கு

   அ) கூட்டாளிகளின் முதல் கணக்குகள்

   ஆ) நற்பெயர் கணக்கு  இ) ரொக்கக் கணக்கு

5. புதிய இலாபப் பகிர்வு விகிதத்திலிருந்து பழைய இலாபப் பங்கு விகிதத்தைக் கழித்தால் கிடைப்பது _________ விகிதம் ஆகும்.

   அ) ஆதாயம்  ஆ) முதல்  இ) தியாகம்

6. கூட்டாளி விலகலின் பொழுது, நற்பெயர் தொகை வரவு செய்யப்படும் கணக்கு

   அ) விலகும் கூட்டாளியின் முதல் கணக்கில் மட்டும்

   ஆ) அனைத்துக் கூட்டாளிகளின் (விலகும் கூட்டாளி உட்பட) முதல் கணக்குகளில்

   இ) தொடரும் கூட்டாளிகளின் முதல் கணக்கு மட்டும்.

7. A, B, C ஆகியோரின் இலாபப் பங்கு முறையே 2/5, 2/5, 1/5 ஆகும். C கூட்டாண்மையிலிருந்து விலகுகிறார். அவரின் பங்கினை Aயும், Bயும் சமமாகப் பெறுகின்றனர் எனக் கொண்டால் புதிய இலாபப் பகிர்வு விகிதம்

அ) A – 1/2 & B – 1/2 ஆ) A – 3/5 & B – 2/5

இ) A – 2/5 & B – 3/5

8. வெளிச் செல்லும் கூட்டாளிக்கு சேர வேண்டிய தொகை உடனே செலுத்தப்படவில்லை எனில், அத்தொகை மாற்றப்படும் கணக்கு

அ) முதல் கணக்கு ஆ) கடன் கணக்கு

இ) ரொக்கம் கணக்கு

9. வெளிச் செல்லும் கூட்டாளிக்குச் செலுத்த வேண்டிய தொகை அவருடைய கடன் கணக்கிற்கு மாற்றப் பட்டிருந்தால் தொகை செலுத்தப்படும் வரையில் அவர் ________ வட்டி பெற உரியவர்.

அ) 9% ஆ) 5% இ) 6%

(விடை: 1. ஆ) 2. அ) 3. ஆ) 4. ஆ) 5. அ) 6. ஆ) 7. அ) 8. ஆ) 9. இ))

## II. பிற வினாக்கள்:

1. கூட்டாளி ஒருவர் விலகுதல் என்றால் என்ன?
2. வெளிச்செல் கூட்டாளி என்பவர் யார்?
3. நிறுவனத்திலிருந்து கூட்டாளி ஒருவர் எப்படி விலக முடியும்?
4. விலகலின் பொழுது, புதிய இலாபப் பகிர்வு விகிதம் என்பது என்ன?
5. ஆதாய விகிதம் என்றால் என்ன?
6. விலகலின் பொழுது செய்யப்படும் சரிக்கட்டுதல்கள் யாவை?
7. கூட்டாளி ஒருவர் விலகும் பொழுது, கூட்டாண்மையின் சொத்துகளையும் பொறுப்புகளையும் மறுமதிப்பீடு செய்வதன் பதிவுகள் யாவை?



8. வெளிச் செல்லும் கூட்டாளிக்குச் சேரவேண்டிய தொகையை எவ்வாறு தீர்ப்பாய்?
9. தியாக விகிதத்திற்கும், ஆதாய விகிதத்திற்குமிடையே உள்ள வேறுபாடுகள் யாவை?

## III. பயிற்சிக் கணக்குகள்:

**புதிய இலாப விகிதம் கணக்கிடுதல்**

1. A, B, C என்ற கூட்டாளிகளின் பழைய இலாபப் பகிர்வு விகிதம் 4:3:2. பின்வரும் சூழ்நிலைகளில் புதிய இலாபப் பகிர்வு விகிதம் மற்றும் ஆதாய விகிதம் கணக்கிடுக.

அ) A விலகினால் ஆ) B விலகினால்

இ) C விலகினால்

விடை: புதிய இலாப விகிதம் அ) 3:2 ஆ) 2:1 இ) 4:3
ஆதாய விகிதம் அ) 3:2 ஆ) 2:1 இ) 4:3

2. மணி, நாகப்பன், உலகநாதன் என்ற கூட்டாளிகள் முறையே 4:3:3 எனும் விகிதத்தில் இலாபம் பகிர்ந்து வந்தனர். உலகநாதன் என்பவர் விலகிய பிறகு அவரின் பங்கை மணி, நாகப்பன் இருவரும் 3:2 எனும் விகிதத்தில் பிரித்து எடுத்துக் கொண்டனர். புதிய இலாபப் பகிர்வு விகிதம் யாது?

(விடை: 29:21)

3. சபாபதி, திருமலை, உமாபதி என்ற கூட்டாளிகள் முறையே 3:2:1 எனும் விகிதத்தில் இலாபம் பகிர்ந்து வந்தனர். திருமலை விலகிய உடன் அவரின் பங்கை இருவரும் சமமாகப் பிரித்துக் கொண்டனர். புதிய இலாபப் பகிர்வு விகிதம் யாது?

(விடை : 2:1)

4. ரோஜா, மீனா, சோபனா என்ற கூட்டாளிகள் முறையே 5:4:3 எனும் விகிதத்தில் இலாபம் பகிர்ந்து வந்தனர். ரோஜா விலகினார். அவரின் பங்கை முழுமையாக மீனா எடுத்துக் கொண்டார். புதிய இலாபப் பகிர்வு விகிதம் யாது?

(விடை : 3:1)

5. P, Q, R என்ற கூட்டாளிகள் *2:2:1* எனும் விகிதத்தில் இலாபம் பகிர்ந்து வந்தனர். Q விலகியவுடன், தொடரும் கூட்டாளிகளின் புதிய இலாபப் பகிர்வு விகிதம் *4:3*. ஆதாய விகிதம் கணக்கிடுக.

*(விடை : 3:4)*

6. X, Y, Z என்ற கூட்டாளிகள் முறையே 1/2, 1/5, 3/10 எனும் விகிதத்தில் இலாப நட்டம் பகிர்ந்து வந்தனர். Y என்பவர் விலகினார். X, Z என்ற இரு கூட்டாளிகளின் புதிய இலாபப் பகிர்வு விகிதம் யாது?

*(விடை : 5:3)*

7. A, B, C என்ற கூட்டாளிகள் *4:3:2* எனும் விகிதத்தில் இலாபம் பகிர்ந்து வந்தனர். C விலகினார். பின்வரும் தருணங்களில் அவர்களின் புதிய இலாபப் பகிர்வு விகிதம் மற்றும் ஆதாய விகிதம் என்னவாக இருக்கும்?

அ) C யின் பங்கை A யும், B யும் சமமாக எடுத்துக் கொள்வது.

ஆ) C யின் பங்கை A, B இருவரும் பழைய இலாப விகிதத்தில் எடுத்துக் கொள்வது.

இ) C யின் பங்கை, A, B இருவரும் *2:1* எனும் விகிதத்தில் எடுத்துக் கொள்வது.

ஈ. C யின் பங்கை A முழுவதும் எடுத்துக் கொள்வது.

*(விடை : புதிய இலாப விகிதம் அ) 5:4; ஆ) 4:3; இ) 16:11; ஈ) 2:1; ஆதாய விகிதம் அ) 1:1; ஆ. 4:3; இ) 2:1; ஈ) A மட்டும் 2/9 பங்கு)*

**சொத்துகள், பொறுப்புகள் மறுமதிப்பீடு செய்தல்:**

8. சங்கர், சேகர், சாரதி என்ற கூட்டாளிகள் *3:2:1* எனும் விகிதத்தில் இலாப நட்டங்கள் பகிர்ந்து வந்தனர். பின்வரும் நிறுவனச் சொத்துகள், பொறுப்புகள் மறுமதிப்பீட்டுக்குட்பட்டு சாரதி என்பவர் விலக முடிவெடுத்தார்.

அ) கட்டட மதிப்பு ரூ.33,000 மதிப்பேற்றம் செய்வது.



ஆ) பதிவு பெறாமலிருந்த முதலீடுகள் ரூ.6,000 கணக்கில் கொண்டு வருவது

இ) சரக்கிருப்பு மீது ரூ.3,000; அறைகலன் மீது ரூ.1,500 தேய்மானம் நீக்குவது.

ஈ) பற்பல கடனாளர் ரூ.1,500 போக்கெழுதுவது

தேவையான குறிப்பேட்டுப் பதிவுகள் தந்து, மறுமதிப்பீட்டுக் கணக்கு தயார் செய்க.

*(விடை: மறுமதிப்பீட்டு இலாபம் ரூ.36,000)*

9. ராமு, சோமு, கோபு என்ற கூட்டாளிகள் *5:3:2* எனும் விகித்தில் இலாப நட்டங்கள் பகிர்ந்து வந்தனர். 2005 ஜனவரி 1 அன்று கோபு என்பவர் விலக விரும்புகிறார். அவர்களின் சொத்துகள் பொறுப்புகள் பின்வருமாறு மறுமதிப்பீடு செய்வதென முடிவெடுத்தனர்.

அ) கட்டடத்தின் மதிப்பு ரூ.30,000 அதிகரிப்பது.

ஆ) சரக்கிருப்பு, அறைகலன் மற்றும் பொறிவகை மீது முறையே ரூ.10,000, ரூ.5,000 மற்றும் ரூ.23,000 என தேய்மானம் ஒதுக்குவது

இ) கொடுபடா பொறுப்பு ரூ.2,000க்கு ஒதுக்கீடு செய்வது

கூட்டாளிகளின் முடிவுகளைச் செயல்படுத்துதற்குரிய குறிப்பேட்டுப் பதிவுகள் தந்து, மறுமதிப்பீட்டுக் கணக்கு தயாரிக்க.

*(விடை : மறுமதிப்பீட்டு நட்டம் ரூ.10,000)*

10. C, D, E என்ற கூட்டாளிகள் முறை *5:3:2* எனும் விகிதத்தில் இலாப நட்டம் பகிர்ந்து வந்தனர். D விலக விரும்பியவுடன், பின்வருமாறு சொத்துகள், பொறுப்புகள் மறுமதிப்பீடு செய்தனர்.

அ) பதிவு பெறா முதலீடுகள் ரூ.3,000 கணக்கில் கொண்டு வருவது.

ஆ) பற்பல கடனீந்தோரிடமிருந்து ரூ.4,000 போக்கெழுதுவது

இ) இயந்திரம் மீது ரூ.1,000 மற்றும் அறைகலன் மீது ரூ.2,000 தேய்மானம் நீக்குக

ஈ) நற்பெயர் ரூ.15,000 மதிப்புக்குத் தோற்றுவிப்பது

குறிப்பேட்டுப் பதிவுகள் தந்து, மறுமதிப்பீட்டுக் கணக்கு தயார் செய்க.

(ஜூன் 2003)

(விடை : மறுமதிப்பீட்டின் இலாபம் ரூ.4,000)

11. கங்கா, யமுனா என்ற கூட்டாளிகள் முறையே 3/5 மற்றும் 2/5 எனும் விகிதத்தில் இலாபம் பகிர்ந்து வந்தனர். 2004 டிசம்பர் 31ஆம் நாளைய இருப்புநிலைக் குறிப்பு பின்வருமாறு:

| பொறுப்புகள் | ரூ. | சொத்துகள் | ரூ. |
|---|---|---|---|
| முதல்: | | இயந்திரம் | 58,500 |
| கங்கா 60,000 | | சரக்கிருப்பு | 48,000 |
| யமுனா 45,000 | 1,05,000 | கடனாளிகள் | 45,000 |
| பற்பல கடனீந்தோர் | 15,000 | ரொக்கம் | 1,500 |
| செலுத்தற்குரிய மாற்றுச் சீட்டுகள் | 33,000 | | |
| | 1,53,000 | | 1,53,000 |

உடல்நிலை சரியின்மையால் யமுனா விலக முடிவெடுத்தார். அதனால் அமராவதியை பின்வரும் பகிர்வுகளில் சேர்த்துக் கொள்ள முடிவு எடுத்தனர்.

அ) இயந்திரத்தின் மீது 10% சரக்கிருப்பு மீது 15% தேய்மானம் நீக்குதல்

ஆ) பற்பல கடனாளிகள் மீது 5% ஐயக்கடன் ஒதுக்கு உருவாக்குதல்

இ) பற்பல கடனீந்தோர் மீது 2% தள்ளுபடி ஒதுக்கு உருவாக்குதல்

மறுமதிப்பீட்டுக் கணக்கு, முதல் கணக்குகள், கங்கா அவர்களின் இருப்புநிலைக் குறிப்பு ஆகியவற்றைத் தயார் செய்க.



(விடை : மறுமதிப்பீட்டு நட்டம் ரூ.15,000; இருப்புநிலைக் குறிப்பு மொத்தம் ரூ.1,37,700)

**குவிந்த காப்புகள், பகிர்ந்து தரா இலாபம் மற்றும் நட்டம் மாற்றுதல்:**

12 A, B, C என்ற கூட்டாளிகள் 4:3:2 எனும் விகிதத்தில் இலாப நட்டம் பகிர்ந்து வந்தனர். 2005 மார்ச் 31 அன்று நிறுவன ஏடுகளில் பொதுக்காப்பு ரூ.45,000 ஆக இருந்தது. C 1.4.2005 அன்று விலக விரும்பினார். பொதுக்காப்பை கூட்டாளிகளின் முதல் கணக்குகளுக்கு மாற்றுவதற்கான குறிப்பேட்டுப் பதிவு தருக.

13. மோகன்ராஜ், நாகராஜ், பாக்கியராஜ் என்ற கூட்டாளிகள் 5:3:2 எனும் விகிதத்தில் இலாப நடடங்கள் பகிர்ந்து வந்தனர். 31.12.2004 அன்று நிறுவன ஏடுகளில் காப்பு நிதி ரூ.30,000 மற்றும் பகிர்ந்து தரா நட்டம் ரூ.20,000 உள்ளன. பாக்கியராஜ் 1.1.2005 அன்று விலகினார். காப்பு நிதி, பகிர்ந்து தரா நட்டம் ஆகியவற்றை பழைய கூட்டாளிகளின் கணக்குகளுக்கு மாற்றுவதற்கான குறிப்பேட்டுப் பதிவுகள் தருக.

14. குமுதா, குழலி, கோதை என்ற கூட்டாளிகள் 6:2:2 எனும் விகிதத்தில் இலாப, நட்டங்கள் பகிர்ந்து வந்தனர். அவர்களுடைய 30.6.2004ஆம் நாளைய இருப்பு நிலைக் குறிப்பு பின்வருமாறு:

| பொறுப்புகள் | ரூ. | சொத்துகள் | ரூ. |
|---|---|---|---|
| பற்பல கடனீந்தோர் | 8,000 | கையிருப்பு ரொக்கம் | 3,000 |
| காப்பு நிதி | 30,000 | வங்கியிருப்பு ரொக்கம் | 5,000 |
| முதல் கணக்குகள்: | | பற்பல கடனாளிகள் | 45,000 |
| குமுதா 70,000 | | சரக்கிருப்பு | 35,000 |
| குழலி 50,000 | | இயந்திரம் | 30,000 |
| கோதை 30,000 | 1,50,000 | கட்டடம் | 70,000 |
| | 1,88,000 | | 1,88,000 |

1.7.2004 அன்று பின்வரும் பகிர்வுகளுக்கு உடன் பட்டு நிறுவனத்திலிருந்து கோதை விலகினார்.

அ) பற்பல கடனாளிகள் மீது 5% ஒதுக்கு உருவாக்குக.

ஆ) சரக்கிருப்பு மீது 5%, இயந்திரத்தின் மதிப்பு மீது 10% தேய்மானம் நீக்குக.

இ) கட்டடத்தின் மதிப்பு ரூ.75000 ஆக மதிப்பிடுக.

மறுமதிப்பீட்டுக் கணக்கு, முதல் கணக்குகள் மற்றும் புதிய கூட்டாண்மையின் இருப்பு நிலைக் குறிப்பு ஆகியவற்றைத் தயார் செய்க.

(விடை: மறுமதிப்பீட்டு நட்டம் ரூ.2,000, இருப்பு நிலைக்குறிப்பு மொத்தம் ரூ.1,86,000)

**நற்பெயர் குறித்து ஆவன செய்தல்:**

15. O, P, Q என்ற கூட்டாளிகள் 7:5:3 எனும் விகிதத்தில் இலாப, நட்டங்கள் பகிர்ந்து வந்தனர். P என்பவர் விலகும்பொழுது, நற்பெயர் ரூ.45,000 என மதிப்பிட்டுத் தோற்றுவிக்கப் படுகிறது. பதிவு தருக.

16. A, B, C என்ற கூட்டாளிகள் 5:3:2 எனும் விகிதத்தில் இலாபம் பகிர்ந்து வந்தனர். ஏடுகளில் நற்பெயர் கணக்கு ரூ.36,000 ஆக இருந்தது. C விலக முடிவெடுத்தபிறகு, நற்பெயர் ரூ.50,000 ஆக மதிப்பிடப்பட்டது. பதிவு தருக.

17. G, P, S என்ற கூட்டாளிகள் 3:2:1 எனும் விகிதத்தில் இலாப நட்டங்கள் பகிர்ந்து வந்தனர். G விலகும் பொழுது, நற்பெயர் கடந்த மூன்று ஆண்டு சராசரி இலாபங்களின் இரண்டு ஆண்டு கொள்முதல் எனக் கொண்டு மதிப்பிடப்படுகிறது. கடந்த மூன்று ஆண்டுகளின் இலாபங்கள் முறையே ரூ.16,000 ரூ.30,000 மற்றும் ரூ.26,000 ஆகும். பதிவு தருக.

(விடை : நற்பெயர் ரூ.48,000)

**சரிக்கட்டுதல் இணைந்த வினாக்கள் :**

18. சந்திரன், இந்திரன், சூரியன் என்ற கூட்டாளிகள் முறையே 1/2, 3/10, 1/5 எனும் விகிதத்தில் நிறுவனத்தின் இலாப நட்டங்களைப் பகிர்ந்து வந்தனர். அவர்களது 31.3.2005ஆம் நாளைய இருப்புநிலைக் குறிப்பு பின்வருமாறு:



| பொறுப்புகள் | | ரூ. | சொத்துகள் | | ரூ. |
|---|---|---|---|---|---|
| பற்பல கடனீந்தோர் | | 62,000 | வங்கி | | 81,000 |
| காப்பு நிதி | | 40,000 | கடனாளிகள் | 62,000 | |
| முதல் கணக்குகள்: | | | கழிக்க: ஐயக்கடன் | | |
| சந்திரன் | 1,60,000 | | ஒதுக்கு | 1,000 | 61,000 |
| இந்திரன் | 1,20,000 | | சரக்கிருப்பு | | 40,000 |
| சூரியன் | 60,000 | 3,40,000 | பொறியும், பொறித் | | |
| | | | தொகுதியும் | | 1,00,000 |
| | | | கட்டடம் | | 1,60,000 |
| | | 4,42,000 | | | 4,42,000 |

2005 ஏப்ரல் 1 அன்று பின்வரும் பகிர்வுகளில் சூரியன் என்பவர் விலகினார்.

அ) கட்டடம் 10% மதிப்பேற்றம் செய்வது.

ஆ) வாரா ஐயக் கடன் ஒதுக்கு ரூ.2,400 ஆக அதிகரிப்பது.

இ) நற்பெயர் ரூ.40,000 மதிப்புக்கு உருவாக்குவது.

ஈ) விலகும் கூட்டாளிக்குச் சேர வேண்டிய தொகை உடனடியாகச் செலுத்துவது.

மேற்கண்ட நடவடிக்கைகளுக்கான பதிவுகள் தந்து, மறுமதிப்பீட்டுக் கணக்கு, முதல் கணக்குகள், வங்கிக் கணக்கு மற்றும் புதிய கூட்டாண்மையின் இருப்பு நிலைக் குறிப்பு ஆகியவற்றைத் தயாரிக்க.

(விடை: மறுமதிப்பீட்டு இலாபம் ரூ.14,600 இருப்பு நிலைக் குறிப்பு மொத்தம் ரூ.4,17,680)

19. செல்வகுமார், சரவணகுமார், வினோத் குமார் என்ற கூட்டாளிகள் முறையே 3:2:1 எனும் விகிதத்தில் இலாப நட்டங்கள் பகிர்ந்து வந்தனர். 2004 டிசம்பர் 31ஆம் நாளைய அவர்களின் இருப்புநிலைக் குறிப்பு பின்வருமாறு:

| பொறுப்புகள் | ரூ. | சொத்துகள் | ரூ. |
|---|---|---|---|
| பற்பல கடனீந்தோர் | 25,000 | கை ரொக்கம் | 3,000 |
| செலுத்தற்குரிய மாற்றுச் சீட்டுகள் | 15,000 | வங்கி ரொக்கம் | 35,000 |
| இலாப நட்டக் கணக்கு | 30,000 | பெறுதற்குரிய மாற்றுச் சீட்டுகள் | 11,000 |
| முதல்: | | ஏட்டுக் கடன்கள் | 18,000 |
| செல்வக்குமார் 80,000 | | சரக்கிருப்பு | 36,000 |
| சரவணக்குமார் 50,000 | | அறைகலன் | 7,000 |
| வினோத்குமார் 40,000 | 1,70,000 | பொறியும், பொறித் தொகுதியும் | 50,000 |
| | | கட்டடம் | 80,000 |
| | 2,40,000 | | 2,40,000 |

பின்வரும் பகிர்வுக்கு உட்பட்டு 2005 ஜனவரி 1 அன்று செல்வக்குமார் என்பவர் கூட்டாண்மையிலிருந்து விலகினார்.

அ) நற்பெயர் ரூ.30,000 என்ற மதிப்பில் ஏடுகளில் தோற்றுவிப்பது.

ஆ) சொத்துகளின் மதிப்பு கீழ்க்கண்டவாறு மதிப்பிடப்பட்டன:

சரக்கிருப்பு ரூ.30,000, பொறியும், பொறித்தொகுதியும் ரூ.40,000, கட்டடம் ரூ.1,00,000.

இ) ஐயக்கடன் ஒதுக்கு ரூ.1,000 என உருவாக்குவது.

ஈ) செல்வக்குமார் என்பவருக்குச் சேரவேண்டிய தொகையில் ரூ.21,500 உடனடியாகச் செலுத்தப்பட்டது. மீதித்தொகை அவர் கடன் கணக்குக்கு மாற்றப்பட்டது.

மறுமதிப்பீட்டுக் கணக்கு, முதல் கணக்குகள், வங்கிக் க/கு மற்றும் புதிய கூட்டாண்மையின் இருப்புநிலைக் குறிப்பு ஆகியவற்றைத் தயார் செய்க.

(விடை : மறுமதிப்பீட்டு இலாபம் ரூ.3,000; இருப்புநிலைக் குறிப்பு மொத்தம் ரூ.2,51,500)



20. பிரியா, சுதா, வித்யா என்ற கூட்டாளிகள் அவர்கள் முதல் விகிதத்தில் இலாப நட்டங்கள் பகிர்ந்து வந்தனர். 2004 டிசம்பர் 31 அன்றைய அவர்களது இருப்புநிலைக் குறிப்பு பின்வருமாறு:

| பொறுப்புகள் | ரூ. | சொத்துகள் | ரூ. |
|---|---|---|---|
| கடனீந்தோர் | 21,000 | வங்கி | 16,000 |
| காப்பு நிதி | 48,000 | கடனாளிகள் 20,000 | |
| முதல் கணக்குகள்: | | கழிக்க: ஐயக்கடன் ஒதுக்கு 1,000 | 19,000 |
| பிரியா 90,000 | | | |
| சுதா 60,000 | | சரக்கிருப்பு | 18,000 |
| வித்யா 30,000 | 1,80,000 | இயந்திரம் | 48,000 |
| | | நிலமும் கட்டடமும் | 1,00,000 |
| | | நற்பெயர் | 48,000 |
| | 2,49,000 | | 2,49,000 |

2005 ஜனவரி 1 ஆம் நாள் அன்று பின்வரும் பகிர்வுகளுக்குட்பட்டு சுதா விலகினார்.

அ) நிறுவனத்தின் நற்பெயர் ரூ.36,000 என மதிப்பிடப்பட்டது.

ஆ) நிலம், கட்டடத்தின் மீது 10% மதிப்பேற்றம் செய்யப்பட்டது.

இ) ஐயக்கடன் ஒதுக்கு ரூ.600 குறைக்கப்பட்டது.

ஈ) முழுமையாக இலாப நட்டக் கணக்கில் பற்று வைக்கப்பட்ட காப்பீட்டுத் தொகையில் ரூ.2,000 முன் கூட்டிச் செலுத்தியக் கணக்குக்கு மாற்றப்பட்டது.

உ) கொடுபடா பழுதுபார்ப்புச் செலவுக்கு ரூ.3,000 ஒதுக்கீடு செய்யப்பட்டது.

மறுமதிப்பீட்டுக் க/கு, முதல் க/கு மற்றும் புதிய கூட்டாண்மையின் இருப்புநிலைக் குறிப்பு ஆகியவற்றைத் தயாரிக்க.

(விடை: மறுமதிப்பீட்டு இலாபம் ரூ.9,600; இருப்புநிலைக் குறிப்பு மொத்தம் ரூ.2,49,600)

21. மல்லிகை, முல்லை என்ற கூட்டாளிகள் 7:5 எனும் விகிதத்தில் இலாபம் பகிர்ந்து வந்தனர். அவர்களின் 2004 டிசம்பர் 31ஆம் நாளைய இருப்புநிலைக் குறிப்பு பின்வருமாறு:

| பொறுப்புகள் | | ரூ. | சொத்துகள் | ரூ. |
|---|---|---|---|---|
| பற்பல கடனீந்தோர் | | 40,000 | வங்கி | 52,000 |
| பொதுக்காப்பு | | 72,000 | பற்பல கடனாளிகள் | 40,000 |
| தொழிலாளி ஈட்டுத் | | | சரக்கிருப்பு | 72,000 |
| தொகை நிதி | | 60,000 | இயந்திரம் | 1,60,000 |
| முதல் கணக்குகள்: | | | இலாப நட்டக் க/கு | 48,000 |
| மல்லிகை | 1,20,000 | | | |
| முல்லை | 80,000 | 2,00,000 | | |
| | | 3,72,000 | | 3,72,000 |

2005 ஜனவரி 1 ஆம் நாள் முல்லை கூட்டாண்மையிலிருந்து விலகினார். பின்வரும் நிபந்தனைகளுக்கு உட்பட்டு மல்லிகை என்பவர் நிறுவனத்தை எடுத்துக் கொண்டார்.

அ) நிறுவனத்தின் நற்பெயர் ரூ.24,000 என மதிப்பீடு செய்யப்பட்டது.

ஆ) இயந்திரத்தின் மீது 10% தேய்மானம் நீக்கப்பட்டது.

இ) பற்பல கடனாளிகள்மீது 5% ஐயக்கடன் ஒதுக்கு உருவாக்கப்பட்டது.

ஈ) தொழிலாளர் ஈட்டுத்தொகை நிதிப் பொறுப்பு ரூ.36,000 என மதிப்பிடப்பட்டது.

மறுமதிப்பீட்டுக் க/கு, முதல் கணக்குகள் மற்றும் மல்லிகையின் இருப்புநிலைக் குறிப்பு ஆகியவற்றைத் தயார் செய்க.

(விடை: மறுமதிப்பீட்டு நட்டம் ரூ.18,000; இருப்புநிலைக் குறிப்பு மொத்தம் ரூ.3,30,000)

22. மதியழகன், கோவிந்தராஜன், சண்முகம் என்ற கூட்டாளிகள் முறையே 1/2:1/3,1/6 எனும் விகிதத்தில் இலாப



நட்டங்கள் பகிர்ந்து வந்தனர். 30.6.2005 ஆம் நாளைய இருப்புநிலைக் குறிப்பு பின்வருமாறு:

| பொறுப்புகள் | | ரூ. | சொத்துகள் | ரூ. |
|---|---|---|---|---|
| பற்பல கடனீந்தோர் | | 1,20,000 | கையிருப்பு ரொக்கம் | 18,000 |
| செலுத்தற்குரிய மாற்றுச் | | | வங்கி ரொக்கம் | 1,70,000 |
| சீட்டுகள் | | 40,000 | பற்பல கடனாளிகள் | 52,000 |
| வங்கி மேல்வரைப் பற்று | | 80,000 | சரக்கிருப்பு | 1,20,000 |
| பொதுக்காப்பு | | 1,20,000 | அறைகலன் | 80,000 |
| முதல் கணக்குகள்: | | | பொறியும், பொறித் | |
| மதியழகன் | 2,40,000 | | தொகுதியும் | 1,60,000 |
| கோவிந்தராஜன் | 1,60,000 | | நிலமும் கட்டடமும் | 2,80,000 |
| சண்முகம் | 1,20,000 | 5,20,000 | | |
| | | 8,80,000 | | 8,80,000 |

பின்வரும் பகிர்வுகளுக்குப் பிறகு 2005 ஜூலை 1 அன்று சண்முகம் விலகினார்.

அ) நற்பெயர் ரூ.1,44,000 என மதிப்பிட்டுத் தோற்றுவிப்பது.

ஆ) நிலம், கட்டடத்தின் மதிப்பை ரூ.40,000 மதிப்பேற்றம் செய்வது.

இ) அறைகலன் மற்றும் பொறியும், பொறித்தொகுதியும் முறையே ரூ.4,000 மற்றும் ரூ.12,000 தேய்மானம் நீக்குவது.

ஈ) சண்முகத்துக்கு சேரவேண்டிய தொகை உடனடியாகச் செலுத்துவது.

மறுமதிப்பீட்டுக் கணக்கு, முதல் கணக்குகள், வங்கிக் கணக்கு, புதிய கூட்டாண்மையின் இருப்புநிலைக் குறிப்பு ஆகியவற்றைத் தயாரிக்க.

(விடை: மறுமதிப்பீட்டு இலாபம் ரூ.24,000; இருப்புநிலைக் குறிப்பு மொத்தம் ரூ.8,80,000)

23. X, Y, Z என்ற கூட்டாளிகள் முதல் விகிதத்தில் இலாபம் பகிர்ந்து வந்தனர். 31.12.1994ஆம் நாளைய இருப்புநிலைக் குறிப்பு பின்வருமாறு:

| பொறுப்புகள் | | ரூ. | சொத்துகள் | | ரூ. |
|---|---|---|---|---|---|
| பற்பல கடனீந்தோர் | | 10,500 | வங்கி | | 8,000 |
| காப்பு நிதி | | 24,000 | பற்பல கடனாளிகள் | 10,000 | |
| முதல் கணக்குகள்: | | | கழிக்க: ஐயக்கடன் | | |
| X | 45,000 | | ஒதுக்கு | 500 | 9,500 |
| Y | 30,000 | | சரக்கிருப்பு | | 9,000 |
| Z | 15,000 | 90,000 | இயந்திரம் | | 24,000 |
| | | | நிலமும், கட்டடமும் | | 38,000 |
| | | | நற்பெயர் | | 24,000 |
| | | | இலாப நட்டக் க/கு | | 12,000 |
| | | 1,24,500 | | | 1,24,500 |

பின்வரும் இனங்களைக் கருத்தில் கொண்டு, 1.1.1995 அன்று Z நிறுவனத்திலிருந்து விலகினார்.

அ) நிறுவனத்தின் நற்பெயர் ரூ.18,000 என மதிப்பிடப்பட்டது.

ஆ) ஐயக்கடன் ஒதுக்கு ரூ.300 குறைக்கப்பட்டது.

இ) நிலம், கட்டடம் 20% மதிப்பேற்றம் செய்யப்பட்டது.

ஈ) முழுவதும் இலாப நட்டக் கணக்கில் பற்று செய்யப்பட்ட காப்பீட்டுத் தொகையில் ரூ.1,000 முன்கூட்டிச் செலுத்திய கணக்கிற்கு மாற்றப்பட்டது.

உ) இயந்திரத்தின் மீது 5% தேய்மானம் நீக்கப்பட்டது.

ஊ) கொடுபடா பழுதுபார்ப்புச் செலவுக்கு ரூ.1,100 ஒதுக்கீடு செய்யப்பட்டது.

எ) Z என்பவருக்கு ரூ.5,000 செலுத்தப்பட்டது. மீதி அவரின் கடன் கணக்கிற்கு மாற்றப்பட்டது.

குறிப்பேட்டுப் பதிவுகள் தருக. மேலும் மறுமதிப்பீட்டுக் கணக்கு, முதல் கணக்குகள் மற்றும் மாற்றியமைக்கப்பட்ட நிறுவனத்தின் இருப்புநிலைக் குறிப்பு தயார் செய்க.

(மார்ச் 2003)

(விடை: மறுமதிப்பீட்டு இலாபம் ரூ.6,600; இருப்புநிலைக் குறிப்பு மொத்தம் ரூ.1,09,200)

அத்தியாயம் – 9

# நிறுமக் கணக்குகள்

## (COMPANY ACCOUNTS)

---

### கற்றல் நோக்கங்கள்

இந்த அத்தியாயத்தைக் கற்றபின், நீங்கள்

- நிறுமத்தின் இலக்கணம் மற்றும் தன்மைகளைப் புரிந்து கொள்ள முடியும்.
- பல்வேறு வகையான பங்கு முதல் மற்றும் பங்குகளைப் புரிந்து கொள்ள முடியும்.
- முகமதிப்பு, முனைமம், தள்ளுபடியில் பங்கு வெளியீடு செய்வதற்கான கணக்கியல் முறையை அறிந்து பதிவுகள் செய்ய முடியும்.
- பங்குகள் மிகை ஒப்பம் மற்றும் குறை ஒப்பம் குறித்த தேவையான பதிவுகளைச் செய்ய முடியும்.
- பங்குகள் ஒறுப்பிழப்பு மற்றும் மறுவெளியீட்டுக்கான கணக்கியல் முறையைப் புரிந்து கொள்ள முடியும்.

---

வணிகத்தின் அளவு சிறியதாக உள்ளபோது பெரும்பாலான வணிக அமைப்புகள் பொதுவாக தனியாள் வணிக அமைப்பாக உள்ளன. வணிகம் விரிவடையும் நிலையில் கூட்டாண்மை பிரசித்திப்பெற்றது. இவ்வமைப்பு களின் அளவு மேலும் விரிவுபடுத்தப்பட்ட நிலையில் அதிக அளவிலான

முதல் தேவை மற்றும் கூடுதல் இடர்ப்பாடுகள் காரணமாக கூட்டு பங்கு நிறுமங்கள் உருவாக வழி வகுத்தது.

ஒரு நிறுமம் என்பது, இலாபம் ஈட்ட வேண்டும் என்ற நோக்கில் செயல்படும் வணிகத்தில் பணம் அல்லது பண மதிப்புக்கு ஈடானதை முதலுக்கு அளித்தவர்கள் இணைந்துள்ள ஒரு அமைப்பைக் குறிக்கின்றது. நிறுமத்தின் முதல் பல பங்குகளாகப் பிரிக்கப்படுகிறது. பங்குகள் தடையின்றி மாற்றத்தக்கவை. எத்தனை பங்குகளை வேண்டுமானாலும் உறுப்பினர்கள் (பங்குநர்கள்) பெற இயலும். நிறுமத்திற்கு உருவம் இல்லையென்றாலும் சட்டத்தின் பார்வையில் தனி மனிதனாகக் கருதப்படுகிறது.

நிறுமச் சட்டம் 1956 பிரிவு (3) (1) (i) நிறுமத்திற்கு கீழ்க்கண்டவாறு வரைவிலக்கணம் தருகிறது:

நிறுமம் என்பது "புதியதாக அமைக்கப்பட்டு இச்சட்டத்தின் கீழ் பதிவு செய்யப்பட்ட நிறுமம் அல்லது ஏற்கனவே இயங்கிவரும் நிறுமம்" ஆகும். ஏற்கனவே இயங்கிவரும் நிறுமம் என்பது இதற்கு முன்பு உள்ள நிறுமச் சட்டத்தின்கீழ் பதிவு செய்யப்பட்ட நிறுமத்தைக் குறிக்கின்றது.

## 9.1 நிறுமத்தின் தன்மைகள்:

ஒரு நிறுமம் பின்வரும் முக்கியத் தன்மைகளை பெற்றிருக்கிறது.

### 1. தன்னிச்சையான அமைப்பு:

இது ஒரு தன்னார்வம் உள்ள மனிதர்களின் சங்கமாகும். நிறுமம் உருவாக்குமாறு எந்த ஒரு சட்டமும் ஒருவரை வற்புறுத்துவது இல்லை. அவர்களே முன்வந்து தன்னிச்சையாக உருவாக்குவது ஆகும்.

### 2. வரையறுத்த பொறுப்பு:

பங்குதாரர்களின் பொறுப்பு அவர்கள் நிறுமத்தில் வாங்கிய பங்குகளின் முக மதிப்பு அளவிற்கு அல்லது பொறுப்புறுதி அளித்த அளவிற்கு வரையறுக்கப்பட்டுள்ளது.



### 3. தனிச் சட்ட உருமம்:

நிறுமம் தன் பெயரில் சொத்துக்களை வைத்துக் கொள்ள, வாங்க மற்றும் விற்க, வங்கிக் கணக்கைத் தொடங்க மற்றும் ஒப்பந்தத்தில் ஈடுபட உரிமை பெற்றுள்ளது. நிறுமத்தின்மீது வழக்கு தொடுக்கவும், நிறுமம் மற்றவர் மீது வழக்கு தொடுக்கவும் முடியும்.

### 4. பொது முத்திரை:

நிறுமம் ஒரு செயற்கை மனிதனாக உள்ளதால் ஆவணங்களில் ஒப்பம் செய்ய முடியாது. எனவே இயற்கையான மனிதர்களான இயக்குனர்கள் மூலமே இதனை நிறைவேற்ற முடியும். ஒவ்வொரு நிறுமமும் அதன் பெயர் பொறிக்கப்பட்ட பொது முத்திரையைக் கொண்டிருக்க வேண்டும். இப்பொது முத்திரை நிறுமத்தின் அலுவல் ஒப்பமாகும். இயக்குனர்களால் தயாரிக்கப்படும் எந்த ஒரு ஆவணமும் நிறுமத்தின் பொது முத்திரையுடன் இருத்தல் வேண்டும்.

### 5. நீண்ட வாழ்நாள்:

நிறுமம் தனித்து இயங்கக் கூடியது. நிறுமத்தின் வாழ்நாள் உறுப்பினர்களின் சேர்க்கை மற்றும் விலகல்களால் பாதிப்பது கிடையாது. நிறுமத்தின் வாழ்நாள் உறுப்பினர் மாற்றங்களினால் பாதிக்கப்படுவதில்லை.

### 6. உரிமையும் மேலாண்மையும் தனித்திருத்தல் :

நிறுமத்தின் உரிமையாளர்களின் எண்ணிக்கை அதிக அளவில் உள்ள காரணத்தால் அனைவரும் நிறுமத்தின் அன்றாட நடவடிக்கைகளில் பங்கேற்பது கடினம். எனவே உரிமையும் மேலாண்மையும் பிரிக்கப்பட்டுள்ளது. நிறுமத்தின் மேலாண்மை அதன் இயக்குநரவையிடம் (Board of Directors) ஒப்படைக்கப் பட்டுள்ளது.

### 7. பங்கு மாற்றம்:

தனி நிறுமத்தை தவிர அனைத்து பொது நிறுமத்தின் பங்குகள் தடையின்றி மாற்றப்படும்.

**8. கட்டாயப் பதிவு:**

*அனைத்து நிறுமமும் நிறுமச் சட்டம் 1956ன் கீழ் கட்டாயமாகப் பதிவு செய்யப்பட வேண்டும்.*

**9. புத்தகப் பராமரிப்பு:**

*ஒரு வரையறுத்த நிறுமம் சட்டப்பூர்வமான கணக்கேடுகளை விதிகளுக்கு ஒப்ப பராமரித்தல் வேண்டும்.*

**10. தணிக்கைக் காலம்:**

*பட்டயக் கணக்கர்களால் கட்டாயமாக நிறுமத்தின் கணக்குகள் குறிப்பிட்ட கால இடைவெளியில் தணிக்கை செய்யப்பட வேண்டும். இவர்கள் ஆண்டு பொதுக்குழுக் கூட்டத்தில் இயக்குநர்களின் பரிந்துரையின் பேரில் பங்குதாரர்களால் நியமிக்கப்படுவர்.*

## 9.2 நிதி மூலங்கள் (Sources of Finance):

*நிறுமம் தேவையான நிதியை அக மற்றும் புற மூலங்களில் இருந்து பெறுகின்றது.*

### 9.2.1 அக மூலங்கள் (Internal Sources) :

*இதில் உள்ளடங்குவது:*

*அ. பங்கு முதல்*

*ஆ. நிறுமத்தின் பகிர்ந்தளிக்கப்படாத இலாபம்.*

### 9.2.2 புற மூலங்கள் (External Sources) :

*இதில் உள்ளடங்குவது:*

*அ. கடனீட்டுப் பத்திர வெளியீடு.*

*ஆ. பொது மக்களிடம் பெற்ற வைப்புத் தொகைகள்*

*இ. வணிக வங்கிகளிடம் பெற்ற கடன்கள்*

*ஈ. தொழில் நிதிக் கழகம், மாநில நிதிக் கழகம், இந்தியத் தொழில் மேம்பாட்டு வங்கி, இந்தியத் தொழில் கடன் மற்றும் முதலீட்டுக் கழகம் போன்ற நிதி நிறுவனங்களிடம் பெற்ற கடன்கள்.*



## 9.3 நிறுமத்தின் பங்குமுதல் (Share Capital of Company) :

*நிறுமச்சட்டம் 1956ல் பகுதி 1 அட்டவணை 6ல் இது பற்றி விவாதிக்கப்பட்டுள்ளது. ஒவ்வொரு வியாபாரமும் முதலை கொண்டிருத்தல் வேண்டும். பொதுவாக முதல் என்பது வருவாய் ஈட்டும் நோக்கத்திற்காக வணிகத்தில் பயன்படுத்தப் படும் குறிப்பிட்ட தொகையை குறிக்கின்றது. முதல் கீழ்க்கண்டவாறு வகைப்படுத்தப்படுகிறது:*

**பெயரளவு அல்லது அங்கீகரிக்கப்பட்ட முதல்**
(Nominal or Authorised Capital) :

*ஒரு நிறுமம் அதிகப்பட்சமாக திரட்ட அனுமதிக்கப் பட்டுள்ள தொகையை இது குறிக்கின்றது. இத்தொகை அமைப்பு முறையேட்டில் குறிப்பிடப்பட்டிருக்கும். இதனை பதிவு செய்யப்பட்ட முதல் என்றும் அழைக்கலாம்.*

*உதாரணம்: "A" நிறுமம் ரூ.10 இலட்சம் அங்கீகரிக்கப் பட்ட பங்கு முதலுடன் கூட்டுருவாக்கப்பட்டது. இத்தொகை ஒன்று ரூ.10 வீதம் 1,00,000 பங்குகளாக பிரிக்கப்பட்டது.*

*(குறிப்பு: இந்த உதாரணத்தின் அடிப்படையில் பின்வரும் முதல் வகைப்பாட்டிற்கான காரணங்கள் விளக்கப்பட்டுள்ளன.)*

**வெளியிட்ட முதல்** (Issued Capital):

*பொது மக்கள் வாங்குவதற்கு வெளியிடப்பட்ட அங்கீகரித்த பங்கு முதலில் ஒரு பகுதியை குறிக்கின்றது.*

*உதாரணம்: ஒன்று ரூ.10 வீதம் 60,000 பங்குகள் பொதுமக்களுக்கு வெளியீடு செய்யப்பட்டது.*

*அங்கீகரிக்கப்பட்ட பங்கு முதலுக்கும் வெளியிட்ட பங்கு முதலுக்கும் இடையேயான வேறுபாடு வெளியீடு செய்யப்படாத முதலாகக் கருதப்படுகிறது. இது எதிர்வரும் காலத்தில் பொதுமக்களுக்கு வெளியிடப்படும்.*

**ஒப்பிய பங்கு முதல்** (Subscribed Capital):

*வெளியிட்ட முதலில் பொதுமக்கள் வாங்குவதற்கு ஒப்புக் கொண்ட முதலை இது குறிக்கின்றது.*

*உதாரணம்: பொதுமக்கள் ஒன்று ரூ.10 வீதம் 50,000 பங்குகளை வாங்க ஒப்பினர்.*

**ஒப்பாத முதல்** (Unsubscribed Capital):

*வெளியிட்ட முதலுக்கும், ஒப்பிய முதலுக்கும் இடையேயான வேறுபாட்டினையே ஒப்பாத முதல் எனக் கூறுகின்றோம். மேற்கண்ட உதாரணத்தில் ஒன்று ரூ.10 வீதம் 10,000 பங்குகளை இது குறிக்கின்றது.*

**அழைக்கப்பட்ட முதல்** (Called-up Capital) :

*ஒப்பிய முதலின் மீது நிறுமத்தால் பணம் செலுத்தப்பட அழைத்த தொகையை இது குறிக்கின்றது. உதாரணமாக சென்ற உதாரணத்தில் பொதுமக்கள் ஒப்பிய ஒன்று ரூ.10 வீதம் 50,000 பங்குகளில் ரூ.5 வரை மட்டும் செலுத்துமாறு அழைக்கப்பட்டு இருப்பதை இது குறிக்கின்றது. அதாவது 50,000 பங்குகளுக்கு பங்கு ஒன்றுக்கு ரூ.5 வீதம் பெற வேண்டியது ரூ.2,50,000 (5 x 50,000).*

**அழைக்கப்படாத முதல்** (Uncalled Capital) :

*ஒப்பிய மூலதனத்திற்கும் அழைத்த முதலுக்கும் இடையேயான வேறுபாட்டினை இது குறிக்கின்றது. மேற்சொன்ன உதாரணத்தில் அழைக்கப்படாத முதல் ரூ.2,50,000 (5 x 50,000) ஆகும்.*

**செலுத்தப்பட்ட முதல்** (Paid-up Capital) :

*இது அழைக்கப்பட்ட முதலில் பங்குநரால் உண்மையில் செலுத்தப்பட்ட தொகையை குறிக்கின்றது. இவ்வாறு அழைக்கப்பட்ட முதலில் சில பங்குதாரர்கள் அழைப்பு தொகையை செலுத்தாமல் இருப்பர். இத்தொகையை அழைப்பு நிலுவை எனக் கூறலாம். அழைக்கப்பட்ட முதலிலிருந்து அழைப்பு நிலுவையைக் கழித்தால் செலுத்தப்பட்ட முதலைப் பெறலாம்.*

*உதாரணமாக 500 பங்குகளை வைத்துள்ள ஒரு பங்குதாரர் பங்கு ஒன்றுக்கு ரூ.2 வீதம் அழைப்பு தொகையை செலுத்த தவறிவிட்டார். இந்நிலையில் செலுத்தப்பட்ட முதலானது ரூ.2,49,000 ஆகவும் அழைப்பு நிலுவை ரூ.1,000 ஆகவும் இருக்கும்.*



**காப்பு முதல்** (Reserve Capital) :

*ஒரு நிறுமம் அதன் கலைப்பின்போது மட்டும் அழைப்பு விடுக்கலாம் என ஒதுக்கி வைத்துள்ள அழைக்கப்படாத முதலின் ஒரு பகுதியை காப்பு முதல் என்று அழைக்கலாம். இதற்காக ஒரு சிறப்பு தீர்மானம் நிறைவேற்றப்பட வேண்டும். இதனை நிறுமத்தின் இருப்புநிலைக் குறிப்பில் காண்பிப்பதில்லை.*

*பல்வேறுபட்ட பங்கு முதலை பின்வரும் வரைபடத்தின் மூலம் எளிமையாக அறியலாம்.*




**எடுத்துக்காட்டு : 1**

*ஒரு நிறுமத்தின் அங்கீகரிக்கப்பட்ட முதல் ரூ.20,00,000. பங்கு ஒன்றுக்கு ரூ.10 வீதம் 2,00,000 பங்குகளாகப் பிரிக்கப்பட்டு கூட்டுருவாக்கப்பட்டது. அதில் 1,90,000 பங்குகளை நிறுமம் பொதுமக்களுக்கு வெளியிட்டது. ஆனால், பொது மக்கள் அவற்றில் 1,80,000 பங்குகளை ஒப்பினர். பங்கு ஒன்றுக்கு ரூ.6 வீதம் இயக்குநர்கள் செலுத்தக் கோரினர். அவற்றில் 1000 பங்குகளுக்கான அழைப்பு பணம் ரூ.2 தவிர அனைத்துப் பணமும் பெறப்பட்டது. பலவகையான பங்கு முதலைக் கணக்கிடவும்.*

**விடை:**

| பங்கு முதலின் வகைகள் | | தொகை ரூ. |
|---|---|---|
| அங்கீகரிக்கப்பட்டது | பங்கு ஒன்றுக்கு ரூ.10 வீதம் 2,00,000 பங்குகள் | 20,00,000 |
| வெளியிட்டது | பங்கு ஒன்றுக்கு ரூ.10 வீதம் 1,90,000 பங்குகள் | 19,00,000 |
| ஒப்பியது | பங்கு ஒன்றுக்கு ரூ.10 வீதம் 1,80,000 பங்குகள் | 18,00,000 |
| அழைக்கப்பட்டது | பங்கு ஒன்றுக்கு ரூ.6 வீதம் 1,80,000 பங்குகள் | 10,80,000 |
| செலுத்தப்பட்டது | (1,80,000 பங்குகள் X ரூ.6) – (1,000 பங்குகள் X ரூ.2) | 10,78,000 |
| அழைப்பு நிலுவை | பங்கு ஒன்றுக்கு ரூ. 2 வீதம் 1,000 பங்குகள் | 2,000 |

இருப்புநிலைக் குறிப்பில் இடம்பெறும் சில வருவிய (Extract) பதிவுகளின் மாதிரி கீழே தரப்பட்டுள்ளது.

**______ நிறுமத்தின் ______ நாளைய வருவிய இருப்புநிலைக் குறிப்பு**

| பொறுப்புகள் | ரூ. | ரூ. | சொத்துகள் | ரூ. | ரூ. |
|---|---|---|---|---|---|
| பங்கு முதல்: அங்கீகரிக்கப்பட்டது ஒன்று ரூ. ____ வீதம் ____ பங்குகள் | | XXX | நடப்பு சொத்துகள்: வங்கியில் ரொக்கம் | | XXX |
| வெளியிடப்பட்டது: ஒன்று ரூ. ____ வீதம் ____ பங்குகள் | | XXX | பல்வகை செலவுகள்: பங்கு வெளியிட்டு தள்ளுபடி | | XXX |
| ஒப்பியது: ஒன்று ரூ. ____ வீதம் ____ பங்குகள் | | XXX | | | |
| அழைக்கப்பட்டது: ஒன்று ரூ. ____ வீதம் ____ பங்குகள் | | XXX | | | |
| செலுத்தப்பட்டது: ஒன்று ரூ. ____ வீதம் ____ பங்குகள் | XXX | | | | |
| கழிக்க: அழைப்பு நிலுவை | XXX | | | | |
| | XXX | | | | |
| கூட்டுக: ஒறுபிழப்பு செய்த பங்குகள் | XXX | | | | |
| | | XXX | | | |
| காப்பும் மிகுதியும்: | | | | | |
| பத்திர முனைமம் | | XXX | | | |
| முதலினக் காப்பு | | XXX | | | |
| | | XXX | | | XXX |



## 9.4 பங்குகள் (Shares) :

ஒரு நிறுமத்தின் முதல் குறைந்த மதிப்புடைய அலகுகளாக பிரிக்கப்படுகிறது. இவ்வலகுகள் பங்குகள் என்று அழைக்கப்படுகின்றன. நிறுமச் சட்டம் பிரிவு எண் 2 (46) பங்குகள் என்பது ஒரு நிறுமத்தின் பங்கு முதலில் பங்கேற்பதைக் குறிக்கின்றது. இப்பங்குகளை வைத்துள்ளோர் பங்குதாரர்கள் என்று அழைக்கப்படுகின்றனர்.

உதாரணம்: அங்கீகரிக்கப்பட்ட முதலான ரூ.10,00,000 ரூ.10 மதிப்புடைய 1,00,000 அலகுகளாகப் பிரிக்கப்பட்டிருந்தால் ரூ.10 மதிப்புடைய ஒவ்வொரு அலகும் ரூ.10 மதிப்புடைய பங்கு என அழைக்கப்படும். மேற்கண்ட உதாரணத்தின்படி நிறுமம் பங்கொன்று ரூ.10 மதிப்புடைய 1,00,000 பங்குகளைப் பெற்றிருப்பதாகக் கொள்ளலாம்.

இப்பங்குகள் அடையாளம் கண்டு கொள்ளும்வண்ணம் வரிசை எண் இடப்பட வேண்டும். இவைகள் நிறுமத்தின் சங்க நடைமுறை விதிகளுக்குட்பட்டு மாற்றத் தகுந்தவை..

### 9.4.1 பங்குகளின் வகைகள் (Types of Shares) :

நிறும (திருத்தப்பட்ட) சட்டம் 2000த்தின்படி, ஒரு பங்குகள் வரையறு நிறுமம் இருவகையான பங்கு முதலை மட்டுமே பெற்றிருக்கும். அவை,

i) முன்னுரிமை பங்குகள் (Preference Shares)

ii) சாதாரண/நேர்மை/பொதுநிலைப் பங்குகள் (Equity Shares)

## I. முன்னுரிமைப் பங்குகள்:

*நிறுமச் சட்டம் 1956 பிரிவு எண் 85 முன்னுரிமைப் பங்குகள் பற்றி கூறுகிறது. பின்வரும் இரு நிபந்தனைகளை பூர்த்தி செய்யும் பங்குகள் முன்னுரிமைப் பங்குகள் எனப்படும்.*

*அ) பிற பங்குகளுக்கு ஏதேனும் பங்காதாயம் வழங்கப்படுவதற்கு முன்பு குறிப்பிட்ட விகிதத்தில் பங்காதாயம் பெறும் உரிமை.*

*ஆ) கலைப்பின்போது சாதாரண பங்குதாரர்களுக்கு அவருடைய முதலை தருவதற்கு முன்பு இப்பங்குகள் முதலைத் திரும்பப் பெறும் உரிமை.*

### முன்னுரிமைப் பங்குகளின் வகைகள்:

*முன்னுரிமைப் பங்குகளை பின்வருமாறு பல்வேறு வகைகளாக பிரிக்கலாம்.*




### பங்காதாயம் செலுத்தும் நோக்கில்:

**குவிவு முன்னுரிமைப் பங்குகள்** (Cumulative Preference Shares) : *இப்பங்குகளை உடையவர்கள் பங்காதாய நிலுவையை பின்வரும் ஆண்டுகளின் இலாபத்தில் பெறும் உரிமையை பெற்றுள்ளனர்.*



**குவியா முன்னுரிமை பங்குகள்** (Non-Cumulative Preference Shares)**:** *இவ்வகை பங்குகளுக்கு பங்காதாய நிலுவை வழங்கப்படமாட்டாது.*

### மீள்தகு கருத்தின் நோக்கில்:

**மீள்தகு முன்னுரிமைப் பங்குகள்** (Redeemable Preference Shares) : *வெளியீட்டு நிபந்தனையின்படி குறிப்பிட்ட காலத்திற்கு பின் பங்குகளின் தொகையை திரும்ப அளித்து மீட்பு செய்யப்படுகின்றது. இந்தியாவில் பெரும்பாலான நிறுவனங்கள் இவ்வகை முன்னுரிமை பங்குகளை மட்டும் வெளியிடுகின்றன.*

**மீள்தகா முன்னுரிமை பங்குகள்** (Irredeemable Preference Shares): *இவ்வகைப் பங்குகளின் தொகை கலைப்புக்கு முன் திரும்ப அளிக்கப்படு வதில்லை. (தற்போது அனைத்து வகை முன்னுரிமைப் பங்குகளையும் மீட்கலாம்).*

### இலாபத்தில் பங்கு வகிக்கும் நோக்கில்:

**பங்கு வகிக்கும் முன்னுரிமைப் பங்குகள்** (Participating Preference Shares): *இவ்வகை முன்னுரிமைப் பங்குகளை உடையவர்கள் சாதாரண பங்குதாரர்களுக்கு பங்காதாயம் அளித்த பின் எஞ்சிய இலாபத்தில் இலாபப் பங்கினை பெறத் தகுதயுடைய வர்கள். இதுபோலவே கலைப்பின் போது சாதாரண பங்குதாரர்களுக்கு முதல் தொகையைத் திரும்பச் செலுத்திய பின் எஞ்சியத் தொகையில் பங்கு பெறும் உரிமையைப் பெற்றுள்ளனர்.*

**பங்கு வகிக்கா முன்னுரிமைப் பங்குகள்:** (Non-Participating Preference Shares): *இது சாதாரண முன்னுரிமைப் பங்கு வகை போன்றதாகும். இவ்வகைப் பங்குகள் நிலையான பங்காதாயம் பெற மட்டுமே தகுதியுடையவை.*

### மாற்றத்தக்க கருத்தின்படி:

**மாற்றத்தகு முன்னுரிமை பங்குகள்** (Convertible Preference Shares): *இவ்வகை பங்குகளை சாதாரண பங்குகளாக மாற்றிக் கொள்ளலாம்.*

**மாற்றத்தகா முன்னுரிமைப் பங்குகள்** (Non-Convertible Preference Shares): *சாதாரண பங்குகளாக மாற்ற முடியாத பங்குகள் மாற்றத்தகா முன்னுரிமைப் பங்குகள் என்றழைக்கப்படுகிறது.*

சங்க நடைமுறை விதிகளிலோ அல்லது வெளியீட்டு நிபந்தனைகளிலோ முன்னுரிமைப் பங்குகள் பற்றி ஏதும் கூறப்படாமலிருந்தால் அத்தகு முன்னுரிமைப் பங்குகள் மாற்றத் தகாதவை எனக் கொள்ளுதல் வேண்டும்.

II. **சாதாரண பங்குகள்** (Equity Shares) :

முன்னுரிமைப் பங்குகள் அல்லாத அனைத்துப் பங்குகளும் சாதாரணப் பங்குகள் என்று அழைக்கப்படும். பிரிதொரு வகையில் கூறும்போது, முன்னுரிமைப் பங்குதாரருக்கு பங்காதாயம் மற்றும் முதல் தொகையைத் திரும்ப அளித்த பின் இரண்டையும் பெறத் தகுதியுடைய பங்குகளை சாதாரண பங்குகள் எனலாம். இதற்கான பங்காதாய விகிதத்தை இயக்குனரவை முடிவு செய்யும். பொதுவாக, சாதாரண பங்குதாரர்கள் வணிகத்தின் நடவடிக்கைகளைக் கட்டுப்படுத்துவர்.

## 9.5 பங்கு வெளியீடு (Issue of Shares) :

நிறுமத்தின் பங்குகள் இரு வழிகளில் வெளியிடலாம்:

1) ரொக்கம் தவிர இதர மறுபயனுக்கு மற்றும் (For consideration other than cash)

2) ரொக்கத்திற்கு (For cash)

### 9.5.1 ரொக்கம் தவிர இதர மறுபயனுக்கு :

சில நேரங்களில் நிறுமம் நிலம், கட்டடம் போன்ற சொத்துகளை வாங்கியதற்கு ரொக்கம் கொடுப்பதற்கு பதில் விற்பனையாளர்களுக்கு முழுவதும் செலுத்தப்பட்ட பங்குகளை அளிக்க ஒப்புக்கொள்ளும்.

### 9.5.2 ரொக்கத்திற்கு பங்கு வெளியீடு :

பங்குகளை ரொக்கத்திற்கு வெளியிடுவதற்கான வழிமுறைகள் கீழே கொடுக்கப்பட்டுள்ளது.

**1. தகவலறிக்கை வெளியீடு** (Issue of Prospectus) :

பங்குகளை பொது மக்களுக்கு வெளியிடும்போது நிறுமச் சட்டத்தின் விதிகள் மற்றும் இந்திய பத்திர மற்றும் மாற்றகங்கள் வாரியத்தின் (Securities and Exchange Board India)



வழிகாட்டு நெறிமுறைகளை பூர்த்தி செய்தல் அவசியமாகும். ஒவ்வொரு பொது வெளியீடும் தகவலறிக்கை வெளியிடுதலை பின்பற்றி இருக்க வேண்டும். பங்கு வெளியீட்டு நிபந்தனைகள் தகவலறிக்கையில் வெளியிடப்படும். இத்தகவலறிக்கையை படித்த பின்னரே, பொது மக்கள் பங்குகள் வேண்டி பரிந்துரை செய்யப்பட்ட படிவத்தில் விண்ணப்பிக்க வேண்டும்.

**2. விண்ணப்பத் தொகையை பெறுதல்** (Receipt of Application Money) :

பொது நிறுமம் பங்குகளை எப்போது வெளியிட்டாலும் முன்னோடி செய்தித்தாள்களில் வெளியீடு குறித்த விளம்பரம் தருதல் வேண்டும். பங்குகளை வாங்க விரும்பும் யாவரும் விண்ணப்பத்தினை தகவலறிக்கையோடு பெறலாம். தகவலறிக்கையில் உள்ள தகவல்கள் திருப்தி அளிக்குமானால், விண்ணப்பத் தொகையை செலுத்தி பூர்த்தி செய்த படிவத்துடன் விண்ணப்பத்தில் குறிப்பிட்ட ஏதேனும் வங்கிக்கு (கிளைக்கு) அனுப்ப வேண்டும். விண்ணப்பதாரர் விண்ணப்பத் தொகையாக குறைந்தபட்சம் பங்கின் முகமதிப்பில் 5% செலுத்தல் வேண்டும் (பிரிவு 69(3)). எனினும் இந்தியப் பத்திர மற்றும் மாற்றகங்கள் வாரியத்தின் (இ.ப.மா.வா) வழிகாட்டு நெறிமுறையின்படி குறைந்த அளவு விண்ணப்பத் தொகை வெளியீட்டு விலையில் 25% ஆக இருக்க வலியுறுத்தப்படுகிறது. இதற்கான பதிவு வருமாறு:

| | | |
|---|---|---|
| வங்கிக் (ரொக்க) க/கு | ப | (மொத்த விண்ணப்ப |
| பங்கு விண்ணப்பக் க/கு | | தொகை பெற்றது) |

(_____ பங்குகளுக்கு பங்கு ஒன்றுக்கு ரூ _____ வீதம் விண்ணப்பத்தின் பொழுது தொகை பெறப்பட்டது)

வங்கி நிறுமத்திற்கு விண்ணப்பத் தொகையோடு விண்ணப்பதாரரின் பட்டியலையும் அனுப்பும். பொது வெளியீடு குறைந்த பட்சம் மூன்று வேலை நாட்களுக்கு அனுமதிக்கப்படும். ஆனால், பத்து வேலை நாட்களுக்கு மேல் அனுமதிக்கப்படமாட்டாது. பங்குகளின் வெளியீட்டு மதிப்பை ஒரே தவணை அல்லது பல தவணைகளில் பெறலாம்.

**குறிப்பு : குறிப்பேட்டு பதிவுகள்**

பங்கு வெளியீடு குறித்து இருவிதமான குறிப்பேட்டுப் பதிவுகள் உள்ளன. அவைகள் ரொக்கப் பதிவுகள் மற்றும் மாற்றுப் பதிவுகள் எனப்படும். ரொக்கப் பதிவுகள் பங்கு மீதான பல்வேறு தவணைகள் பெறுவதை குறித்தது ஆகும். மாற்றுப் பதிவுகள் என்பது இத்தொகையை பங்கு முதலுக்கு மாற்றுதலைக் குறிக்கிறது. விண்ணப்பத்தின் போது ரொக்கப் பதிவு முன்னதாகவும் மாற்றுப் பதிவு பின்னதாகவும் இருக்கும். ஆனால் ஒதுக்கீடு மற்றும் அழைப்பின் போது மாற்றுப் பதிவு முன்னதாகவும் ரொக்கப் பதிவு பின்னதாகவும் இருக்கும். ஏனெனில் ஒதுக்கீடோ அல்லது அழைப்போ விடுக்கப் பட்டவுடன் நிலுவை ஏற்படுவதால், பணத்தைப் பெறும் வரை காத்திராமல், பங்கு முதல் கணக்கு வரவு செய்யப்பட்டுவிடும்.

**3. பங்கு ஒதுக்கீடு** (Allotment of Shares) :

பங்குகளுக்கான விண்ணப்பம் பங்குகள் வாங்குவதற்கான கோரிக்கையாக உள்ள நிலையில், நிறுமம் ஒதுக்கீட்டின் வாயிலாக இக்கோரிக்கையை ஏற்பு செய்கின்றது. நிறுமம் வெளியிட்டத் தொகையில் 90% குறும ஒப்பம் (Minimum Subscription) (இயக்குநர்கள் ஒதுக்கீடு செய்வதற்கு முன் பொது மக்களால் ஒப்பப்பட வேண்டிய குறைந்தபட்ச தொகை) பெறாவிடின், நிறுமம் அனைத்து ஒப்பியத் தொகையையும் திரும்ப செலுத்த வேண்டும். இவ்வாறு பங்குகள் ஒதுக்கீடு செய்யப்பட்ட பின் விண்ணப்பத்தாரர்கள் நிறுமத்தின் பங்குநர் அல்லது உறுப்பினர் என்ற தகுதியைப் பெறுகின்றனர்.

**விண்ணப்பத் தொகை மாற்றம்** (Transfer of Application Money)

நிறுமம் ஒதுக்கீடு செய்யும் நாளில், ஒதுக்கீடு பெற்ற பங்குகளின் விண்ணப்பத் தொகை பங்கு முதலில் ஒரு பகுதியாகக் கருதப்படும். எனவே இவ்விண்ணப்பத் தொகையை பங்கு முதல் கணக்கிற்கு மாற்ற வேண்டும்.இதைப் பதிவு செய்வதற்கான குறிப்பேட்டுப் பதிவு:

| | | |
|---|---|---|
| பங்கு விண்ணப்பக் க/கு | ப | (ஒதுக்கீடு பெற்ற பங்குக |
| பங்கு முதல் க/கு | | ளின் எண்ணிக்கை x |
| (____ பங்குகள் மீதான விண்ணப்பத் | | ஒரு பங்கின் மீதான |
| தொகை பங்கு முதல் கணக்கிற்கு | | விண்ணப்பத் தொகை) |
| மாற்றப்பட்டது) | | |



**ஒதுக்கீடு மீது பெறவேண்டிய தொகை:**

பங்குகள் ஒதுக்கீடு செய்யப்பட்ட பின், பங்குதாரர்களுக்கு ஒதுக்கீட்டுத் தொகையை செலுத்த வேண்டிய பொறுப்பு ஏற்படுகிறது. இதைப் பதிவு செய்வதற்கான குறிப்பேட்டுப் பதிவு:

| | | |
|---|---|---|
| பங்கு ஒதுக்கீட்டுக் க/கு | ப | (ஒதுக்கீடு பெற்ற பங்கு |
| பங்கு முதல் க/கு | | களின் எண்ணிக்கை x |
| (____ பங்குகள் மீது பங்கு ஒன்றுக்கு | | ஒரு பங்கின் மீதான |
| ரூ.____ வீதம் ஒதுக்கீடுத் தொகை | | ஒதுக்கீட்டுத் தொகை) |
| பெற வேண்டியது) | | |

**ஒதுக்கீட்டு தொகை பெற்றது :**

ஒதுக்கீட்டுத் தொகை பெற்றதும், பின்வரும் பதிவு செய்யப்பட வேண்டும்.

| | |
|---|---|
| வங்கிக் க/கு | ப |
| பங்கு ஒதுக்கீட்டுக் க/கு | |
| (ஒதுக்கீட்டுத் தொகை பெற்றது) | |

**4. பங்கு மீது அழைப்பு** (Call on Shares) :

ஒதுக்கீடு செய்த பின் பங்கு மீதான முழுத் தொகையும் அழைக்கப்படாவிடின், மீதித் தொகையை அழைப்பதற்கான உரிமையை இயக்குநர்கள் பெற்றுள்ளனர். அழைப்பு என்பது பங்கு மீதான கொடுபடாத தவணைத் தொகையாகும். ஒரு அழைப்பு கடிதம் பொதுவாக ஒவ்வொரு பங்குதாரருக்கும் கொடுக்கப்படும். ஒரு நிறுமம் அதிகபட்சம் மூன்று அழைப்புகளை விடுக்கலாம். அழைப்புத் தொகை வெளியிட்ட விலையில் 25% குறையாமல் இருத்தல் வேண்டும். நிறுமத்தின் சங்க நடைமுறை விதியில் வேறுவிதமாகக் கூறப்பட்டாலன்றி ஒரு அழைப்புக்கும், மற்றொரு அழைப்புக்கும் இடையே குறைந்தது ஒரு மாத இடைவெளி அவசியமாகும். இதைப் பதிவு செய்வதற்கான குறிப்பேட்டுப் பதிவு:

**அழைப்பு மீது பெற வேண்டியத் தொகை;**

| | | |
|---|---|---|
| *பங்கு (முதலாவது/இரண்டாவது/ மூன்றாவது) அழைப்புக் க/கு* | *ப* | *(பங்குகளின் எண்ணிக்கை x* |
| *பங்கு முதல் க/கு* | | *ஒரு பங்கின் மீதான* |
| *(____ பங்குகள் மீது பங்கு ஒன்றுக்கு ரூ.____ வீதம் அழைப்பு தொகை பெறவேண்டியது)* | | *அழைப்புத் தொகை)* |

**அழைப்புத் தொகை பெறும் போது;**

| | | |
|---|---|---|
| *வங்கிக் க/கு* | *ப* | |
| *பங்கு (முதலாவது/இரண்டாவது/ மூன்றாவது) அழைப்புக் க/கு* | | |
| *(அழைப்புத் தொகை பெறப்பட்டது)* | | |

**மேற்கண்ட பதிவுகளின் சுருக்கம் பின்வருமாறு:**

**1. விண்ணபத்தொகை பெறும் போது:**

| | | |
|---|---|---|
| *வங்கி/ரொக்கக் க/கு* | *ப* | *(விண்ணபத்தின்* |
| *பங்கு விண்ணப்பக் க/கு* | | *பொழுது பெற்ற மொத்த* |
| *(____ பங்குகளுக்கு பங்கு ஒன்றுக்கு ரூ.____ வீதம் தொகை பெறப்பட்டது)* | | *தொகை)* |

**2. பங்கு முதல் கணக்கிற்கு மாற்றுதல்:**

| | | |
|---|---|---|
| *பங்கு விண்ணப்பக் க/கு* | *ப* | *(ஒதுக்கீடு பெற்ற பங்கு* |
| *பங்கு முதல் க/கு* | | *களின் எண்ணிக்கை x* |
| *(____ பங்குகள் மீதான விண்ணபத் தொகை பங்கு முதல் கணக்கிற்கு மாற்றம்)* | | *ஒரு பங்கின் மீதான விண்ணபத் தொகை)* |

**3. ஒதுக்கீட்டுத் தொகை பெற வேண்டியது:**

| | | |
|---|---|---|
| *பங்கு ஒதுக்கீட்டுக் க/கு* | *ப* | *(ஒதுக்கீடு பெற்ற பங்கு* |
| *பங்கு முதல் க/கு* | | *களின் எண்ணிக்கை x* |
| *(____ பங்குகள் மீது பங்கு ஒன்றுக்கு ரூ.____ வீதம் ஒதுக்கீட்டுத் தொகை பெற வேண்டியது)* | | *ஒரு பங்கின் மீதான ஒதுக்கீட்டுத் தொகை)* |



**4. ஒதுக்கீட்டுத் தொகை பெறும்போது:**

| | | |
|---|---|---|
| *வங்கிக் க/கு* | *ப* | |
| *பங்கு ஒதுக்கீட்டுக் க/கு* | | |
| *(ஒதுக்கீட்டுத் தொகை பெற்றது)* | | |

**5. அழைப்புத் தொகை பெற வேண்டியது:**

| | | |
|---|---|---|
| *பங்கு (முதலாவது/இரண்டாவது/ மூன்றாவது) அழைப்புக் க/கு* | *ப* | *(பங்குகளின் எண்ணிக்கை x* |
| *பங்கு முதல் க/கு* | | *ஒரு பங்கின் மீதான* |
| *(____ பங்குகள் மீது பங்கு ஒன்றுக்கு ரூ.____ வீதம் அழைப்பு தொகை பெற வேண்டியது)* | | *அழைப்புத் தொகை)* |

**6. அழைப்புத் தொகை பெறும்போது:**

| | | |
|---|---|---|
| *வங்கிக் க/கு* | *ப* | |
| *பங்கு முதலாவது/இரண்டாவது/ மூன்றாவது அழைப்புக் க/கு* | | |
| *(அழைப்புத் தொகை பெறப்பட்டது)* | | |

**வெளியீட்டு நிபந்தனைகள்** (Terms of Issue) :

*பங்குகள் பின்வரும் மூன்று வழி முறைகளில் வெளியிடப்படலாம்.*

*அ)* பங்குகளை முக மதிப்பில் வெளியிடுதல்

*ஆ)* பங்குகளை முனைமத்தில் வெளியிடுதல்

*இ)* பங்குகளை தள்ளுபடியில் வெளியிடுதல்

*கணக்கியல் முறை ஒவ்வொரு வகை வெளியீட்டிற்கும் ஒவ்வொரு விதமாக வேறுபட்டு இருக்கும். நாம் இப்பொழுது இம்மூன்று முறைகள் பற்றி விரிவாக விவாதிக்கலாம்:*

**அ) முக மதிப்பில் பங்குகள் வெளியீடு** (Issue of Shares at Par) :

*பங்கு வெளியீட்டு மதிப்பு, முகமதிப்புக்குச் சமமாக இருப்பின் அதனை முகமதிப்பில் பங்குகள் வெளியீடு எனலாம்.*

உதாரணம்: ரூ.10 முக மதிப்புள்ள பங்குகள், ரூ.10 விலைக்கே வெளியீடு செய்யப்பட்டால் அது முக மதிப்பில் பங்குகள் வெளியீடு ஆகும்.

### எடுத்துக்காட்டு : 2

பாரத் வரையறுத்த நிறுமம் ரூ.4,00,000 அங்கீகரிக்கப்பட்ட முதலுடன் தோற்றுவிக்கப்பட்டது. அம்முதல் ரூ.100 மதிப்புடைய பங்குகளாகப் பிரிக்கப்பட்டுள்ளது.

அந்நிறுவனம் 3000 பங்குகளை பின்வருமாறு செலுத்தத்தக்க வண்ணம் வெளியிட்டது:

| | | |
|---|---|---|
| விண்ணப்பங்களுடன் | – பங்கொன்றுக்கு | ரூ. 30. |
| ஒதுக்கீட்டின்பொழுது | – பங்கொன்றுக்கு | ரூ.20. |
| முதலாவது அழைப்பு மீது | – பங்கொன்றுக்கு | ரூ.25. |
| இரண்டாவது அழைப்பு மீது | – பங்கொன்றுக்கு | ரூ. 25. |

இப்பங்குகளை பொது மக்கள் வாங்க ஒப்புக் கொண்டனர். மேலும் அனைத்து பணமும் பெறப்பட்டது. இவற்றைப் பதிவு செய்வதற்குரிய குறிப்பேட்டுப் பதிவுகளைத் தருக.

### விடை:

**பாரத் நிறும ஏடுகளில் குறிப்பேடு**

| நாள் | விவரம் | பே.ப.எ. | பற்று ரூ. | வரவு ரூ. |
|---|---|---|---|---|
| | வங்கிக் க/கு ப | | 90,000 | |
| | பங்கு விண்ணப்பக் க/கு | | | 90,000 |
| | (ரூ.30 வீதம் 3000 பங்குகளுக்கு விண்ணப்பப் பணம் பெற்றது) | | | |



| நாள் | விவரம் | பே.ப.எ. | பற்று ரூ. | வரவு ரூ. |
|---|---|---|---|---|
| | பங்கு விண்ணப்பக் க/கு ப | | 90,000 | |
| | பங்கு முதல் க/கு | | | 90,000 |
| | (ஒதுக்கீடு செய்யப்பெற்ற 3000 பங்குகள் மீதான விண்ணப்பத் தொகையை பங்கு முதல் கணக்கிற்கு மாற்றல்) | | | |
| | பங்கு ஒதுக்கீட்டுக் க/கு ப | | 60,000 | |
| | பங்கு முதல் க/கு | | | 60,000 |
| | (3000 பங்குகளுக்கு ரூ.20 வீதம் ஒதுக்கீட்டுத் தொகை பெற வேண்டியது) | | | |
| | வங்கிக் க/கு ப | | 60,000 | |
| | பங்கு ஒதுக்கீட்டுக் க/கு | | | 60,000 |
| | (ஒதுக்கீட்டு தொகை பெறப்பட்டது) | | | |
| | பங்கு முதலாவது அழைப்புக் க/கு ப | | 75,000 | |
| | பங்கு முதல் க/கு | | | 75,000 |
| | (ஒன்று ரூ.25 வீதம் 3000 பங்குகளுக்கு முதலாவது அழைப்பின் மீது பெற வேண்டியது) | | | |
| | வங்கிக் க/கு ப | | 75,000 | |
| | பங்கு முதலாவது அழைப்புக் க/கு | | | 75,000 |
| | (பங்கு முதலாவது அழைப்புத் தொகை பெறப்பட்டது) | | | |
| | பங்கு இரண்டாவது மற்றும் இறுதி அழைப்புக் க/கு ப | | 75,000 | |
| | பங்கு முதல் க/கு | | | 75,000 |
| | (ஒன்று ரூ. 25 வீதம் 3000 பங்குகளுக்கு இரண்டாவது மற்றும் இறுதி அழைப்புத் தொகை பெற வேண்டியது) | | | |
| | வங்கிக் க/கு ப | | 75,000 | |
| | பங்கு இரண்டாவது மற்றும் இறுதி அழைப்புக் க/கு | | | 75,000 |
| | (இறுதி அழைப்புத் தொகை பெறப்பட்டது) | | | |

**குறை ஒப்பம்** (Under Subscription) :

வெளியிட்ட பங்குகளை, பொதுமக்கள் வாங்க ஆர்வம் காட்டாத காரணத்தால், அனைத்து பங்குகளும் ஏற்கப்படவில்லை. இதனை குறை ஒப்பம் எனலாம். எனினும் குறும ஒப்பம் இல்லா நிலையில் ஒதுக்கீடு செய்யப்பட மாட்டாது. குறை ஒப்பத்திற்கு எவ்விதமான சிறப்பு பதிவும் தேவையில்லை. விண்ணப்பிக் கப்பட்ட பங்குகளின் அடிப்படையில் குறிப்பேட்டுப் பதிவுகள் செய்யப்படும்.

**எடுத்துக்காட்டு : 3**

கோவிந்தா வரையறு நிறுமம் ஒன்று ரூ.100 வீதம் 10,000 பங்குகளை பொது மக்களுக்கு கீழ்காணும் நிபந்தனைகளில் வெளியிட்டது.

| | |
|---|---|
| விண்ணப்பத்தின் போது | ரூ. 30 |
| ஒதுக்கீட்டின் போது | ரூ. 20 |
| முதல் அழைப்பின் போது | ரூ. 20 |
| இறுதி அழைப்பின் போது | ரூ. 30 |

பொதுமக்களிடம் இருந்து 9000 பங்குகளுக்கு விண்ணப்பம் பெறப்பட்டு ஒதுக்கீடு செய்யப்பட்டது. அனைத்து தொகையும் பெறப்பட்டது. குறிப்பேட்டுப் பதிவுகள் தருக.

**விடை:**

**கோவிந்தா வரையறு நிறுமத்தின் ஏடுகளில் குறிப்பேட்டுப் பதிவுகள்**

| நாள் | விவரம் | பே.ப.எ. | பற்று ரூ. | வரவு ரூ. |
|---|---|---|---|---|
| | வங்கிக் க/கு ப<br>பங்கு விண்ணப்பக் க/கு<br>(9000 பங்குகள் மீது பங்கு ஒன்று ரூ.30 வீதம் தொகை பெறப்பட்டது) | | 2,70,000 | 2,70,000 |
| | பங்கு விண்ணப்பக் க/கு ப<br>பங்கு முதல் க/கு<br>(9000 பங்குகள் மீதான விண்ணப்பத் தொகை பங்கு முதல் கணக்கிற்கு மாற்றல்) | | 2,70,000 | 2,70,000 |
| | பங்கு ஒதுக்கீட்டுக் க/கு ப<br>பங்கு முதல் க/கு<br>(9000 பங்குகள் மீது பங்கு ஒன்றுக்கு ரூ.20 வீதம் ஒதுக்கீடு தொகை பெற வேண்டியது) | | 1,80,000 | 1,80,000 |
| | வங்கிக் க/கு ப<br>பங்கு ஒதுக்கீட்டுக் க/கு<br>(ஒதுக்கீடு தொகை பெறப்பட்டது) | | 1,80,000 | 1,80,000 |
| | பங்கு முதல் அழைப்புக் க/கு ப<br>பங்கு முதல் க/கு<br>(9000 பங்குகள் மீதும் பங்கு ஒன்றுக்கு ரூ.20 வீதம் அழைப்புத் தொகை பெற வேண்டியது) | | 1,80,000 | 1,80,000 |
| | வங்கிக் க/கு ப<br>பங்கு முதல் அழைப்புக் க/கு<br>(பங்கு முதல் அழைப்புத் தொகை பெற்றது) | | 1,80,000 | 1,80,000 |
| | பங்கு இரண்டாவது மற்றும் இறுதி அழைப்புக் க/கு ப<br>பங்கு முதல் க/கு<br>(9000 பங்குகள் மீது பங்கு ஒன்றுக்கு ரூ.30 வீதம் பெற வேண்டிய தொகை) | | 2,70,000 | 2,70,000 |
| | வங்கிக் க/கு ப<br>பங்கு இரண்டாவது மற்றும் இறுதி அழைப்புக் க/கு<br>(இறுதி அழைப்புத் தொகை பெற்றது) | | 2,70,000 | 2,70,000 |

**மிகை ஒப்பம்** (Over Subscription) :

வெளியிடப்பட்ட பங்குகளின் எண்ணிக்கையைவிட அதிகமான பங்குகள் கோரி பொதுமக்களிடமிருந்து விண்ணப்பங்கள் பெறப்பட்டிருந்தால் மிகை ஒப்பம் எனப்படும். ஒரு நிறுமம் தகவலறிக்கையில் பொதுமக்களுக்கு வெளியிட்ட பங்குகளுக்கு மேல் ஒதுக்கீடு செய்ய முடியாது. மிகை ஒப்பம் உள்ள நிலையில் இ.ப.மா.வா. (SEBI) வழிகாட்டு நெறிமுறைகளின்படி விகித அளவு அடிப்படை ஒதுக்கீடு (Pro-rata allotment) செய்யப்பட வேண்டும்.

மிகை ஒப்பம் உள்ள நிலையில் இயக்குநர்கள் மூன்று மாற்று முறைகளைக் கையாளுகின்றனர்.

1. சில விண்ணப்பதாரர்களுக்கு பங்குகள் ஒதுக்கீடு செய்யப்படுவதில்லை – பங்குகள் நிராகரிப்பு.
2. சில விண்ணப்பதாரர்களுக்கு அவர்கள் விண்ணப்பித்த பங்குகளுக்கும் குறைவாக ஒதுக்கீடு செய்தல் – விகித அளவு அடிப்படை ஒதுக்கீடு.
3. சில விண்ணப்பதாரர்களுக்கு அவர்கள் விண்ணப்பித்த எண்ணிக்கை அளவிற்கே பங்குகளை ஒதுக்கீடு செய்தல் – முழு ஒதுக்கீடு.

இப்பாடத்தில் முதல் இரு முறைகளை மட்டுமே விவாதிக்கப்படுகிறது.

**பங்குகள் நிராகரிப்பு** (Rejection of Shares)

சில விண்ணப்பங்கள் இயக்குநர்களால் மிகை ஒப்பம் காரணமாகவும் சில பிற காரணங்களுக்காகவும் நிராகரிக்கப் படலாம். நிறுமம் இவ்வாறு நிராகரிக்கப்பட்ட பங்குகள் மீதான விண்ணப்பத்தொகையை விண்ணப்பதாரர்களுக்கு திரும்ப செலுத்தல் வேண்டும். இதைப் பதிவு செய்வதற்கான குறிப்பேட்டுப் பதிவு:

| | | |
|---|---|---|
| பங்கு விண்ணப்பக் க/கு | ப | (நிராகரிக்கப்பட்ட பங்குகளின் எண்ணிக்கை x ஒரு பங்கின் மீதான விண்ணப்ப தொகை) |
| வங்கிக் க/கு | | |
| (___ நிராகரிக்கப்பட்ட பங்குகளுக்கான விண்ணப்பத் தொகை திருப்பிய தற்கான பதிவு) | | |



**எடுத்துக்காட்டு : 4**

பெருமாள் வரையறு நிறுமம் ஒன்று ரூ.10 வீதம் 1,00,000 பங்குகளை வெளியிட்டது. செலுத்த வேண்டிய தொகை:

விண்ணப்பத்தின்போது ரூ.3

ஒதுக்கீட்டின்போது ரூ. 2 மற்றும்

மீதத் தொகை தேவையின்போது.

1,20,000 பங்குகள் வேண்டி விண்ணப்பங்கள் பெறப்பட்டன. இயக்குநர்கள் மிகையான விண்ணப்பங்களை நிராகரிக்கலாம் என முடிவு செய்தனர். அனைத்து தொகையும் பெறப்பட்டது. குறிப்பேட்டு பதிவுகளைத் தருக.

**விடை:**

**பெருமாள் வரையறு நிறுமத்தின் குறிப்பேடு**

| நாள் | விவரம் | பே.ப.எ. | பற்று ரூ. | வரவு ரூ. |
|---|---|---|---|---|
| | வங்கிக் க/கு ப | | 3,60,000 | |
| | பங்கு விண்ணப்பக் க/கு | | | 3,60,000 |
| | (1,20,000 பங்குகள் மீது பங்கு ஒன்று ரூ.3 வீதம் தொகை பெறப்பட்டது) | | | |
| | பங்கு விண்ணப்பக் க/கு ப | | 3,00,000 | |
| | பங்கு முதல் க/கு | | | 3,00,000 |
| | (1,00,000 பங்குகளுக்கான விண்ணப்பத்தொகை பங்கு முதல் கணக்கிற்கு மாற்றல்) | | | |
| | பங்கு விண்ணப்பக் க/கு ப | | 60,000 | |
| | வங்கிக் க/கு | | | 60,000 |
| | (20,000 பங்குகள் மீது மிகை விண்ணப்பத் தொகை பங்கு ஒன்றுக்கு ரூ.3 வீதம் திரும்ப அளிக்கப்பட்டது) | | | |

| | | | | |
|---|---|---|---|---|
| | பங்கு ஒதுக்கீட்டுக் க/கு ப<br>பங்கு முதல் க/கு<br>(1,00,000 பங்குகள் மீது பங்கு ஒன்றுக்கு ரூ.2 வீதம் ஒதுக்கீட்டுத் தொகை பெற வேண்டியது) | | 2,00,000 | 2,00,000 |
| | வங்கிக் க/கு ப<br>பங்கு ஒதுக்கீட்டுக் க/கு<br>(பங்கு ஒதுக்கீட்டுத் தொகை பெற்றது) | | 2,00,000 | 2,00,000 |

**விகித அளவு அடிப்படை ஒதுக்கீடு** (Pro-rata Allotment) :

*சில விண்ணப்பதாரர்களுக்கு விண்ணப்பித்த பங்குகளைவிட சில பங்குகள் குறைவாக ஒதுக்கீடு செய்யப்படும். மிகையான விண்ணப்பத் தொகையை திரும்ப அளித்தலுக்கு பதில் ஒதுக்கீட்டுத் தொகைக்கு சரிக்கட்டிக் கொள்ளப்படும். இதைப் பதிவு செய்வதற்கான குறிப்பேட்டுப் பதிவு:*

| | |
|---|---|
| பங்கு விண்ணப்பக் க/கு ப<br>பங்கு ஒதுக்கீட்டுக் க/கு<br>(___ பங்குகள் மீது பங்கு ஒன்றுக்கு ரூ. ___ வீதம் மிகையாக பெற்ற விண்ணப்பத்தொகை ஒதுக்கீட்டுக்கு மாற்றப்பட்டது) | [விண்ணப்பத் தொகை பெற்றது – (பங்கு முதலுக்கு மாற்றப்பட்ட விண்ணப்பத் தொகை + திரும்ப செலுத்திய தொகை)] |

**எடுத்துக்காட்டு : 5**

*பிரதிக்ஷா வரையறு நிறுமம் ஒன்று ரூ.10 மதிப்புடைய 50,000 பங்குகளை பின்வருமாறு செலுத்தத்தக்க வண்ணம் வெளியிட்டது.*

*விண்ணப்பத்தின்போது ரூ. 3*

*ஒதுக்கீட்டின்போது ரூ.4*

*மீதம் அழைப்பின்போது.*



*பங்குகள் வேண்டி 70,000 விண்ணப்பங்கள் பெறப்பட்டன. 8,000 பங்கு விண்ணப்பங்கள் நிராகரிக்கப்பட்டு மீதமுள்ள விண்ணப்பதாரர்களுக்கு 50,000 பங்குகள் என்ற விகித அளவு அடிப்படையில் ஒதுக்கீடு செய்யப்பட்டது. விண்ணப்பத்தின் மீது மிகையாக பெற்றத் தொகை ஒதுக்கீட்டுத் தொகைக்கு சரி செய்யப்பட்டது. அனைத்து பங்குதாரர்களும் நிலுவைத் தொகையைச் செலுத்தினர். குறிப்பேட்டில் பதிந்து, பெயரேட்டில் எடுத்தெழுதி, இருப்புநிலைக் குறிப்பில் பதிவுகள் தோன்றும் விதத்தினைக் காட்டுக.*

**விடை :**

**I. மிகை ஒப்பம் – விகித அளவு அடிப்படை ஒதுக்கீடு:**

| | விவரம் | பங்குகளின் எண்ணிக்கை x ரூ. | தொகை ரூ. |
|---|---|---|---|
| | பெறப்பட்ட விண்ணப்பங்களின் எண்ணிக்கை | 70,000 x 3 | 2,10,000 |
| கழிக்க: | பங்கு முதல் கணக்குக்கு மாற்றப்பட்டது | 50,000 x 3 | 150,000 |
| | அதிகமாகப் பெற்ற விண்ணப்பத் தொகை | 20,000 x 3 | 60,000 |
| கழிக்க: | திரும்ப அளித்தது | 8,000 x 3 | 24,000 |
| | எஞ்சிய தொகை ஒதுக்கீட்டுக்கு சரிக்கட்டப்பட்டது | 12,000 x 3 | 36,000 |

**II. பெற வேண்டிய ஒதுக்கீட்டுத் தொகை கணக்கீடு:**

| | | தொகை ரூ. |
|---|---|---|
| | ரூ. 4 வீதம் 50,000 பங்குகள் | 2,00,000 |
| கழிக்க: | மிகையான விண்ணப்பத்தொகை ஒதுக்கீட்டிற்கு சரி செய்து கொள்ளப்பட்டது (12,000 x 3) | 36,000 |
| | பெற வேண்டிய தொகை | 1,64,000 |

## பிரதிக்ஷா வரையறு நிறுமத்தின் ஏடுகளில் குறிப்பேட்டுப் பதிவுகள்

| நாள் | விவரம் | பே.ப.எ. | பற்று ரூ. | வரவு ரூ. |
|---|---|---|---|---|
| | வங்கிக் க/கு ப | | 2,10,000 | |
| | பங்கு விண்ணப்பக் க/கு | | | 2,10,000 |
| | (70,000 பங்குகள் வேண்டி பங்கு ஒன்று ரூ.3 வீதம் விண்ணப்பத் தொகை பெறப்பட்டது) | | | |
| | பங்கு விண்ணப்பக் க/கு ப | | 1,50,000 | |
| | பங்கு முதல் க/கு | | | 1,50,000 |
| | (50,000 பங்குகள் மீதான பங்கு ஒன்று ரூ. 3 வீதம் பங்கு முதல் கணக்கிற்கு மாற்றப்பட்டது) | | | |
| | பங்கு விண்ணப்பக் க/கு ப | | 24,000 | |
| | வங்கிக் க/கு | | | 24,000 |
| | (8,000 பங்குகள் மீதான பங்கு ஒன்று ரூ.3 வீதம் விண்ணப்பத் தொகை திருப்பியது) | | | |
| | பங்கு விண்ணப்பக் க/கு ப | | 36,000 | |
| | பங்கு ஒதுக்கீட்டுக் க/கு | | | 36,000 |
| | (எஞ்சிய 12,000 விண்ணப்பங்களுக்கான தொகை ஒதுக்கீட்டு கணக்கு மாற்றப்பட்டது) | | | |
| | பங்கு ஒதுக்கீட்டுக் க/கு ப | | 2,00,000 | |
| | பங்கு முதல் க/கு | | | 2,00,000 |
| | (50,000 பங்குகள் மீது பங்கு ஒன்றுக்கு ரூ.4 வீதம் ஒதுக்கீட்டுத் தொகை பெற வேண்டியது) | | | |
| | வங்கிக் க/கு ப | | 1,64,000 | |
| | பங்கு ஒதுக்கீட்டுக் க/கு | | | 1,64,000 |
| | (ஒதுக்கீட்டு தொகை பெறப்பட்டது) | | | |
| | பங்கு முதல் மற்றும் இறுதி அழைப்புக் க/கு ப | | 1,50,000 | |
| | பங்கு முதல் க/கு | | | 1,50,000 |
| | (50,000 பங்குகள் மீது பங்கு ஒன்றுக்கு ரூ. 3 வீதம் அழைப்பு தொகை பெற வேண்டியது) | | | |
| | வங்கிக் க/கு ப | | 1,50,000 | |
| | பங்கு முதல் மற்றும் இறுதி அழைப்பு க/கு | | | 1,50,000 |
| | (அழைப்புத் தொகை பெற்றது) | | | |



## பிரதிக்ஷா வரையறு நிறுமத்தின் பேரேட்டு கணக்குகள்

ப **வங்கிக் கணக்கு** வ

| விவரம் | தொகை ரூ. | விவரம் | தொகை ரூ. |
|---|---|---|---|
| பங்கு விண்ணப்பக் க/கு | 2,10,000 | பங்கு விண்ணப்பக் க/கு | 24,000 |
| பங்கு ஒதுக்கீட்டுக் க/கு | 1,64,000 | இருப்பு கீ/இ | 5,00,000 |
| பங்கு அழைப்புக் க/கு | 1,50,000 | | |
| | 5,24,000 | | 5,24,000 |
| இருப்பு கீ/கொ | 5,00,000 | | |

ப **பங்கு விண்ணப்பக் கணக்கு** வ

| விவரம் | தொகை ரூ. | விவரம் | தொகை ரூ. |
|---|---|---|---|
| பங்கு முதல் க/கு | 1,50,000 | வங்கிக் க/கு | 2,10,000 |
| வங்கிக் க/கு | 24,000 | | |
| பங்கு ஒதுக்கீட்டுக் க/கு | 36,000 | | |
| | 2,10,000 | | 2,10,000 |

ப **பங்கு ஒதுக்கீட்டுக் கணக்கு** வ

| விவரம் | தொகை ரூ. | விவரம் | தொகை ரூ. |
|---|---|---|---|
| பங்கு முதல் க/கு | 2,00,000 | பங்கு விண்ணப்பக் க/கு | 36,000 |
| | | வங்கிக் க/கு | 1,64,000 |
| | 2,00,000 | | 2,00,000 |

### பங்கு முதல் மற்றும் இறுதி அழைப்புக் கணக்கு

ப வ

| விவரம் | தொகை ரூ. | விவரம் | தொகை ரூ. |
|---|---|---|---|
| பங்கு முதல் க/கு | 1,50,000 | வங்கிக் க/கு | 1,50,000 |
| | 1,50,000 | | 1,50,000 |

### பங்கு முதல் கணக்கு

ப வ

| விவரம் | தொகை ரூ. | விவரம் | தொகை ரூ. |
|---|---|---|---|
| இருப்பு கீ/இ | 5,00,000 | பங்கு விண்ணப்பக் க/கு | 1,50,000 |
| | | பங்கு ஒதுக்கீட்டுக் க/கு | 1,00,000 |
| | | பங்கு முதல் மற்றும் இறுதி அழைப்புக் க/கு | 1,50,000 |
| | 5,00,000 | | 5,00,000 |
| | | இருப்பு கீ/கொ | 5,00,000 |

### பிரதிக்ஷா வரையறு நிறுமத்தின் வருவிய இருப்புநிலைக் குறிப்பு

| பொறுப்புகள் | தொகை ரூ. | சொத்துகள் | தொகை ரூ. |
|---|---|---|---|
| பங்கு முதல்: | | நடப்புச் சொத்துகள்: | |
| அங்கீகரிக்கப்பட்டது: | .... | வங்கியில் ரொக்கம் | 5,00,000 |
| வெளியிட்டது: ஒன்று ரூ.10 வீதம் 5000 பங்குகள் | 5,00,000 | | |
| ஒப்பியது: ஒன்று ரூ.10 வீதம் 50,000 பங்குகள் | 5,00,000 | | |
| அழைத்தது: ஒன்று ரூ.10 வீதம் 50,000 பங்குகள் | 5,00,000 | | |
| செலுத்தியது: ஒன்று ரூ.10 வீதம் 50,000 பங்குகள் | 5,00,000 | | |
| | 5,00,000 | | 5,00,000 |



### அழைப்பு நிலுவை (Calls-in-Arrears)

சில நேரங்களில் பங்குதாரர்கள் அழைப்புத் தொகையை செலுத்த தவறிவிடுவர். நிறுமம் விடுத்த அழைப்புகள் மீது பெறப்படாத தொகையின் மொத்தம் அழைப்பு நிலுவை என்றழைக்கப்படுகிறது. இருப்புநிலைக் குறிப்பில் செலுத்தப்பட்ட முதலைக் கணக்கிடுவதற்கு ஏற்ற வகையில் இத்தொகை அழைக்கப்பட்ட முதலிலிருந்து கழித்துக் காட்டப்படும். இதைப் பதிவு செய்வதற்கான குறிப்பேட்டுப் பதிவு:

| | |
|---|---|
| அழைப்பு நிலுவை க/கு | ப (செலுத்தப்படாத |
| பங்கு அழைப்பு க/கு | அழைப்புத் தொகை) |
| (___ பங்குகள் மீதான பங்கு ஒன்றுக்கு ரூ.___ வீதம் அழைப்பு தொகை பெறப்படவில்லை) | |

அட்டவணை A யின்படி, அழைப்பு நிலுவைத் தொகை செலுத்தப்படும் காலம் வரை 5% வட்டி வசூலிக்கப்படும். எனினும் இயக்குநர்கள் வட்டியைத் தள்ளுபடி செய்வதற்கும், அதிக வட்டி விகிதம் விதிக்கவும் அதிகாரமுண்டு.

### எடுத்துக்காட்டு : 6

ராபர்ட் வரையறு நிறுமம் பங்கு ஒன்று ரூ.10 வீதம் 20,000 பங்குகளை பின்வருமாறு செலுத்தத்தக்க வண்ணம் வெளியிட்டது.

விண்ணப்பத்தின் மீது ரூ. 3

ஒதுக்கீடு மீது ரூ. 2

முதலாவது அழைப்பின்போது ரூ. 2.50

மற்றும் எஞ்சியத் தொகை இறுதி அழைப்பின்போது.

பங்குகள் அனைத்தும் ஒப்பப்பட்டு ஒதுக்கீடு செய்யப்பட்டன. இரண்டு அழைப்புகளும் முறையாக விடுக்கப்பட்டன. 1,000 பங்குகள் மீது முதலாவது அழைப்புத் தொகையும் 1,500 பங்குகள் மீது இறுதி அழைப்புத் தொகையும் பெறப்படவில்லை. குறிப்பேட்டுப் பதிவுகளைத் தருக.

விடை:

ராபர்ட் வரையறு நிறும ஏடுகளில்

குறிப்பேட்டுப் பதிவுகள்

| நாள் | விவரம் | பே.ப.எ. | பற்று ரூ. | வரவு ரூ. |
|---|---|---|---|---|
| | வங்கிக் க/கு ப | | 60,000 | |
| | பங்கு விண்ணப்பக் க/கு | | | 60,000 |
| | (ரூ.3 வீதம் 20,000 பங்குகளுக்கு விண்ணப்பத் தொகை பெறப்பட்டது) | | | |
| | பங்கு விண்ணப்பக் க/கு ப | | 60,000 | |
| | பங்கு முதல் க/கு | | | 60,000 |
| | (பங்கு விண்ணப்பத் தொகை பங்கு முதல் கணக்கிற்கு மாற்றல்) | | | |
| | பங்கு ஒதுக்கீட்டுக் க/கு ப | | 40,000 | |
| | பங்கு முதல் க/கு | | | 40,000 |
| | (ரூ.3 வீதம் 20,000 பங்குகளுக்கு ஒதுக்கீட்டு பணம் பெற வேண்டியது) | | | |
| | வங்கிக் க/கு ப | | 40,000 | |
| | பங்கு ஒதுக்கீட்டுக் க/கு | | | 40,000 |
| | (20,000 பங்குகளுக்கு ஒதுக்கீட்டு பணம் பெறப்பட்டது) | | | |
| | பங்கு முதலாவது அழைப்புக் க/கு ப | | 50,000 | |
| | பங்கு முதல் க/கு | | | 50,000 |
| | (ரூ.2.50 வீதம் 20,000 பங்குகளுக்கு முதலாவது அழைப்புத் தொகை பெற வேண்டியது) | | | |
| | வங்கிக் க/கு ப | | 47,500 | |
| | அழைப்பு நிலுவைக் க/கு ப | | 2,500 | |
| | பங்கு முதலாவது அழைப்புக் க/கு | | | 50,000 |
| | (19,000 பங்குகள் மீது முதலாவது அழைப்புத் தொகை பெறப்பட்டது) | | | |
| | பங்கு இரண்டாவது அழைப்புக் க/கு ப | | 50,000 | |
| | பங்கு முதல் க/கு | | | 50,000 |
| | (ரூ.2.50 வீதம் 20,000 பங்குகளுக்கு இறுதி அழைப்புத் தொகை பெற வேண்டியது) | | | |
| | வங்கிக் க/கு ப | | 46,250 | |
| | அழைப்பு நிலுவைக் க/கு ப | | 3,750 | |
| | பங்கு இரண்டாவது அழைப்புக் க/கு | | | 50,000 |
| | (18,500 பங்குகளுக்கு இறுதி அழைப்புத் தொகை பெறப்பட்டது) | | | |



**அழைப்பு முன் பணம்** (Call-in-Advance) :

ஒரு விண்ணப்பதாரர் நிறுமம் அழைத்த தொகையை விட அதிகமாக செலுத்தினால் மிகையாக செலுத்தப்பட்ட தொகை அழைப்பு முன்பணம் எனப்படும். இதைப் பதிவு செய்வதற்கான குறிப்பேட்டுப் பதிவு:

வங்கி க/கு ப

அழைப்பு முன் பணக் க/கு

(___ பங்குகள் மீது பங்கு ஒன்றுக்கு ரூ.___ வீதம் அழைப்புத் தொகை முன்பணமாக பெற்றதற்கான பதிவு)

பிரிவு எண் 92ன் படி அழைப்பு முன் பணத்தை பெற நிறுமத்தின் சங்க நடைமுறை விதிகள் அனுமதித்தால் மட்டுமே பெறமுடியும். நிறுமம், அட்டவணை Aயை பின்பற்றுமே யானால் இத்தகைய அழைப்பு முன்பணம் பெற்ற நாளிலிருந்து தவணை நாள் வரும் வரை 6% வட்டி செலுத்தப்பட வேண்டும். அழைப்புத் தொகை பெற வேண்டிய நிலை ஏற்படும்போது அழைப்பு முன்பணத்தை அழைப்புடன் சரி செய்ய வேண்டும். இதைப் பதிவு செய்வதற்கான குறிப்பேட்டுப் பதிவு:

**அழைப்பு முன் பணம் குறிப்பிட்ட அழைப்பிற்கு மாற்றப்படுதல்:**

*அழைப்பு முன் பணக் க/கு ப*
*குறிப்பிட்ட அழைப்புக் க/கு*
*(அழைப்பு முன்பணத்தை குறிப்பிட்ட அழைப்பு கணக்கிற்கு மாற்றப்படல்)*

**எடுத்துக்காட்டு : 7**

சோமு வரையறு நிறுமம் பொதுமக்களுக்கு ஒன்று ரூ.10 வீதம் 8000 நேர்மை பங்குகளை பின்வருமாறு செலுத்தத்தக்க வண்ணம் வெளியிட்டது:

| | |
|---|---|
| விண்ணப்பத்தின் மீது | ரூ. 2.50 |
| ஒதுக்கீட்டின் மீது | ரூ. 4.00 |
| முதலாவது மற்றும் இறுதி அழைப்பின் மீது | ரூ. 3.50 |

அனைத்து பங்குகளும் ஒப்பப்பட்டு முழுத் தொகையும் பெறப்பட்டது. 500 பங்குகளுக்கு ஒப்பிய அக்பர் என்ற பங்குதாரர் ஒதுக்கீட்டுத் தொகையுடன் அழைப்புத் தொகையையும் சேர்த்து செலுத்தினார். இதைப் பதிவு செய்வதற்கான குறிப்பேட்டுப் பதிவுகள் தருக.

**விடை :**

**சோமு வரையறு நிறுமத்தின்**
**குறிப்பேட்டுப் பதிவுகள்**

| நாள் | விவரம் | பே.ப.எ. | பற்று ரூ. | வரவு ரூ. |
|---|---|---|---|---|
| | வங்கிக் க/கு ப | | 20,000 | |
| | பங்கு விண்ணப்பக் க/கு | | | 20,000 |
| | (20,000 பங்குகள் மீது விண்ணப்பத் தொகை பெறப்பட்டது) | | | |
| | பங்கு விண்ணப்பக் க/கு ப | | 20,000 | |
| | பங்கு முதல் க/கு | | | 20,000 |
| | (பங்கு விண்ணப்பத் தொகை பங்கு முதல் கணக்கிற்கு மாற்றப்பட்டது) | | | |



| நாள் | விவரம் | பே.ப.எ. | பற்று ரூ. | வரவு ரூ. |
|---|---|---|---|---|
| | பங்கு ஒதுக்கீட்டுக் க/கு ப | | 32,000 | |
| | பங்கு முதல் க/கு | | | 32,000 |
| | (ஒன்றுக்கு ரூ.4 வீதம் 20,000 பங்குகளுக்கு ஒதுக்கீட்டு பணம் பெற வேண்டியது) | | | |
| | வங்கிக் க/கு ப | | 33,750 | |
| | பங்கு ஒதுக்கீட்டுக் க/கு | | | 32,000 |
| | அழைப்பு முன்பணக் க/கு | | | 1,750 |
| | (அழைப்பு முன்பணம் பங்கு ஒதுக்கீட்டு தொகையோடு பெறப்பட்டது) | | | |
| | பங்கு முதல் மற்றும் இறுதி அழைப்புக் க/கு ப | | 28,000 | |
| | பங்கு முதல் க/கு | | | 28,000 |
| | (ரூ.3.50 விதம் 8,000 பங்குகளுக்கு அழைப்புத்தொகை பெற வேண்டியது) | | | |
| | வங்கிக் க/கு ப | | 26,250 | |
| | அழைப்பு முன்பணக் க/கு ப | | 1,750 | |
| | பங்கு முதல் மற்றும் இறுதி அழைப்புக் க/கு | | | 28,000 |
| | (அழைப்பு பணம் பெறப்பட்டது மற்றும் அழைப்பு முன்பணக் க/கு அழைப்பு கணக்கிற்கு மாற்றப்பட்டது) | | | |

**முனைமத்தில் பங்கு வெளியீடு** (Issue of Shares at Premium) :

ஒரு நிறுமம் தனது பங்குகளை முக மதிப்பைவிட அதிகமான விலையில் வெளியிட்டால் அது முனைமத்தில் வெளியீடு எனப்படும். முனைமம் என்பது பங்கின் முகமதிப்பைவிட அதிகமாக வசூலிக்கப்படும் தொகையாகும். ரூ.10 முகமதிப்புடைய பங்கு ரூ.12ற்கு வெளியிடப்பட்டால் ரூ.2 முனைமத்தில் வெளியீடு அல்லது 20% முனைமத்தில் வெளியீடு எனக் கூறலாம்.

பங்குகளை முனைமத்தில் வெளியிடும்போது முனைமத் தொகை பத்திர முனைமக் கணக்கு[1] (Securities Premium Account) என்ற ஒரு தனிக் கணக்கில் வரவு செய்யப்பட வேண்டும். இது பங்கு முதலில் ஒரு பகுதியாக கருதப்படமாட்டாது. இது இருப்புநிலைக் குறிப்பில் தனியே 'காப்பும் மிகுதியும்' என்ற தலைப்பின்கீழ் காண்பிக்கப்படும். பிரிவு எண் 78ன் கீழ் பத்திர முனைமக் கணக்கில் உள்ள தொகை பின்வரும் நோக்கங்களுக்கு பயன்படுத்தப்படலாம்.

1. வெளியிடாத பங்குகளை முற்றும் செலுத்தப்பட்ட மேல் ஊதியப் பங்குகளாக வழங்க.
2. தொடக்க செலவினை நீக்குவதற்கு.
3. பங்குகள் மற்றும் கடனீட்டுப் பத்திரங்கள் மீதான அளித்த கழிவு அல்லது அனுமதித்த தள்ளுபடி போன்ற செலவுகளை நீக்குவதற்கு
4. முன்னுரிமை பங்குகள் அல்லது கடனீட்டுப் பத்திரங்களை மீட்கும்பொழுது முனைமம் கொடுப்பதற்கு.

இம்முனைமத் தொகை விண்ணப்பத் தொகையுடன் அல்லது ஒதுக்கீட்டு தொகையுடன் பெறப்படலாம். ஆனால் பொதுவாக இது ஒதுக்கீட்டு தொகையில் மட்டுமே பெறப்படுகிறது. இதைப் பதிவு செய்வதற்கான குறிப்பேட்டுப் பதிவு:

**கணக்குப் பதிவுகள்:**

அ) பங்கு ஒதுக்கீட்டுக் க/கு ப (ஒதுக்கப்பட்ட பங்குகளின் எண்ணிக்கை x ஒரு பங்கிற்கான ஒதுக்கீட்டு தொகை மற்றும்முனைமத் தொகை)

பங்கு முதல் க/கு (ஒதுக்கப்பட்ட பங்குகள் x ஒரு பங்கிற்கான ஒதுக்கீட்டுத் தொகை)

1. பத்திர முனைமக் கணக்கு (Securities Premium Account) எனும் சொல் பங்கு முனைமக் கணக்கிற்கு (Share Premium Account) பதிலாக பயன்படுத்தப்படும் என இந்திய நிறுமங்கள் (திருத்தப்பட்ட) சட்டம், 1999 குறிப்பிடுகிறது.



பத்திர முனைமக் க/கு ப (ஒதுக்கப்பட்ட பங்குகள் x ஒரு பங்கிற்கான முனைமத் தொகை)

(ஒதுக்கீடு செய்யப்பட்ட பங்குகள் மீது பங்கு ஒன்றுக்கு ரூ.____ வீதம் முனைமம் உட்பட பெற வேண்டியதற்கான பதிவு)

ஆ) வங்கிக் க/கு ப
பங்கு ஒதுக்கீட்டுக் க/கு

(ஒதுக்கீட்டுத் தொகை முனைமத்துடன் பெறப்பட்டது)

**எடுத்துக்காட்டு : 8**

ராஜா, ராணி வரையறு நிறுமம் ரூ.10 வீதம் 10,000 பங்குகளை பங்கு ஒன்றிற்கு ரூ.2 முனைமத்தோடு பின்வருமாறு செலுத்தத்தக்க வண்ணம் வெளியிட்டது.

| | |
|---|---|
| விண்ணப்பத்தின்போது | ரூ. 3 |
| ஒதுக்கீட்டின்போது | ரூ. 5 (முனைமம் உட்பட) |
| முதல் அழைப்பின்போது | ரூ. 2 |
| இறுதி அழைப்பின்போது | ரூ. 2 |

அனைத்து பங்குகளும் முழுமையாக ஒப்பப்பட்டு பெறவேண்டிய தொகைகள் அனைத்தும் முழுமையாக பெறப்பட்டன.

குறிப்பேட்டு பதிவுகளை தந்து, பேரேட்டு கணக்குகள் தயாரிப்பதோடு இருப்புநிலைக் குறிப்பில் பதிவுகளைக் காண்பிக்க.

விடை:

### ராஜா, ராணி வரையறு நிறுமத்தின் ஏடுகளில் குறிப்பேட்டு பதிவுகள்

| நாள் | விவரம் | பே.ப.எ. | பற்று ரூ. | வரவு ரூ. |
|---|---|---|---|---|
| | வங்கிக் க/கு ப | | 30,000 | |
| | பங்கு விண்ணப்பக் க/கு | | | 30,000 |
| | (ரூ. 2 வீதம் 20,000 பங்குகளுக்கு விண்ணப்பத் தொகை பெறப்பட்டது) | | | |
| | பங்கு விண்ணப்பக் க/கு ப | | 30,000 | |
| | பங்கு முதல் க/கு | | | 30,000 |
| | (பங்கு விண்ணப்பத் தொகை பங்கு முதல் கணக்கிற்கு மாற்றப்பட்டது) | | | |
| | பங்கு ஒதுக்கீட்டுக் க/கு ப | | 50,000 | |
| | பங்கு முதல் க/கு | | | 30,000 |
| | பத்திர முனைமக் க/கு | | | 20,000 |
| | (10,000 பங்குகளுக்கு ஒதுக்கீட்டுப் பணம் மற்றும் பங்கு முனைமம் பெற வேண்டியது) | | | |
| | வங்கிக் க/கு ப | | 50,000 | |
| | பங்கு ஒதுக்கீட்டுக் க/கு | | | 50,000 |
| | (பங்கு ஒதுக்கீட்டு பணம் மற்றும் முனைமத் தொகை பெறப்பட்டது) | | | |
| | பங்கு முதல் அழைப்பு க/கு ப | | 20,000 | |
| | பங்கு முதல் க/கு | | | 20,000 |
| | (ரூ.3 வீதம் 10,000 பங்குகளுக்கு முதல் அழைப்புத் தொகை பெற வேண்டியது) | | | |
| | வங்கிக் க/கு ப | | 20,000 | |
| | பங்கு முதல் அழைப்புக் க/கு | | | 20,000 |
| | (முதல் அழைப்பு தொகை பெறப்பட்டது) | | | |
| | பங்கு இரண்டாவது மற்றும் இறுதி அழைப்புக் க/கு ப | | 20,000 | |
| | பங்கு முதல் க/கு | | | 20,000 |
| | (ரூ.2 வீதம் 10,000 பங்குகளுக்கு இறுதி அழைப்புத் தொகை பெற வேண்டியது) | | | |
| | வங்கிக் க/கு ப | | 20,000 | |
| | பங்கு இரண்டாவது மற்றும் இறுதி அழைப்புக் க/கு | | 20,000 | |
| | (இறுதி அழைப்புத் தொகை பெறப்பட்டது) | | | |



### ராஜா, ராணி வரையறு நிறுமத்தின் பேரேட்டு கணக்குகள்

ப **வங்கிக் கணக்கு** வ

| விவரம் | தொகை ரூ. | விவரம் | தொகை ரூ. |
|---|---|---|---|
| பங்கு விண்ணப்பக் க/கு | 30,000 | இருப்பு கீ/இ | 1,20,000 |
| பங்கு ஒதுக்கீட்டுக் க/கு | 50,000 | | |
| பங்கு முதல் அழைப்புக் க/கு | 20,000 | | |
| பங்கு இறுதி அழைப்புக் க/கு | 20,000 | | |
| | 1,20,000 | | 1,20,000 |
| இருப்பு கீ/கொ | 1,20,000 | | |

ப **பங்கு விண்ணப்பக் கணக்கு** வ

| விவரம் | தொகை ரூ. | விவரம் | தொகை ரூ. |
|---|---|---|---|
| பங்கு முதல் க/கு | 30,000 | வங்கிக் க/கு | 30,000 |
| | 30,000 | | 30,000 |

ப பங்கு ஒதுக்கீட்டுக் கணக்கு வ

| விவரம் | தொகை ரூ. | விவரம் | தொகை ரூ. |
|---|---|---|---|
| பங்கு முதல் க/கு | 30,000 | வங்கிக் க/கு | 50,000 |
| பத்திர முனைமக் க/கு | 20,000 | | |
| | 50,000 | | 50,000 |

ப பத்திர முனைமக் கணக்கு வ

| விவரம் | தொகை ரூ. | விவரம் | தொகை ரூ. |
|---|---|---|---|
| இருப்பு கீ/இ | 20,000 | பங்கு ஒதுக்கீட்டுக் க/கு | 20,000 |
| | 20,000 | | 20,000 |
| | | இருப்பு கீ/கொ | 20,000 |

ப பங்கு முதலாவது அழைப்புக் கணக்கு வ

| விவரம் | தொகை ரூ. | விவரம் | தொகை ரூ. |
|---|---|---|---|
| பங்கு முதல் க/கு | 20,000 | வங்கிக் க/கு | 20,000 |
| | 20,000 | | 20,000 |

ப பங்கு இரண்டாவது மற்றும் இறுதி அழைப்புக் கணக்கு வ

| விவரம் | தொகை ரூ. | விவரம் | தொகை ரூ. |
|---|---|---|---|
| பங்கு முதல் க/கு | 20,000 | வங்கிக் க/கு | 20,000 |
| | 20,000 | | 20,000 |



ப பங்கு முதல் கணக்கு வ

| விவரம் | தொகை ரூ. | விவரம் | தொகை ரூ. |
|---|---|---|---|
| இருப்பு கீ/இ | 1,00,000 | பங்கு விண்ணப்பக் க/கு | 30,000 |
| | | பங்கு ஒதுக்கீட்டுக் க/கு | 30,000 |
| | | பங்கு முதல் அழைப்புக் க/கு | 20,000 |
| | | பங்கு இரண்டாவது மற்றும் இறுதி அழைப்புக் க/கு | 20,000 |
| | 1,00,000 | | 1,00,000 |
| | | இருப்பு கீ/கொ | 1,00,000 |

**ராஜா, ராணி நிறுமத்தின் வருவிய இருப்புநிலைக் குறிப்பு**

| பொறுப்புகள் | தொகை ரூ. | சொத்துகள் | தொகை ரூ. |
|---|---|---|---|
| பங்கு முதல் | | நடப்புச் சொத்துகள்: | |
| அங்கீகரிக்கப்பட்ட முதல் | ------ | வங்கி | 1,20,000 |
| வெளியிடப்பட்ட முதல் ரூ.10 வீதம் 10,000 பங்குகள் | 1,00,000 | | |
| ஒப்பிய முதல் ரூ.10 வீதம் 10,000 பங்குகள் | 1,00,000 | | |
| அழைக்கப்பட்ட முதல் ரூ.10 வீதம் 10,000 பங்குகள் | 1,00,000 | | |
| செலுத்தப்பட்ட முதல் ரூ.10 வீதம் 10,000 பங்குகள் | 1,00,000 | | |
| காப்பும் மிகுதியும்: பத்திர முனைமம் | 20,000 | | |
| | 1,20,000 | | 1,20,000 |

**தள்ளுபடியில் பங்கு வெளியீடு** (Issue of Shares at Discount) :

ஒரு நிறுமம் தனது பங்குகளை முகமதிப்பைவிட குறைவான விலையில் வெளியிட்டால் அது தள்ளுபடியில் பங்கு வெளியீடு எனப்படும். முகமதிப்பிற்கும் வெளியீட்டு விலைக்கும் இடையேயுள்ள வேறுபாடு தள்ளுபடி ஆகும். உதாரணமாக, ரூ.10 முகமதிப்புடைய பங்குகள் ரூ 9க்கு வெளியிடப்படும் பொழுது அதனை ஒரு ரூபாய் தள்ளுபடியில் பங்கு வெளியீடு அல்லது 10% தள்ளுபடியில் வெளியீடு எனக் கூறலாம்.

பிரிவு எண் 79ன்படி ஒரு நிறுமம் பின்வரும் நிபந்தனைகளைப் பூர்த்தி செய்வதன் வாயிலாக பங்குகளை தள்ளுபடியில் வெளியிடலாம்.

அ) பங்குகளை தள்ளுபடியில் வெளியிட ஆண்டுப் பொதுக் கூட்டத்தில் சாதாரண தீர்மானம் நிறைவேற்றிய பின்னர் நிறுமச்சட்ட வாரியத்தின் ஒப்புதல் பெறவேண்டும்.

ஆ) பங்குகள் முன்னரே வெளியிடப்பட்ட வகையினைச் சார்ந்ததாக இருக்க வேண்டும்.

இ) அதிகபட்ச தள்ளுபடி 10%க்கு அதிகரிக்க கூடாது. ஆனால் நிறுமச் சட்ட வாரியம் ஒப்புமேயானால் பங்குகளை அதிக தள்ளுபடி விகிதத்தில் வெளியிடலாம்.

ஈ) அந்த நிறுமம் தொடங்கி ஒரு ஆண்டாவது கடந்திருக்க வேண்டும்.

பங்குகளைத் தள்ளுபடியில் வெளியீடு செய்யும் போது, ஒதுக்கீட்டிற்காக பெற வேண்டிய தொகையைப் பதிவு செய்யும் போதே தள்ளுபடி தொகையையும் கணக்கிற்கு கொண்டுவர வேண்டும். இதைப் பதிவு செய்வதற்கான குறிப்பேட்டுப் பதிவு:



| | |
|---|---|
| பங்கு ஒதுக்கீட்டுக் க/கு | ப |
| பங்கு வெளியீட்டுத் தள்ளுபடி க/கு | ப |
| பங்கு முதல் க/கு | |
| (பங்குகள் மீது பங்கொன்றுக்கு ரூ.______ வீதம் தள்ளுபடி கழித்து ஒதுக்கீட்டு தொகை பெற வேண்டியது) | |

பங்குகளின் முகமதிப்பு இருப்பு நிலைக் குறிப்பில் பொறுப்பு பக்கத்தில் பதியப்படும். பங்கு வெளியீட்டுத் தள்ளுபடி முதலின நட்டம் என்பதால் இருப்புநிலைக் குறிப்பின் சொத்துகள் பகுதியில் தோன்றும். பின்னர் ஒரு குறிப்பிட்ட காலத்திற்குள் இலாப நட்டக் கணக்கிற்கு மாற்றப்பட்டு நீக்கப்படும். இன்னும் நீக்கப்படாமல் உள்ள தொகை இருப்புநிலைக் குறிப்பில் சொத்துகள் பக்கத்தில் பல்வகைச் செலவுகள் என்ற தலைப்பின் கீழ் தோன்றும்.

**எடுத்துக்காட்டு : 9**

செந்தில் வரையறு நிறுமம் ரூ 10வீதம் 1,70,000 பங்குகளை 10% தள்ளுபடியில் வெளியிட்டது. அப்பங்குகள் பின்வருமாறு செலுத்தப்பட வேண்டும்.

| | | |
|---|---|---|
| விண்ணப்பத்தின் போது | ரூ. 3 | |
| ஒதுக்கீட்டின் போது | ரூ. 4 | (தள்ளுபடியைச் சரி செய்த பிறகு) |
| முதல் மற்றும் இறுதி அழைப்பின் போது | ரூ. 2 | |

பொதுமக்கள் 1,60,000 பங்குகளுக்கு விண்ணப்பித்தனர். பங்குகள் அனைத்தும் ஒதுக்கீடு செய்யப்பட்டன. பெறவேண்டிய தொகைகள் அனைத்தும் முழுமையாக பெறப்பட்டன. குறிப்பேட்டுப் பதிவுகள் தருக. மேலும் பேரேட்டுக் கணக்குகள் மற்றும் இருப்புநிலைக் குறிப்பு தயாரிக்க.

விடை :

## செந்தில் வரையறு நிறுமம்
## குறிப்பேட்டுப் பதிவுகள்

| நாள் | விவரம் | பே.ப.எ | பற்று ரூ. | வரவு ரூ. |
|---|---|---|---|---|
| | வங்கிக் க/கு ப | | 4,80,000 | |
| | பங்கு விண்ணப்பம் க/கு | | | 4,80,000 |
| | (ரூ.3 வீதம் 1,60,000 பங்குகளுக்கு விண்ணப்பத் தொகை பெறப்பட்டது) | | | |
| | பங்கு விண்ணப்பக் க/கு ப | | 4,80,000 | |
| | பங்கு முதல் க/கு | | | 4,80,000 |
| | (விண்ணப்பத் தொகை பங்கு முதல் கணக்கிற்கு மாற்றப்பட்டது) | | | |
| | பங்கு ஒதுக்கீட்டுக் க/கு ப | | 6,40,000 | |
| | பங்கு வெளியீட்டுத் தள்ளுபடிக் க/கு ப | | 1,60,000 | |
| | பங்கு முதல் க/கு | | | 8,00,000 |
| | (1,60,000 பங்குகளுக்கு தள்ளுபடிச் சரிக்கட்டுதலுடன் ஒதுக்கீட்டு பணம் பெற வேண்டியது) | | | |
| | வங்கிக் க/கு ப | | 6,40,000 | |
| | பங்கு ஒதுக்கீட்டுக் க/கு | | | 6,40,000 |
| | (ஒதுக்கீட்டுப் பணம் பெறப்பட்டது) | | | |
| | பங்கு முதல் மற்றும் இறுதி அழைப்புக் க/கு ப | | 3,20,000 | |
| | பங்கு முதல் க/கு | | | 3,20,000 |
| | (ரூ.2 வீதம் 1,60,000 பங்குகளின் அழைப்புத் தொகை பெற வேண்டியது) | | | |
| | வங்கிக் க/கு ப | | 3,20,000 | |
| | பங்கு முதல் மற்றும் இறுதி அழைப்புக் க/கு | | | 3,20,000 |
| | (அழைப்புத் தொகை பெற்றது) | | | |



## செந்தில் வரையறு நிறுமம்
## பேரேட்டுக் கணக்குகள்

ப **வங்கிக் கணக்கு** வ

| விவரம் | தொகை ரூ. | விவரம் | தொகை ரூ. |
|---|---|---|---|
| பங்கு விண்ணப்பக் க/கு | 4,800,000 | இருப்பு கீ/இ | 14,40,000 |
| பங்கு ஒதுக்கீட்டுக் க/கு | 6,40,000 | | |
| பங்கு முதல் மற்றும் இறுதி அழைப்புக் க/கு | 3,20,000 | | |
| | 14,40,000 | | 14,40,000 |
| இருப்பு கீ/கொ | 14,40,000 | | |

ப **பங்கு விண்ணப்பக் கணக்கு** வ

| விவரம் | தொகை ரூ. | விவரம் | தொகை ரூ. |
|---|---|---|---|
| பங்கு முதல் க/கு | 4,80,000 | வங்கிக் க/கு | 4,80,000 |
| | 4,80,000 | | 4,80,000 |

ப **பங்கு ஒதுக்கீட்டுக் கணக்கு** வ

| விவரம் | தொகை ரூ. | விவரம் | தொகை ரூ. |
|---|---|---|---|
| பங்கு முதல் க/கு | 6,40,000 | வங்கிக் க/கு | 6,40,000 |
| | 6,40,000 | | 6,40,000 |

ப பங்கு வெளியீட்டுத் தள்ளுபடிக் கணக்கு வ

| விவரம் | தொகை ரூ. | விவரம் | தொகை ரூ. |
|---|---|---|---|
| பங்கு முதல் க/கு | 1,60,000 | இருப்பு கீ/இ | 1,60,000 |
| | 1,60,000 | | 1,60,000 |
| இருப்பு கீ/கொ | 1,60,000 | | |

ப பங்கு முதல் மற்றும் இறுதி அழைப்புக் கணக்கு வ

| விவரம் | தொகை ரூ. | விவரம் | தொகை ரூ. |
|---|---|---|---|
| பங்கு முதல் க/கு | 3,20,000 | வங்கிக் க/கு | 3,20,000 |
| | 3,20,000 | | 3,20,000 |

ப பங்கு முதல் கணக்கு வ

| விவரம் | தொகை ரூ. | விவரம் | தொகை ரூ. |
|---|---|---|---|
| இருப்பு கீ/இ | 16,00,000 | பங்கு விண்ணப்பக் க/கு | 4,80,000 |
| | | பங்கு ஒதுக்கீட்டுக் க/கு | 6,40,000 |
| | | பங்கில் வெளியிட்டுத் தள்ளுபடி க/கு | 1,60,000 |
| | | பங்கு முதல் மற்றும் இறுதி அழைப்புக் க/கு | 3,20,000 |
| | 16,00,000 | | 16,00,000 |
| | | இருப்பு கீ/கொ | 16,00,000 |

**செந்தில் வரையறு நிறுமத்தின் வருவிய இருப்புநிலைக் குறிப்பு**

| பொறுப்புகள் | தொகை ரூ. | சொத்துகள் | தொகை ரூ. |
|---|---|---|---|
| பங்கு முதல் | | நடப்புச் சொத்துக்கள்: | |
| அங்கீகரிக்கப்பட்ட முதல் | - - - | வங்கியில் ரொக்கம் | 14,40,000 |
| வெளியிட்ட பங்கு முதல் | | பல்வகை செலவினங்கள் | |
| ரூ.10 வீதம் 1,70,000 பங்குகள் | 17,00,000 | பங்கு வெளியீட்டு தள்ளுபடி | 1,60,000 |
| ஒப்பிய பங்கு முதல் ரூ.10 வீதம் 1,60,000 பங்குகள் | 16,00,000 | | |
| அழைத்த பங்கு முதல் ரூ.10 வீதம் 1,60,000 பங்குகள் | 16,00,000 | | |
| செலுத்தப்பட்ட பங்கு முதல் ரூ.10 வீதம் 1,60,000 பங்குகள் | 16,00,000 | | |
| | 16,00,000 | | 16,00,000 |



## எடுத்துக்காட்டு : 10

சோழன் வரையறு நிறுமம் ஒன்று ரூ 100 வீதம் 1000 பங்குகளை வெளியிட்டது. பின்வரும் நிலையில் குறிப்பேட்டு பதிவுகள் தருக.

(அ) பங்குகளை முகமதிப்பில் வெளியிடுதல்

(ஆ) பங்குகளை ரூ.20 முனைமத்தில் வெளியிடுதல்

(இ) பங்குகளை ரூ.10 தள்ளுபடியில் வெளியிடுதல்

**விடை:**

**குறிப்பேட்டுப் பதிவுகள்**

| நாள் | விவரம் | | பே.ப.எ. | பற்று ரூ. | வரவு ரூ. |
|---|---|---|---|---|---|
| | **நிலை அ :** | | | | |
| | வங்கிக் க/கு | ப | | 1,00,000 | |
| | பங்கு முதல் க/கு | | | | 1,00,000 |
| | (1000 பங்குகள் ஒன்று ரூ.100 வீதம் வெளியிடப்பட்டது) | | | | |
| | **நிலை ஆ :** | | | | |
| | வங்கிக் க/கு | ப | | 1,20,000 | |
| | பங்கு முதல் க/கு | | | | 1,00,000 |
| | பத்திர முனைமக் க/கு | | | | 20,000 |
| | (1000 பங்குகளை ஒன்று ரூ.100 வீதம் ரூ.20 முனைமத்துடன் வெளியிடப்பட்டது) | | | | |

| நிலை இ : | | | | |
|---|---|---|---|---|
| வங்கிக் க/கு | ப | | 90,000 | |
| பங்கு வெளியீட்டு | | | | |
| தள்ளுபடிக் க/கு | ப | | 10,000 | |
| பங்கு முதல் க/கு | | | | 1,00,000 |
| (1000 பங்குகளை ஒன்று ரூ.100 வீதம் ரூ.10 தள்ளுபடியில் வெளியிடப்பட்டது) | | | | |

## பங்கு ஒறுப்பிழப்பு

சில நேரங்களில் பங்குதாரர்கள் தவணைத் தொகையை (ஒதுக்கீடு அல்லது அழைப்புத் தொகை) செலுத்தத் தவறி விடுவது உண்டு. இவ்வாறான சூழ்நிலைகளில் தகுந்த அறிவிப்பு கொடுத்து சங்க நடைமுறை விதியில் கொடுக்கப்பட்டுள்ள விதிகளின் அடிப்படையில் நிறுவனத்தின் இயக்குநர்கள் முன்னர் வெளியிட்ட பங்குகளை ஒறுப்பிழப்பு செய்கின்றனர். பங்குகள் ஒறுப்பிழப்பு என்பது பங்குதாரர்கள் தவணைத் தொகை செலுத்தத் தவறிடும்போது அவர்களின் பங்கு ஒதுக்கீட்டினை இரத்து செய்வதாகும். பங்குகள் ஒறுப்பிழப்பு செய்யப்பட்டால், பங்கு முதலில் இருந்து ஒறுப்பிழப்பு செய்யப்பட்ட பங்குத் தொகை நீக்கப்படும். மேலும் பங்குதாரர்கள் நிறுவனத்தின் அங்கத்தினராக இருக்க முடியாது.

### முகமதிப்பில் வெளியிட்ட பங்குகளை ஒறுபிழப்பு செய்தல்:

ஒறுப்பிழப்பின் விளைவு பங்குநருக்கு ஒதுக்கீடு செய்த பங்குகளை இரத்து செய்வதாகும். எனவே முன்னர் செய்யப்பட்ட அனைத்து பதிவுகளும் மாற்றப்பட வேண்டும். இதற்கான குறிப்பேட்டுப் பதிவு:

| | | |
|---|---|---|
| பங்கு முதல் க/கு | ப | (ஒறுப்பிழப்பு செய்யப்பட்ட பங்குகளின் எண்ணிக்கை x ஒரு பங்கு மீது அழைக்கப் பட்ட தொகை) |
| பங்கு ஒறுப்பிழப்புக் க/கு | | (ஏற்கனவே பெறப்பட்ட தொகை) |



| | |
|---|---|
| பங்கு ஒதுக்கீட்டுக் க/கு | (நிலுவை ஏற்பட்டும் பெறப்படாத தொகை) |
| (அல்லது / மற்றும்) | |
| பங்கு (முதல்/இரண்டாவது/இறுதி) அழைப்புக் க/கு | |

பங்கு ஒறுப்பிழப்பு வரையில் அழைப்பு விடுத்த தொகையினை பங்கு முதல் கணக்கில் பற்று செய்ய வேண்டுமே தவிர பங்குகளின் பெயரளவு மதிப்பை பற்று செய்யக் கூடாது. ஒறுப்பிழப்பு கணக்கில் மீதமுள்ள தொகையை மொத்த செலுத்தப்பட்ட முதலோடு கூட்டி நிறுமத்தின் இருப்புநிலைக் குறிப்பில் பொறுப்புகள் பக்கத்தில் பங்கு முதல் தலைப்பின் கீழ் காண்பிக்க வேண்டும்.

### எடுத்துக்காட்டு : 11

பானு வரையறு நிறுமம் ஒன்று ரூ 10 வீதம் 5000 பங்குகளை கீழ்காணும் முறையில் செலுத்தும் வகையில் வெளியிட்டது.

விண்ணப்பத்தின் போது பங்கொன்றுக்கு ரூ 3, ஒதுக்கீட்டின் போது பங்கொன்றுக்கு ரூ.3, முதல் அழைப்பின் போது பங்கொன்றுக்கு ரூ.2 மற்றும் இறுதி அழைப்பின் போது ரூ.2.

திரு.ராஜு அவர்களுக்கு 50 பங்குகள் ஒதுக்கீடு செய்யப்பட்டன.

**நிலை அ:** திரு.ராஜு முதல் அழைப்பு தொகை செலுத்த தவறியதால் அவரது பங்குகள் ஒறுப்பிழப்பு செய்யப்படுகின்றன,

**நிலை ஆ:** திரு.ராஜு இரு அழைப்புகளையும் செலுத்தத் தவறியதால் அவரது பங்குகள் ஒறுப்பிழைப்பு செய்யப்படுகின்றன.

விடை:

பானு வரையரை நிறுமத்தின் குறிப்பேட்டுப் பதிவுகள்

| நாள் | விவரம் | பே.ப.எ | பற்று ரூ. | வரவு ரூ. |
|---|---|---|---|---|
| | **நிலை அ:** | | | |
| | பங்கு முதல் க/கு (50x8) ப | | 400 | |
| | பங்கு ஒறுப்பிழப்பு க/கு (50x6) | | | 300 |
| | பங்கு முதலாவது அழைப்பு க/கு (50x2) | | | 100 |
| | (முதல் அழைப்பு பணம் பெறப்படாததால் 50 பங்குகள் ஒறுப்பிழப்பு செய்யப்பட்டது) | | | |
| | **நிலை ஆ:** | | | |
| | பங்கு முதல் க/கு (50x10) ப | | 500 | |
| | பங்கு ஒறுப்பிழப்புக் க/கு (50x6) | | | 300 |
| | பங்கு முதல் அழைப்பு க/கு (50x2) | | | 100 |
| | பங்கு இறுதி அழைப்புக் க/கு (50x2) | | | 100 |
| | ( முதல் அழைப்பு மற்றும் இறுதி அழைப்பு பணம் பெறப்படாததால் 50 பங்குகள் ஒறுப்பிழப்பு செய்யப்பட்டது) | | | |

## முனைமத்தில் வெளியிட்ட பங்குகளை ஒறுப்பிழப்பு செய்தல்

### 1. முனைமத் தொகை பெற்ற நிலையில்

*முனைமத்தில் வெளியிட்ட பங்குகள் மீதான முனைமம் பெறப்பட்டிருந்து அவைகள் ஒறுப்பிழப்பு செய்யப்பட்டால்*



*ஏற்கனவே பெறப்பட்ட முனைமத்தை இரத்து செய்தல் கூடாது (பிரிவு 78). இதற்கான குறிப்பேட்டுப் பதிவு:*

| | | |
|---|---|---|
| *பங்கு முதல் க/கு* | *ப* | *(ஒறுப்பிழப்பு செய்யப்பட்ட பங்குகளின் எண்ணிக்கை x ஒரு பங்கு மீது அழைக்கப் பட்ட தொகை)* |
| *பங்கு ஒறுப்பிழப்புக் க/கு* | | *(ஒறுப்பிழப்பு செய்யப்பட்ட பங்குகளின் எண்ணிக்கை x முனைமம் தவிர ஏற்கனவே பெற்ற தொகை)* |
| *பங்கு அழைப்புக் க/கு* | | *(ஒறுப்பிழப்பு செய்யப்பட்ட பங்குகளின் எண்ணிக்கை x பெறப்படாத தொகை)* |

### 2. முனைமத் தொகை பெறாத நிலையில்

*முனைமத்தில் வெளியிட்ட பங்குகள் மீது முனைமத் தொகை பெறாத நிலையில் ஒறுப்பிழப்பு செய்யும்போது, பத்திர முனைமக் கணக்கு பற்று செய்யப்பட வேண்டும். இதற்கான குறிப்பேட்டுப் பதிவு:*

| | | |
|---|---|---|
| *பங்கு முதல் க/கு* | *ப* | *(ஒறுப்பிழப்பு செய்யப்பட்ட பங்குகளின் எண்ணிக்கை x ஒரு பங்கு மீது அழைக்கப் பட்ட தொகை)* |
| *பங்கு ஒறுப்பிழப்புக் க/கு* | | *(ஒறுப்பிழப்பு செய்யப்பட்ட பங்குகளின் எண்ணிக்கை x ஏற்கனவே பெறப்பட்ட தொகை)* |

| | |
|---|---|
| பங்கு அழைப்புக் க/கு | (ஒறுப்பிழப்பு செய்யப்பட்ட பங்குகளின் எண்ணிக்கை x பெறப்படாத தொகை) |

**எடுத்துக்காட்டு : 12**

*குமார் வரையறு நிறுமம் பங்கொன்று ரூ.10 வீதம் 1000 பங்குகளை ரூ.12க்கு வெளியிட்டது. தொகை பின்வருமாறு செலுத்தப்படவேண்டும்.*

*விண்ணப்பத்தின் போது ரூ.3;*

*ஒதுக்கீட்டின் போது ரூ.5 (முனைமம் சேர்த்து)*

*முதல் அழைப்பின் போது ரூ.2*

*இறுதி அழைப்பின் போது ரூ.2*

*நிறுமம் இறுதி அழைப்பை விடுக்கவில்லை. மணி அவர்களுக்கு 25 பங்குகள் ஒதுக்கீடு செய்யப்பட்டன. பின்வரும் நிலைகளில் ஒறுப்பிழப்பு தொடர்பான குறிப்பேட்டு பதிவுகளைத் தருக.*

*(அ) மணி, முதல் அழைப்பு தொகை செலுத்தத் தவறி, அவரது பங்குகள் ஒறுப்பிழப்பு செய்யப்பட்டால்*

*(ஆ) மணி, முதல் அழைப்பு மற்றும் இறுதி அழைப்புத் தொகை செலுத்தத் தவறியதால், அவரது பங்குகள் ஒறுப்பிழப்பு செய்யப்பட்டால்*



**விடை:**

**குறிப்பேட்டுப் பதிவுகள்**

| நாள் | விவரம் | பே.ப.எ. | பற்று ரூ. | வரவு ரூ. |
|---|---|---|---|---|
| | **நிலை அ:** | | | |
| | பங்குமுதல் க/கு (25x8) ப | | 200 | |
| | பத்திர முனைமக் க/கு (25x2) ப | | 50 | |
| | பங்கு ஒறுப்பிழப்புக் க/கு (25x8) | | | 200 |
| | பங்கு முதலாவது அழைப்புக் க/கு (25x2) | | | 50 |
| | (முதல் அழைப்பு பணம் பெறப்படாததால் 25 பங்குகள் ஒறுப்பிழப்பு செய்யப்பட்டது) | | | |
| | **நிலை ஆ:** | | | |
| | பங்கு முதல் க/கு (25x10) ப | | 250 | |
| | பங்கு ஒறுப்பிழப்புக் க/கு (25x6) | | | 150 |
| | பங்கு முதல் அழைப்புக் க/கு (25x2) | | | 50 |
| | பங்கு இறுதி அழைப்பு க/கு (25x2) | | | 50 |
| | (முதல் மற்றும் இறுதி அழைப்பு பணம் செலுத்தப்படாததால் 25 பங்குகள் ஒறுப்பிழப்பு செய்யப்பட்டது) | | | |

**தள்ளுபடியில் வெளியிடப்பட்ட பங்குகள் ஒறுப்பிழப்பு:**

தள்ளுபடியில் வெளியீடு செய்யப்பட்ட பங்குகள் ஒறுப்பிழப்பு செய்யப்படும் பொழுது பங்கு வெளியீட்டுத் தள்ளுபடி ரத்து செய்யப்பட வேண்டும். இதற்கு பங்கு வெளியீட்டுத் தள்ளுபடி கணக்கில் வரவு வைக்க வேண்டும். இதற்கான குறிப்பேட்டுப் பதிவு:

| | | |
|---|---|---|
| பங்கு முதல் க/கு | ப | (ஒறுப்பிழப்பு செய்யப்பட்ட பங்குகளின் எண்ணிக்கை x அழைக்கப்பட்ட தொகை) |
| பங்கு ஒறுப்பிழப்புக் க/கு | | (ஒறுப்பிழப்பு செய்யப்பட்ட பங்குகளின் எண்ணிக்கை x முன்பே பெறப்பட்ட தொகை) |
| பங்கு வெளியீட்டுத் தள்ளுபடிக் க/கு | | (ஒறுப்பிழப்பு செய்யப்பட்ட பங்குகளின் எண்ணிக்கை x ஒரு பங்கின் மீதான தள்ளுபடி) |
| பங்கு அழைப்புக் க/கு | | (ஒறுப்பிழப்பு செய்யப்பட்ட பங்குகளின் எண்ணிக்கை x பெறப்படாத தொகை) |

**எடுத்துக்காட்டு : 13**

நந்தா வரையறு நிறுமம் பங்கொன்று ரூ.10 வீதம் 10000 பங்குகளை 10% தள்ளுபடியில் பொதுமக்களுக்கு வெளியிட்டது.

| | |
|---|---|
| விண்ணப்பத்தின் போது | ரூ. 2.50 |
| ஒதுக்கீட்டின் போது | ரூ. 3.00 |
| முதல் மற்றும் இறுதி அழைப்பின் போது | ரூ. 3.50 |

100 பங்குகள் ஒதுக்கீடு செய்யப்பட்ட திரு.உதயா அவர்கள் இறுதி அழைப்புத் தொகையைச் செலுத்தவில்லை. மற்ற அனைத்துத் தொகைகளும் பெறப்பட்டன. உரிய அறிவிப்பு கொடுத்து அப்பங்குகளை இயக்குநர்கள் ஒறுப்பிழப்புச் செய்தனர். ஒறுப்பிழப்பிற்கு உரிய குறிப்பேட்டுப் பதிவினைத் தருக.



**விடை :**

**குறிப்பேட்டுப் பதிவுகள்**

| நாள் | விவரம் | பேப எண் | பற்று ரூ. | வரவு ரூ. |
|---|---|---|---|---|
| | பங்கு முதல் க/கு (100 x 10) ப | | 1000 | |
| | பங்கு ஒறுப்பிழப்புக் க/கு (100 x 5.50) | | | 550 |
| | பங்கு வெளியீட்டுத் தள்ளுபடிக் க/கு (100 x 1) | | | 100 |
| | பங்கு இறுதி அழைப்புக் க/கு (100 x 3.50) | | | 350 |
| | (இறுதி அழைப்பு தொகை பெறப்படாததால் 100 பங்குகள் ஒறுப்பிழப்புச் செய்யப்பட்டது) | | | |

**ஒறுப்பிழப்பு செய்த பங்குகளை மறுவெளியீடு செய்தல்**

நிறுமத்தின் இயக்குநர்கள் ஏற்கனவே ஒறுப்பிழப்பு செய்த பங்குகளை அவர்களின் வசதிக்கு ஏற்ப சரியான நேரத்தில் மறுவெளியீடு செய்வதற்கான உரிமையைப் பெற்றுள்ளனர். இதைப் பற்றிய சில கருத்துக்களை காண்போமாக.

**மறு வெளியீட்டு விலை :**

நிறுமம் விரும்பும் விலையில் ஒறுப்பிழப்பு செய்யப்பட்ட பங்குகளை மறு வெளியீடு செய்யலாம். ஆனால் மறுவெளியீட்டு விலை மற்றும் முன்னரே வசூலித்த தொகை ஆகியவற்றின் மொத்தத் தொகை மறு வெளியீட்டின் பொழுது செலுத்தப்பட்ட தொகையாக வரவு வைக்கப்படும் தொகையை விடக் குறைவாக இருக்கக் கூடாது.

**பங்குகள் முழுவதும் செலுத்தப்பட்ட நிலையில்:** ஒரு பங்கின் முகமதிப்பு ரூ.10 இதில் ரூ.3 வசூல் செய்யப்பட்டு இருந்தது. அப்பங்குகளை ஒறுப்பிழப்பு செய்யும் பொழுது குறைந்தபட்ச மறு வெளியீட்டு விலை ரூ.7 ஆக இருக்க வேண்டும் (ரூ.10 – ரூ.3).

**பங்குகள் முழுவதும் செலுத்தப்படாத நிலையில்:** மேற்சொன்ன உதாரணத்தில் நிறுமம் ரூ.8 மட்டும் அழைப்பு விடுத்திருந்தால் குறைந்தபட்ச மறு வெளியீட்டு விலை ரூ.5 ஆக (ரூ.8 – ரூ3) இருக்க வேண்டும்.

**பங்கு ஒறுப்பிழப்பு கணக்கு:**

தள்ளுபடியின் மீது மறுவெளியீடு (செலுத்தப்பட்ட மதிப்பு – மறுவெளியீட்டு விலை), பங்கு ஒறுப்பிழப்பு கணக்கில் பற்று வைக்க வேண்டும். இதற்கான குறிப்பேட்டுப் பதிவு:

| | | |
|---|---|---|
| வங்கிக் க/கு | ப | (பங்குகளின் எண்ணிக்கை x மறுவெளியீட்டு விலை) |
| பங்கு ஒறுப்பிழப்புக் க/கு | ப | (பங்குகளின் எண்ணிக்கை x (செலுத்தப்பட்ட மதிப்பு– மறுவெளியீட்டு விலை) |
| பங்கு முதல் க/கு | | (பங்குகளின் எண்ணிக்கை x செலுத்தப்பட்ட மதிப்பு) |
| (ரூ.____ க்கு____பங்குகள் மறுவெளியீடு) | | |

**முதலினக் காப்பு:**

பங்கு ஒறுப்பிழப்புக் கணக்கில் உள்ள இருப்பு முதலின இலாபம் ஆகும். இது 'முதலினக் காப்பு கணக்கிற்கு' மாற்றப்பட வேண்டும். பங்கு ஒறுப்பிழப்பு கணக்கில் உள்ள இருப்பை மாற்றுவதற்கான பதிவு:

பங்கு ஒறுப்பிழப்பு க/கு ப

முதலினக் காப்பு க/கு

(ஒறுப்பிழப்பு பங்குகளின் மறு வெளியீட்டில் ஏற்பட்ட இலாபம் முதலின காப்பிற்கு மாற்றப்பட்டது)



**எடுத்துக்காட்டு : 14**

ஒரு நிறுமத்தின் இயக்குநர்கள் உரிய அறிவிக்கைக்குப் பிறகு ரூ3 இறுதி அழைப்பு தொகை செலுத்த தவறிய ரூ.10 மதிப்புடைய 100 பங்குகளை ஒறுப்பிழப்பு செய்தனர். பின்னர் அப்பங்குகளை பங்கொன்று ரூ.8க்கு மறுவெளியீடு செய்தனர். பதிவுகள் தருக.

**விடை:**

**குறிப்பேட்டுப் பதிவுகள்**

| நாள் | விவரம் | | பேப எண் | பற்று ரூ. | வரவு ரூ. |
|---|---|---|---|---|---|
| | பங்கு முதல் க/கு (100x10) | ப | | 1000 | |
| | பங்கு ஒறுப்பிழப்புக் க/கு (100x7) | | | | 700 |
| | பங்கு இறுதி அழைப்புக் க/கு (100x3) | | | | 300 |
| | (இறுதி அழைப்பு செலுத்தத் தவறிய 100 பங்குகள் ஒறுப்பிழப்பு செய்யப்பட்டது) | | | | |
| | வங்கிக் க/கு (100 x 8) | ப | | 800 | |
| | பங்கு ஒறுப்பிழப்புக் க/கு (100x2) | ப | | 200 | |
| | பங்கு முதல் க/கு (100x10) | | | | 1000 |
| | (100 பங்குகளை பங்கொன்று ரூ.8க்கு மறுவெளியீடு செய்தது குறித்து) | | | | |
| | பங்கு ஒறுப்பிழப்புக் க/கு | ப | | 500 | |
| | முதலினக் காப்புக் க/கு | | | | 500 |
| | (ஒறுப்பிழப்பு செய்த பங்குகளை மறுவெளியீடு செய்ததால் கிடைத்த இலாபத்தை முதலினக் காப்பிற்கு மாற்றியது) | | | | |

குறிப்பு: மறுவெளியீட்டு இலாபத்தைக் கணக்கிடுதல்.

| | | | |
|---|---|---|---|
| | ஒறுப்பிழப்புச் செய்ததில் பெற்றத் தொகை (100 பங்குகள் x ரூ.7) | ரூ. | 700 |
| கழிக்க: | மறுவெளியீட்டில் ஏற்பட்ட நட்டம் (100 பங்குகள் x ரூ.2) | ரூ. | 200 |
| | மறுவெளியீட்டில் கிடைத்த இலாபம் (முதலின காப்பு) (100 பங்குகள் x ரூ.5) | ரூ. | 500 |

**எடுத்துக்காட்டு : 15**

*ஒரு நிறுமம் முதல் அழைப்புப் பணம் பங்கொன்றுக்கு ரூ.3 மற்றும் ரூ.10 மதிப்புள்ள 200 பங்குகளை ஒறுப்பிழப்பு செய்தது. இறுதி அழைப்பு ரூ.2 இன்னமும் செலுத்தப்படவில்லை. இப்பங்குகள் பின்னர் பங்கொன்றுக்கு ரூ.7 வீதம் முழுவதும் செலுத்தப்பட்ட பங்குகளாக மறு வெளியிடு செய்யப்பட்டது. ஒறுப்பிழப்பு மற்றும் மறு வெளியீட்டுக்கான குறிப்பேட்டுப் பதிவுகளைத் தருக.*

**விடை:**

**குறிப்பேட்டுப் பதிவுகள்**

| நாள் | விவரம் | பே.ப எண் | பற்று ரூ. | வரவு ரூ. |
|---|---|---|---|---|
| | பங்கு முதல் க/கு (200x10) ப | | 2,000 | |
| | பங்கு ஒறுப்பிழப்புக் க/கு (200x5) | | | 1,000 |
| | பங்கு முதல் அழைப்புக் க/கு (200x3) | | | 600 |
| | பங்கு இறுதி அழைப்பு க/கு (200x2) | | | 400 |
| | (பங்கு முதல் மற்றும் இறுதி அழைப்புப் பணம் செலுத்தப் படாததால் 200 பங்குகளை ஒறுப்பிழப்பு செய்தது) | | | |
| | வங்கிக் க/கு (200x7) ப | | 1,400 | |
| | பங்கு ஒறுப்பிழப்புக் க/கு (200x3) ப | | 600 | |
| | பங்கு முதல் க/கு (200x10) | | | 2,000 |
| | (ரூ 7வீதம் 200 பங்குகள் மறு வெளியீடு செய்தது) | | | |
| | பங்கு ஒறுப்பிழப்புக் க/கு ப | | 400 | |
| | முதலின காப்புக் க/கு | | | 400 |
| | (ஒறுபிழப்பு செய்த பங்குகளை மறு வெளியீடு செய்ததில் கிடைத்த இலாபத்தை முதலினக் காப்பிற்கு மாற்றப்பட்டது) | | | |



**முனைமத்தில் வெளியிட்ட பங்குகளை மறுவெளியீடு செய்தல்:**

*பங்குககள் முதலில் வெளியிடப்பட்ட பொழுது முனைமத்தில் வெளியிடப்பட்டிருந்து அம்முனைமத்தொகை முழுவதும் பெறப்பட்டு இருப்பின், பங்கு முனைமத் தொகையை பங்குகளின் மறு வெளியீட்டின் பொழுது மறுபடியும் பதியத் தேவையில்லை.*

**எடுத்துக்காட்டு : 16**

*ஒரு நிறுமம் பங்கொன்று ரூ.10 வீதம் 10,000 சாதாரண பங்குகளை ரூ.3 முனைமத்தில் வெளியிட்டது. தொகை கீழ்க்கண்டவாறு செலுத்தப்பட வேண்டும்.*

| | |
|---|---|
| *விண்ணப்பத்தின் போது பங்கொன்றுக்கு* | *ரூ.4* |
| *ஒதுக்கீட்டின் போது பங்கொன்றுக்கு (முனைமம் சேர்த்து)* | *ரூ.5* |
| *முதல் மற்றும் இறுதி அழைப்பின் போது பங்கொன்றுக்கு* | *ரூ.4.* |

*13,000 பங்குகளுக்கு விண்ணப்பங்கள் பெறப்பட்டன. அதிகமாக பெற்ற தொகை திருப்பி அளிக்கப்பட்டு ஒதுக்கீட்டு தொகை முழுவதும் பெறப்பட்டது. முதல் மற்றும் இறுதி அழைப்பு முறையாக விடுக்கப்பட்டது. 100 பங்குகள் தவிர ஏனைய பங்குகள் மீதான நிலுவை பெறப்பட்டது. இப்பங்குகள் ஒறுப்பிழப்பு செய்யப்பட்டு பின்னர் பங்கொன்று ரூ.8 வீதம் முழுவதும் செலுத்திய பங்குகளாக மறு வெளியீடு செய்யப்பட்டது. மேற்கண்ட நடவடிக்கைகளுக்கு குறிப்பேட்டுப் பதிவுகளை தருக.*

## விடை:

### குறிப்பேட்டுப் பதிவுகள்

| நாள் | விவரம் | | பேப எண் | பற்று ரூ. | வரவு ரூ. |
|---|---|---|---|---|---|
| | வங்கிக் க/கு | ப | | 52,000 | |
| | பங்கு விண்ணப்பக் க/கு | | | | 52,000 |
| | (பங்கொன்றுக்கு ரூ.4 வீதம் 13,000 பங்குகளுக்கு விண்ணப்பத் தொகை பெறப்பட்டது) | | | | |
| | பங்கு விண்ணப்பக் க/கு | ப | | 52,000 | |
| | பங்கு முதல் க/கு | | | | 40,000 |
| | வங்கிக் க/கு | | | | 12,000 |
| | (10000 பங்குகளுக்கு பெறப்பட்ட விண்ணப்ப தொகை பங்கு முதல் கணக்கு மாற்றப்பட்டது. 3000 பங்கு விண்ணப்பத் தொகை திருப்பி அனுப்பப்பட்டது) | | | | |
| | பங்கு ஒதுக்கீட்டுக் க/கு | ப | | 50,000 | |
| | பங்கு முதல் க/கு | | | | 20,000 |
| | பத்திர முனைமம் க/கு | | | | 30,000 |
| | (10,000 பங்குகள் மீது பெற வேண்டிய ஒதுக்கீட்டுப் பணம் முனைமத்துடன் பெற வேண்டியது) | | | | |
| | வங்கிக் க/கு | ப | | 50,000 | |
| | பங்கு ஒதுக்கீட்டுக் க/கு | | | | 50,000 |
| | (ஒதுக்கீட்டுத் தொகை பெற்றது) | | | | |
| | பங்கு முதல் மற்றும் இறுதி அழைப்புக் க/கு | ப | | 40,000 | |
| | பங்கு முதல் க/கு | | | | 40,000 |
| | (10,000 பங்குகளுக்கான முதல் மற்றும் இறுதி அழைப்புத் தொகை பெற வேண்டியது) | | | | |



| | | | | | |
|---|---|---|---|---|---|
| | வங்கிக் க/கு (40000—100 x 4) | ப | | 39,600 | |
| | பங்கு முதல் மற்றும் இறுதி அழைப்புக் க/கு | | | | 39,600 |
| | (முதல் மற்றும் இறுதி அழைப்புத் தொகை பெற்றது) | | | | |
| | பங்கு முதல் க/கு (100 x ரூ.10) | ப | | 1000 | |
| | பங்கு முதல் மற்றும் இறுதி அழைப்புக் க/கு (100 x ரூ.4) | | | | 400 |
| | பங்கு ஒறுப்பிழப்புக் க/கு (100 x ரூ.6) | | | | 600 |
| | (முதல் மற்றும் இறுதி அழைப்புச் செலுத்த வேண்டிய 100 பங்குகள் ஒறுப்பிழப்புச் செய்யப்பட்டது) | | | | |
| | வங்கிக் க/கு (100 x ரூ8) | ப | | 800 | |
| | பங்கு ஒறுப்பிழப்புக் க/கு (100x ரூ2) | ப | | 200 | |
| | பங்கு முதல் க/கு | | | | 1,000 |
| | (100 ஒறுப்பிழப்புச் செய்யப்பட்ட பங்குகளை ரூ.8 வீதம் முழுவதும் செலுத்தப்பெற்ற பங்குகளாக மறு வெளியீடு செய்யப்பட்டது) | | | | |
| | பங்கு ஒறுப்பிழப்புக் க/கு | ப | | 400 | |
| | முதல் காப்புக் க/கு | | | | 400 |
| | (ஒறுப்பிழப்புச் செய்த பங்குகளை மறுவெளியீடு செய்ததில் கிட்டிய லாபத்தை முதலின காப்பிற்கு மாற்றியது) | | | | |

### எடுத்துக்காட்டு : 17

சூர்யா வரையறு நிறுமம் பங்கு ஒன்றுக்கு ரூ.10 வீதம் 50,000 நேர்மை பங்குகளை 10% முனைமத்தில் கீழ்க்காணும் வகையில் செலுத்தும் வண்ணம் வெளியிட்டது.

| | |
|---|---|
| விண்ணப்பத்தின் போது | ரூ.3 |
| ஒதுக்கீட்டின் போது (முனைமம் உட்பட) | ரூ.5 |
| முதல் மற்றும் இறுதி அழைப்பின் போது | ரூ.3 |

அனைத்து தொகைக்களையும் கோரி நிறுமம் அழைப்பு விடுத்தது. 500 பங்குகளுக்கான அழைப்புத்தொகை அனைத்தும் பெறப்பட்டது. இந்த பங்குகள் ஒறுப்பிழப்பு செய்யப்பட்டு பின்னர் ரூ.9 வீதம் முழுவதும் செலுத்தப்பட்ட பங்குகளாக மறு வெளியீடு செய்யப்பட்டன. மேற்கண்ட நடவடிக்கைகளை பதிவு செய்க.

**விடை :**

**சூர்யா வரையறு நிறுமத்தின் குறிப்பேட்டுப் பதிவுகள்**

| நாள் | விவரம் | பேப எண் | பற்று ரூ. | வரவு ரூ. |
|---|---|---|---|---|
| | வங்கிக் க/கு ப<br>பங்கு விண்ணப்பக் க/கு<br>*(பங்கொன்றுக்கு ரூ.3 வீதம் 50,000 பங்குகளுக்கு விண்ணப்பத் தொகை பெற்றது)* | | *1,50,000* | *1,50,000* |
| | பங்கு விண்ணப்பக் க/கு ப<br>பங்கு முதல் க/கு<br>*(பங்கு விண்ணப்பத் தொகை பங்கு முதல் கணக்கிற்கு மாற்றப்பட்டது)* | | *1,50,000* | *1,50,000* |
| | பங்கு ஒதுக்கீட்டு க/கு ப<br>பங்கு முதல் க/கு<br>பத்திர முனைமக் க/கு<br>*(50000 பங்குகளுக்கான முனைமம் சேர்ந்து பெற வேண்டி ஒதுக்கீட்டுத் தொகை)* | | *2,50,000* | *2,00,000*<br>*50,000* |
| | வங்கிக் க/கு ப<br>பங்கு ஒதுக்கீட்டுக் க/கு<br>*(49,500 பங்குகளுக்கு ஒதுக்கீட்டு பணம் பெறப்பட்டது)* | | *2,47,500* | *2,47,500* |



| | | | | |
|---|---|---|---|---|
| | பங்கு முதல் மற்றும் இறுதி அழைப்புக் க/கு ப<br>பங்கு முதல் க/கு<br>*(பங்கொன்றுக்கு ரூ3 வீதம் 50000 பங்குகளுக்கு இறுதி அழைப்புத் தொகை பெறவேண்டியது)* | | *1,50,000* | *1,50,000* |
| | வங்கிக் க/கு 49500 x 3 ரூ ப<br>பங்கு முதல் மற்றும் இறுதி அழைப்புக் க/கு<br>*(49500 பங்குகளுக்கு முதல் மற்றும் இறுதி அழைப்புத் தொகை பெறப்பட்டது)* | | *1,48,500* | *1,48,500* |
| | பங்கு முதல் க/கு ப<br>பத்திர முனைமக் க/கு ப<br>பங்கு ஒதுக்கீட்டுக் க/கு<br>பங்கு முதல் மற்றும் இறுதி அழைப்புக் க/கு<br>பங்கு ஒறுப்பிழப்புக் க/கு<br>*(ஒதுக்கீடு மற்றும் அழைப்புத் தொகை செலுத்தாத 500 பங்குகள் ஒறுப்பிழப்பு செய்யப்பட்டது)* | | *5,000*<br>*500* | *2,500*<br>*1,500*<br>*1,500* |
| | வங்கிக் க/கு ப<br>பங்கு ஒறுப்பிழப்புக் க/கு ப<br>பங்கு முதல் க/கு<br>*(ஒறுப்பிழப்பு செய்யப்பட்ட பங்குகள் ரூ9 வீதம் மறுவெளியீடு செய்யப்பட்டது)* | | *4,500*<br>*500* | *5,000* |
| | பங்கு ஒறுப்பிழப்புக் க/கு ப<br>முதலினக் காப்புக் க/கு<br>*(மறுவெளியீட்டின் மூலம் பெற்ற இலாபம் முதலின காப்பிற்கு மாற்றப்பட்டது)* | | *1,000* | *1,000* |

குறிப்பு : முனைமத் தொகை பெறப்படாததால் ஒறுப்பிழப்பின் பொழுது பத்திர முனைமக் கணக்கு பற்று செய்யப் பட்டுள்ளது.

**தள்ளுபடியில் வெளியிட்ட பங்குகளின் மறுவெளியீடு :**

தள்ளுபடியில் வெளியிடப்பட்ட பங்குகள் ஒறுப்பிழப்பு செய்யப்பட்டு மறுவெளியீடு செய்யப்படும் போது தள்ளுபடி கணக்கிற்குக் கொண்டு வரப்பட வேண்டும்.

**எடுத்துக்காட்டு : 18**

மதினா வரையறு நிறுமம் ஒன்று ரூ.10 வீதம் 1000 பங்குகளை ரூ.1 தள்ளுபடியில் வெளியிட்டது. தொகை கீழ்க்கண்டவாறு செலுத்தப்பட வேண்டும்.

| | |
|---|---|
| விண்ணப்பத்தின் போது | ரூ.3 |
| ஒதுக்கீட்டின் போது (தள்ளுபடி சரிக்கட்டப்பட்டு) | ரூ.3 |
| முதல் மற்றும் இறுதி அழைப்பு | ரூ3. |

100 பங்குகளுக்கு இறுதி அழைப்புத் தொகை செலுத்தத் தவறிய ஒரு பங்குநரைத் தவிர அனைத்து தொகையும் பெறப்பட்டது. உரிய அறிவிக்கைக்குப் பிறகு இயக்குநர்கள் இப்பங்குகளை ஒறுப்பிழப்புச் செய்தனர். பின்னர் இப்பங்குகள் ரூ.8 வீதம் முழுவதும் செலுத்தியவைகளாக மறுவெளியீடு செய்யப்பட்டன. ஒறுப்பிழப்பு மற்றும் மறுவெளியீட்டிற்கான பதிவுகளைத் தருக.

**விடை:**

**மதினா வரையறு நிறுமத்தின் ஏடுகளில் குறிப்பேட்டுப் பதிவுகள்**

| நாள் | விவரம் | பேரேட்டு எண் | பற்று ரூ. | வரவு ரூ. |
|---|---|---|---|---|
| | பங்கு முதல் க/கு ப | | 1,000 | |
| | பங்கு ஒறுப்பிழப்புக் க/கு | | | 600 |
| | பங்கு வெளியீட்டுத் தள்ளுபடிக் க/கு | | | 100 |
| | இறுதி அழைப்புக் க/கு | | | 300 |
| | (அழைப்புப் பணம் செலுத்தப் படாததால் 100 பங்குகள் ஒறுப்பிழப்பு செய்யப்பட்டது) | | | |



| நாள் | விவரம் | பேரேட்டு எண் | பற்று ரூ. | வரவு ரூ. |
|---|---|---|---|---|
| | வங்கிக் க/கு ப | | 800 | |
| | பங்கு வெளியீட்டுத் தள்ளுபடிக் க/கு ப | | 100 | |
| | பங்கு ஒறுப்பிழப்புக் க/கு ப | | 100 | |
| | பங்கு முதல் க/கு | | | 1000 |
| | (பங்கொன்றுக்கு ரூ.8 வீதம் 100 பங்குகள் மறுவெளியீடு செய்யப்பட்டது) | | | |
| | பங்கு ஒறுப்பிழப்புக் க/கு ப | | 500 | |
| | முதலினக் காப்புக் க/கு | | | 500 |
| | (மறுவெளியீட்டின் இலாபம் முதலின காப்பிற்கு மாற்றப்பட்டது) | | | |

**எடுத்துக்காட்டு : 19**

காஞ்சனா வரையறு நிறுமம் 10% தள்ளுபடியில் வெளியிட்ட ரூ.10 மதிப்புள்ள 1,000 பங்குகளை முதல் அழைப்பு ரூ. 2 மற்றும் இரண்டாவது அழைப்பு ரூ.3 செலுத்தப்படாததால் ஒறுபிழப்புச் செய்தது.

இப்பங்குகள் திரு.அருணிடம் ரூ7000 பெற்றுக்கொண்டு முற்றும் செலுத்தப்பட்டவையாக மறு வெளியீடு செய்யப்பட்டன.

**விடை :**

**காஞ்சனா வரையறு நிறுமத்தின் ஏடுகளில் குறிப்பேட்டுப் பதிவுகள்**

| நாள் | விவரம் | பேரேட்டு எண் | பற்று ரூ. | வரவு ரூ. |
|---|---|---|---|---|
| | பங்கு முதல் க/கு ப | | 10,000 | |
| | பங்கு ஒறுப்பிழப்புக் க/கு | | | 4,000 |
| | பங்கு வெளியீட்டு தள்ளுபடிக் க/கு | | | 1,000 |
| | பங்கு முதல் அழைப்பு க/கு | | | 2,000 |
| | பங்கு இரண்டாவது அழைப்புக் க/கு | | | 3,000 |
| | (அழைப்பு பணம் பெறப்படாததால் 1000 பங்குகள் ஒறுப்பிழப்பு செய்யப்பட்டது) | | | |

| | | | |
|---|---|---|---|
| வங்கிக் க/கு ப | | 7,000 | |
| பங்கு வெளியீட்டுத்தள்ளுபடிக் க/கு ப | | 1,000 | |
| பங்கு ஒறுப்பிழப்புக் க/கு ப | | 2,000 | |
| பங்கு முதல் க/கு | | | 10,000 |
| (முழுவதும் செலுத்தப்பெற்ற பங்குகளாக ரூ.7 வீதம் மறுவெளியீடு செய்யப்பட்டது) | | | |
| பங்கு ஒறுப்பிழப்புக் க/கு ப | | 2,000 | |
| முதலின காப்புக் க/கு | | | 2,000 |
| (பங்கு வெளியீட்டு இலாபம் முதலின காப்புக் கணக்கிற்கு மாற்றப்பட்டது) | | | |

**பகுதி மறுவெளியீடு** (Partial Reissue) :

ஒறுப்பிழப்பு செய்த அனைத்துப் பங்குகளையும் மறு வெளியீடு செய்யவில்லை எனில், ஒறுப்பிழப்பு செய்த பங்குகள் மீதான இலாபத்தை மட்டும் முதலினக் காப்பிற்கிற்கு மாற்ற வேண்டும். மறு வெளியீடு செய்யப்படாத பங்குகள் மீதான ஒறுபிழப்புக் கணக்கில் உள்ள தொகை இருப்புநிலைக் குறிப்பின் பொறுப்புகள் பக்கத்திற்கு மாற்றப்படும்.

**எடுத்துக்காட்டு : 20**

ஒரு நிறுமத்தின் இயக்குநர்கள் முதலாவது அழைப்பு தொகை ரூ.3 மற்றும் இறுதி அழைப்பு தொகை ரூ.3 செலுத்தப்படாத ரூ.10 மதிப்புள்ள 100 சாதாரண பங்குகளை ஒறுப்பிழப்பு செய்தனர். இதில் 40 பங்குகள் ரூ.300க்கு மறுவெளியீடு செய்யப்பட்டன.

ஒறுப்பிழப்பு மற்றும் மறு வெளியீட்டிற்கான பதிவுகளைத் தருக.



**விடை:**

**குறிப்பேட்டுப் பதிவுகள்**

| நாள் | விவரம் | பேய எண் | பற்று ரூ. | வரவு ரூ. |
|---|---|---|---|---|
| | பங்கு முதல் க/கு (100 x 10) ப | | 1000 | |
| | பங்கு ஒறுப்பிழப்புக் க/கு (100 x 4) | | | 400 |
| | பங்கு முதலாவது அழைப்புக் க/கு (100 x 3) | | | 300 |
| | பங்கு இறுதி அழைப்புக் க/கு (100 x 3) | | | 300 |
| | (பங்கு ஒன்று ரூ.10 வீதம் 100 பங்குகளை அழைப்புத் தொகை செலுத்தாததால் ஒறுப்பிழப்பு செய்யப்பட்டது) | | | |
| | வங்கிக் க/கு 40 x 7.50) ப | | 300 | |
| | பங்கு ஒறுப்பிழப்புக் க/கு (40 x 2.50) ப | | 100 | |
| | பங்கு முதல் க/கு | | | 400 |
| | (ஒறுப்பிழப்பு செய்யப்பட்ட பங்குகளில் 40 பங்குகள் மட்டும் ரூ.300க்கு மறுவெளியீடு செய்யப்பட்டது) | | | |
| | பங்கு ஒறுப்புழப்புக் க/கு ப | | 60 | |
| | முதலினக் காப்புக் க/கு | | | 60 |
| | (மறுவெளியீட்டு இலாபம் முதலினக் காப்புக் கணக்கிற்கு மாற்றப்பட்டது) | | | |

குறிப்பு: மறுவெளியீட்டு இலாபத்தைக் கணக்கிடுதல்

| | | |
|---|---|---|
| | 100 பங்குகளின் ஒறுப்பிழப்பு மூலம் பெற்ற தொகை (100 பங்குகள் x ரூ.4) | = ரூ. 400 |
| | 40 பங்குகளின் ஒறுப்பிழப்பு மூலம் பெற்ற தொகை (40 பங்குகள் x ரூ.4) | = ரூ. 160 |
| கழிக்க: | மறுவெளியீட்டு நட்டம் (40 பங்குகள் x ரூ.2.50) | = ரூ. 100 |
| | மறுவெளியீட்டு இலாபம் (முதலினக் காப்பு) (40 பங்குகள் x ரூ.1.50) | = ரூ. 60 |

குறிப்பு: பங்கு ஒறுப்பிழப்பு கணக்கில் மீதமுள்ள தொகை ரூ.240 செலுத்தப்பட்ட முதலுடன் கூட்டப்பட்டு இருப்புநிலைக் குறிப்பின் பொறுப்புகள் பக்கத்தில் தோன்றும்.

### பேரேட்டுக் கணக்குகள்

ப **பங்கு ஒறுப்பிழப்பு கணக்கு** வ

| விவரம் | ரூ. | விவரம் | ரூ. |
|---|---|---|---|
| பங்கு முதல் க/கு | 100 | பங்கு முதல் க/கு | 400 |
| முதலினக் காப்பு க/கு | 60 | | |
| இருப்பு கீ/இ | 240 | | |
| | 400 | | 400 |
| | | இருப்பு கீ/கொ | 240 |

### இருவகையான பங்குகள்:

*நிறுமம் இருவகையான (நேர்மை மற்றும் முன்னுரிமை) பங்குகளை வெளியிடும்போது, பங்கு என்ற சொல்லுக்கு முன்னால் ‘முன்னுரிமை’ அல்லது ‘நேர்மை’ என்ற வார்த்தைகளை உரியவாறு சேர்த்தல் வேண்டும்.*

### எடுத்துக்காட்டு : 21

*பிரியா வரையறு நிறுமம் 1,00,000 நேர்மைப் பங்குகளையும், 50,000 முன்னுரிமைப் பங்குகளையும் ஒன்று ரூ.10 வீதம் பின்வருமாறு செலுத்தத்தக்க வகையில் வெளியிட்டது.*

| | நேர்மைப் பங்குகள் | முன்னுரிமைப் பங்குகள் |
|---|---|---|
| விண்ணப்பத்தின் போது | ரூ. 2 | ரூ. 3 |
| ஒதுக்கீட்டின் போது | ரூ. 4 | ரூ. 4 |
| முதல் மற்றும் இறுதி அழைப்பின் போது | ரூ. 4 | ரூ. 3 |

*பொதுமக்களிடமிருந்து 1,20,000 நேர்மைப் பங்குகளுக்கும் 45,000 முன்னுரிமைப் பங்குகளுக்கும் விண்ணப்பங்கள் பெறப்பட்டன. முன்னுரிமைப் பங்குகள் முழுமையாக ஏற்கப்பட்டன. அதிகமாக பெற்ற நேர்மைப் பங்குகள்*



*நிராகரிக்கப்பட்டன. அனைத்துத் தொகைகளும் பெறப்பட்டன. குறிப்பேட்டுப் பதிவுகள் தருக. முக்கியமான பேரேட்டுக் கணக்குகள் தயாரித்து வருவிய இருப்புநிலைக் குறிப்பு தயாரிக்க.*

### விடை:

**பிரியா வரையறு நிறும ஏடுகளில் குறிப்பேட்டுப் பதிவுகள்**

| நாள் | விவரம் | பேப எண் | பற்று ரூ. | வரவு ரூ. |
|---|---|---|---|---|
| | வங்கிக் க/கு ப | | 2,40,000 | |
| | நேர்மைப் பங்கு விண்ணப்பக் க/கு | | | 2,40,000 |
| | (1,20,000 பங்குகளுக்கு விண்ணப்பத் தொகை பெறப்பட்டது) | | | |
| | வங்கிக் க/கு ப | | 1,35,000 | |
| | முன்னுரிமைப் பங்கு விண்ணப்பக் க/கு | | | 1,35,000 |
| | (45,000 முன்னுரிமைப் பங்குகளுக்கு விண்ணப்பத்தொகை பெறப்பட்டது) | | | |
| | நேர்மைப் பங்கு விண்ணப்பக் க/கு ப | | 2,00,000 | |
| | நேர்மைப் பங்கு முதல் க/கு | | | 2,00,000 |
| | (நேர்மை விண்ணப்பத் தொகை, நேர்மை பங்கு முதலுக்கு மாற்றப்பட்டது) | | | |
| | முன்னுரிமைப் பங்கு விண்ணப்பக் க/கு ப | | 1,35,000 | |
| | முன்னுரிமைப் பங்கு முதல் க/கு | | | 1,35,000 |
| | (முன்னுரிமை விண்ணப்பத் தொகை முன்னுரிமை பங்கு முதலுக்கு மாற்றப்பட்டது) | | | |
| | நேர்மை பங்கு விண்ணப்பக் க/கு ப | | 40,000 | |
| | வங்கிக் க/கு | | | 40,000 |
| | (20,000 பங்குகளுக்குரிய மீதமான விண்ணப்பத் தொகை திருப்பித் தரப்பட்டது) | | | |

| | | |
|---|---|---|
| நேர்மைப் பங்கு ஒதுக்கீட்டுக் க/கு ப<br>நேர்மைப் பங்கு முதல் க/கு<br>*(பங்கொன்றுக்கு ரூ.4 வீதம் 1,00,000 பங்குகளுக்கு ஒதுக்கீட்டுத் தொகை பெற வேண்டியது)* | *4,00,000* | *4,00,000* |
| வங்கிக் க/கு ப<br>நேர்மைப் பங்கு ஒதுக்கீட்டுக் க/கு<br>*(நேர்மைப் பங்குகள் மீது ஒதுக்கீட்டுத் தொகை பெற்றது)* | *4,00,000* | *4,00,000* |
| முன்னுரிமைப் பங்கு ஒதுக்கீட்டுக் க/கு ப<br>முன்னுரிமைப் பங்கு முதல் க/கு<br>*(45000 முன்னுரிமை பங்குகளுக்கு ஒதுக்கீட்டுப் பணம் பெற வேண்டியது)* | *1,80,000* | *1,80,000* |
| வங்கிக் க/கு ப<br>முன்னுரிமைப் பங்கு ஒதுக்கீட்டு க/கு<br>*(45,000 முன்னுரிமைப் பங்குகளுக்கு ஒதுக்கீட்டுப் பணம் பெற்றது)* | *1,80,000* | *1,80,000* |
| நேர்மை பங்கு முதல் மற்றும் இறுதி அழைப்புக் க/கு ப<br>நேர்மைப் பங்கு முதல் க/கு<br>*(பங்கொன்றுக்கு ரூ.4 வீதம் 1,00,000 பங்குகளுக்கு முதல் அழைப்புத் தொகை பெறப்பட்டது)* | *4,00,000* | *4,00,000* |
| வங்கிக் க/கு ப<br>நேர்மைப் பங்கு முதல் மற்றும் இறுதி அழைப்புக் க/கு<br>*(நேர்மைப் பங்குகள் மீது அழைப்புத் தொகை பெறப்பட்டது)* | *4,00,000* | *4,00,000* |
| முன்னுரிமைப் பங்கு முதல் மற்றும் இறுதி அழைப்புக் க/கு ப<br>முன்னுரிமைப் பங்கு முதல் க/கு<br>*(45,000 பங்குகளுக்கு ரூ.3 வீதம் முன்னுரிமை முதல் மற்றும் இறுதி அழைப்புப் பணம் பெற வேண்டியது)* | *1,35,000* | *1,35,000* |



| | | | |
|---|---|---|---|
| | வங்கிக் க/கு ப<br>முன்னுரிமைப் பங்கு முதல் மற்றும் இறுதி அழைப்புக் க/கு<br>*(முன்னுரிமை முதல் மற்றும் இறுதி அழைப்புத் தொகை பெறப்பட்டது)* | *1,35,000* | *1,35,000* |

### பிரியா நிறும ஏடுகளில் முக்கிய பேரேட்டுக் கணக்குகள்

ப **நேர்மைப் பங்கு முதல் கணக்கு** வ

| விவரம் | ரூ. | விவரம் | ரூ. |
|---|---|---|---|
| இருப்பு கீ/இ | *10,00,000* | நேர்மைப் பங்கு விண்ணபப்க் க/கு | *2,00,000* |
| | | நேர்மைப் பங்கு ஒதுக்கீட்டுக் க/கு | *4,00,000* |
| | | நேர்மை முதல் மற்றும் இறுதி அழைப்புக் க/கு | *4,00,000* |
| | *10,00,000* | | *10,00,000* |
| | | இருப்பு கீ/கொ | *10,00,000* |

ப **முன்னுரிமைப் பங்கு முதல் கணக்கு** வ

| விவரம் | ரூ. | விவரம் | ரூ. |
|---|---|---|---|
| இருப்பு கீ/இ | *4,50,000* | முன்னுரிமைப் பங்கு விண்ணபப்க் க/கு | *1,35,000* |
| | | முன்னுரிமைப் பங்கு ஒதுக்கீட்டுக் க/கு | *1,80,000* |
| | | முன்னுரிமை முதல் மற்றும் இறுதி அழைப்புக் க/கு | *1,35,000* |
| | *4,50,000* | | *4,50,000* |
| | | இருப்பு கீ/கொ | *4,50,000* |

ப **வங்கிக் கணக்கு** வ

| விவரம் | ரூ. | விவரம் | ரூ. |
|---|---|---|---|
| நேர்மைப் பங்கு விண்ணபப்க் க/கு | *2,40,000* | நேர்மைப் பங்கு விண்ணபப்க் க/கு | *40,000* |
| முன்னுரிமைப் பங்கு விண்ணபப்க் க/கு | *1,35,000* | இருப்பு கீ/இ | *14,50,000* |

| | | | |
|---|---|---|---|
| நேர்மைப் பங்கு ஒதுக்கீடு க/கு | 4,00,000 | | |
| முன்னுரிமைப் பங்கு ஒதுக்கீடு க/கு | 1,80,000 | | |
| நேர்மைப் பங்கு முதல் மற்றும் இறுதி அழைப்பு க/கு | 4,00,000 | | |
| முன்னுரிமைப் பங்கு முதல் மற்றும் இறுதி அழைப்பு க/கு | 1,35,000 | | |
| | 14,90,000 | | 14,90,000 |
| இருப்பு கீ/கொ | 1450,000 | | |

**பிரியா நிறுமத்தின் வருவிய இருப்புநிலைக் குறிப்பு**

| பொறுப்புகள் | ரூ. | சொத்துகள் | ரூ. |
|---|---|---|---|
| பங்கு முதல்: | | நடப்புச் சொத்துகள்: | |
| அங்கீகரிக்கப்பட்ட முதல் | - - - | வங்கி ரொக்கம் | 14,50,000 |
| வெளியிட்ட முதல்: | | | |
| 50,000 முன்னுரிமைப் பங்குகள் ரூ. 10 வீதம் | 5,00,000 | | |
| 1,00,000 நேர்மைப் பங்குகள் ரூ. 10 வீதம் | 10,00,000 | | |
| ஒப்பிய முதல்: | | | |
| 45,000 முன்னுரிமைப் பங்குகள் ரூ. 10 வீதம் | 4,50,000 | | |
| 1,00,000 நேர்மைப் பங்குகள் ரூ. 10 வீதம் | 10,00,000 | | |
| அழைத்த முதல்: | | | |
| 45,000 முன்னுரிமைப் பங்குகள் ரூ. 10 வீதம் | 4,50,000 | | |
| 1,00,000 நேர்மைப் பங்குகள் ரூ. 10 வீதம் | 10,00,000 | | |
| செலுத்தப்பட்ட முதல்: | | | |
| 45,000 முன்னுரிமைப் பங்குகள் ரூ. 10 வீதம் | 4,50,000 | | |
| 1,00,000 நேர்மைப் பங்குகள் ரூ. 10 வீதம் | 10,00,000 | | |
| | 14,50,000 | | 14,50,000 |



### எடுத்துக்காட்டு : 22

தாமரை வரையறு நிறுமம் பங்கு ஒன்று ரூ. 10 வீதம் 70,000 பங்குகளை ரூ.2 முனைமத்தில் வெளியிட்டது. தொகை கீழ்க்கண்டவாறு செலுத்தப்பட வேண்டும்:

| | |
|---|---|
| விண்ணப்பத்தின்பொழுது | ரூ. 4 |
| ஒதுக்கீட்டின்பொழுது | ரூ. 5 |
| முதல் அழைப்பின்பொழுது | ரூ. 2 |
| இறுதி அழைப்பின்பொழுது | ரூ. 1 |

அனைத்து பங்குகளும் முறையாக ஒப்பப்பட்டது. 1,000 பங்குகள் மீதான முதல் அழைப்பும், 1,500 பங்குகள் மீதான இரண்டாம் அழைப்பும் தவிர ஏனைய அனைத்து தொகையும் பெறப்பட்டது.

நிறுமம், இரு அழைப்புத் தொகையையும் செலுத்தாத பங்குகளை ஒறுப்பிழப்பு செய்தது. இவற்றில் 800 பங்குகளை பங்கு ஒன்று ரூ.7 வீதம் மறு வெளியீடு செய்தது. தேவையான குறிப்பேட்டு பதிவுகளை தருக.

### விடை :

**தாமரை வரையறு நிறுமத்தின் குறிப்பேட்டுப் பதிவுகள்**

| நாள் | விவரம் | பேரேடு எண் | பற்று ரூ. | வரவு ரூ. |
|---|---|---|---|---|
| | வங்கிக் க/கு ப | | 2,80,000 | |
| | பங்கு விண்ணப்பக் க/கு | | | 2,80,000 |
| | (பங்கொன்றுக்கு ரூ.4 வீதம் 70,000 பங்குகளுக்கு விண்ணப்பத் தொகை பெற்றது) | | | |
| | பங்கு விண்ணப்பக் க/கு ப | | 2,80,000 | |
| | பங்கு முதல் க/கு | | | 2,80,000 |
| | (பங்கு விண்ணப்பத் தொகை பங்கு முதல் கணக்கிற்கு மாற்றப்பட்டது) | | | |

| | | | |
|---|---|---|---|
| பங்கு ஒதுக்கீட்டுக் க/கு ப | | 3,50,000 | |
| பங்கு முதல் க/கு | | | 2,10,000 |
| பத்திர முனைமக் க/கு | | | 1,40,000 |
| (70,000 பங்குகளுக்காக (முனைமமும் சேர்ந்து) பெற வேண்டிய ஒதுக்கீட்டுத் தொகை) | | | |
| வங்கிக் க/கு ப | | 3,50,000 | |
| பங்கு ஒதுக்கீட்டுக் க/கு | | | 3,50,000 |
| (ஒதுக்கீட்டு பணம் பெறப்பட்டது) | | | |
| பங்கு முதல் அழைப்புக் க/கு ப | | 1,40,000 | |
| பங்கு முதல் க/கு | | | 1,40,000 |
| (பங்கொன்றுக்கு ரூ.2 வீதம் 70,000 பங்குகளுக்கு முதல் அழைப்புத் தொகை பெறவேண்டியது) | | | |
| வங்கிக் க/கு ப | | 1,38,000 | |
| பங்கு முதல் அழைப்புக் க/கு | | | 1,38,000 |
| (1,000 பங்குகளுக்கான முதல் அழைப்புத் தொகை தவிர அனைத்துப் பங்குகளுக்கும் பெறப்பட்டது) | | | |
| பங்கு இறுதி அழைப்புக் க/கு ப | | 70,000 | |
| பங்கு முதல் க/கு | | | 70,000 |
| (பங்கொன்றுக்கு ரூ.1 வீதம் 70,000 பங்குகளுக்கு இறுதி அழைப்புத் தொகை பெறவேண்டியது) | | | |
| வங்கிக் க/கு ப | | 68,500 | |
| பங்கு இறுதி அழைப்புக் க/கு | | | 68,500 |
| (1,500 பங்குகளைத் தவிர்த்து பெறப்பட்ட பங்கு இறுதி அழைப்புத் தொகை) | | | |



| | | | | |
|---|---|---|---|---|
| | பங்கு முதல் க/கு ப | | 10,000 | |
| | பங்கு முதல் அழைப்புக் க/கு | | | 2,000 |
| | பங்கு இறுதி அழைப்புக் க/கு | | | 1,000 |
| | பங்கு ஒறுப்பிழப்பு க/கு | | | 7,000 |
| | (இரு அழைப்புத் தொகையும் செலுத்தாத 1,000 பங்குகள் ஒறுபிழப்பு செய்யப்பட்டது) | | | |
| | வங்கிக் க/கு ப | | 5,600 | |
| | பங்கு ஒறுப்பிழப்புக் க/கு ப | | 2,400 | |
| | பங்கு முதல் க/கு | | | 8,000 |
| | (800 பங்குகள் மறுவெளியீடு செய்யப்பட்டது) | | | |
| | பங்கு ஒறுப்பிழப்புக் க/கு ப | | 3,200 | |
| | முதலினக் காப்புக் க/கு | | | 3,200 |
| | (ஒறுபிழப்பு செய்யப்பட்ட பங்குகளில் ஏற்பட்ட இலாபத்தை முதலினக் காப்பிற்கு மாற்றப்பட்டது) | | | |

**எடுத்துக்காட்டு : 23**

*சூர்யா வரையறு நிறுமம் ரூ.20 மதிப்புடைய 16,000 பங்குகளை, விண்ணப்பத்தின்பொழுது ரூ.4ம், ஒதுக்கீட்டின் பொழுது ரூ.6ம், முதல் அழைப்பின் பொழுது ரூ.5ம், இரண்டு மற்றும் இறுதி அழைப்பின்போது ரூ. 5ம் பெறத்தக்க வகையில் வெளியிட்டது. 24,000 பங்குகள் கோரி விண்ணப்பங்கள் பெறப்பட்டன. 19,200 பங்குகளுக்கு விகித அளவு அடிப்படையில் ஒதுக்கீடு செய்யப்பட்டன. மீதம் உள்ளவைகள் நிராகரிக்கப்பட்டன. விண்ணப்பத்தின் போது அதிகமாக பெற்ற தொகையை ஒதுக்கீட்டுக்கு பயன்படுத்திக் கொள்ளப்பட்டது. 800 பங்குகள் வைத்திருந்த ஒருவர் இறுதி அழைப்பைச் செலுத்தவில்லை. ஏனைய அனைத்து தொகையும் பெறப்பட்டது. இவைகள் ஒறுப்பிழப்பு செய்யப்பட்டு ரூ.18 வீதம் முழுவதும் செலுத்தப்பட்ட பங்குகளாக மறுவெளியீடு செய்யப்பட்டன.*

தேவையான குறிப்பேட்டுப் பதிவுகளைத் தந்து பேரேட்டு கணக்குகளையும், இருப்புநிலைக் குறிப்பையும் தயாரிக்க.

**விடை:**

**சூர்யா வரையறு நிறுமத்தின் குறிப்பேட்டுப் பதிவுகள்**

| நாள் | விவரம் | பே.ப எண் | பற்று ரூ. | வரவு ரூ. |
|---|---|---|---|---|
| | வங்கிக் க/கு ப<br>பங்கு விண்ணப்பக் க/கு<br>*(24,000 பங்குகளுக்கு விண்ணப்பத் தொகை பெற்றது)* | | 96,000 | 96,000 |
| | பங்கு விண்ணப்பக் க/கு ப<br>பங்கு முதல் க/கு<br>*(16,000 பங்குகள் விண்ணப்பத் தொகை பங்கு முதல் கணக்கிற்கு மாற்றப்பட்டது)* | | 64,000 | 64,000 |
| | பங்கு விண்ணப்பக் க/கு ப<br>வங்கிக் க/கு<br>*(மிகுதியாகப் பெற்ற 4,800 பங்கு களுக்கான விண்ணப்பத் தொகை திருப்பி செலுத்தப்பட்டது)* | | 19,200 | 19,200 |
| | பங்கு விண்ணப்பக் க/கு ப<br>பங்கு ஒதுக்கீட்டுக் க/கு<br>*(மிகுதியாகப் பெற்ற விண்ணப்பத் தொகை ஒதுக்கீட்டுக்கு சரி செய்யப்பட்டது)* | | 12,800 | 12,800 |
| | பங்கு ஒதுக்கீட்டுக் க/கு ப<br>பங்கு முதல் க/கு<br>*(16,000 பங்குகள் மீது ஒதுக்கீட்டுத் தொகை பெறவேண்டியது)* | | 96,000 | 96,000 |



| | | | |
|---|---|---|---|
| வங்கிக் க/கு ப<br>பங்கு ஒதுக்கீட்டுக் க/கு<br>*(ஒதுக்கீட்டு பணம் பெற்றது)* | | 83,200 | 83,200 |
| பங்கு முதல் அழைப்புக் க/கு ப<br>பங்கு முதல் க/கு<br>*(முதல் அழைப்புத் தொகை பெறவேண்டியது)* | | 80,000 | 80,000 |
| வங்கிக் க/கு ப<br>பங்கு முதல் அழைப்புக் க/கு<br>*(முதல் அழைப்புத் தொகை பெற்றது)* | | 80,000 | 80,000 |
| பங்கு இரண்டாவது மற்றும் இறுதி அழைப்பு க/கு ப<br>பங்கு முதல் க/கு<br>*(இரண்டாவது மற்றும் இறுதி அழைப்புத் தொகை பெறவேண்டியது)* | | 80,000 | 80,000 |
| வங்கிக் க/கு ப<br>பங்கு இரண்டாவது மற்றும் இறுதி அழைப்பு க/கு<br>*(800 பங்குகள் மீதான இரண்டாவது மறுறும் இறுதி அழைப்புத் தொகை தவிர அனைத்துப் பங்குகளுக்கும் பெறப்பட்டது)* | | 76,000 | 76,000 |
| பங்கு முதல் க/கு ப<br>பங்கு இரண்டாவது மற்றும் இறுதி அழைப்புக் க/கு<br>பங்கு ஒறுப்பிழப்புக் க/கு<br>*(இறுதி அழைப்புத் தொகை செலுத்தப்படாத 800 பங்குகள் ஒறுபிழப்பு செய்யப்பட்டது)* | | 16,000 | 4,000<br>12,000 |

| | | | |
|---|---|---|---|
| வங்கி க/கு ப | | 14,400 | |
| பஙகு ஒறுப்பிழப்புக் க/கு ப | | 1,600 | |
| பங்கு முதல் க/கு | | | 16,000 |
| (800 பங்குகளை ரூ.18 வீதம் மறு வெளியீடு செய்யப்பட்டது) | | | |
| பங்கு ஒறுப்பிழப்புக் க/கு ப | | 10,400 | |
| முதலினக் காப்புக் க/கு | | | 10,400 |
| (ஒறுபிழப்பு செய்யப்பட்ட பங்குகளில் ஏற்பட்ட இலாபத்தை முதலினக் காப்பிற்கு மாற்றப்பட்டது) | | | |

## சூர்யா நிறும ஏடுகளில் பேரேட்டுக் கணக்குகள்

ப **வங்கிக் கணக்கு** வ

| விவரம் | ரூ. | விவரம் | ரூ. |
|---|---|---|---|
| பங்கு விண்ணப்பக் க/கு | 96,000 | பங்கு விண்ணப்பக் க/கு | 19,200 |
| பங்கு ஒதுக்கீடுக் க/கு | 83,200 | இருப்பு கீ/இ | 3,30,400 |
| பங்கு முதல் அழைப்பு க/கு | 80,000 | | |
| பங்கு இரண்டாவது மற்றும் இறுதி அழைப்புக் க/கு | 76,000 | | |
| பங்கு முதல் க/கு | 14,400 | | |
| | 3,49,600 | | 3,49,600 |
| இருப்பு கீ/கொ | 3,30,400 | | |

ப **பங்கு விண்ணப்பக் கணக்கு** வ

| விவரம் | ரூ. | விவரம் | ரூ. |
|---|---|---|---|
| பங்கு முதல் க/கு | 64,000 | வங்கிக் க/கு | 96,000 |
| வங்கிக் க/கு | 19,200 | | |
| பங்கு ஒதுக்கீட்டுக் க/கு | 12,800 | | |
| | 96,000 | | 96,000 |



ப **பங்கு ஒதுக்கீட்டுக் கணக்கு** வ

| விவரம் | ரூ. | விவரம் | ரூ. |
|---|---|---|---|
| பங்கு முதல் க/கு | 96,000 | வங்கிக் க/கு | 83,200 |
| | | பங்கு விண்ணப்பக் க/கு | 12,800 |
| | 96,000 | | 96,000 |

ப **பங்கு முதல் அழைப்புக் கணக்கு** வ

| விவரம் | ரூ. | விவரம் | ரூ. |
|---|---|---|---|
| பங்கு முதல் க/கு | 80,000 | வங்கிக் க/கு | 80,000 |
| | 80,000 | | 80,000 |

ப **பங்கு இரண்டாவது மற்றும் இறுதி அழைப்புக் கணக்கு** வ

| விவரம் | ரூ. | விவரம் | ரூ. |
|---|---|---|---|
| பங்கு முதல் க/கு | 80,000 | வங்கிக் க/கு | 76,000 |
| | | பங்கு முதல் க/கு | 4,000 |
| | 80,000 | | 80,000 |

ப **பங்கு முதல் கணக்கு** வ

| விவரம் | ரூ. | விவரம் | ரூ. |
|---|---|---|---|
| பங்கு இரண்டாவது மற்றும் இறுதி அழைப்புக் க/கு | 4,000 | பங்கு விண்ணப்பக் க/கு | 64,000 |
| பங்கு ஒறுப்பிழப்புக் க/கு | 12,000 | பங்கு ஒதுக்கீட்டுக் க/கு | 96,000 |
| இருப்பு கீ/இ | 3,20,000 | பங்கு முதல் அழைப்புக் க/கு | 80,000 |
| | | பங்கு இரண்டாவது மற்றும் இறுதி அழைப்புக் க/கு | 80,000 |
| | | வங்கிக் க/கு | 14,400 |
| | | பங்கு ஒறுப்பிழப்புக் க/கு | 1,600 |
| | 3,36,000 | | 3,36,000 |
| | | இருப்பு கீ/கொ | 3,20,000 |

ப பங்கு ஒறுபிழப்புக் கணக்கு வ

| விவரம் | ரூ. | விவரம் | ரூ. |
|---|---|---|---|
| பங்கு முதல் க/கு | 1,600 | பங்கு முதல் க/கு | 12,000 |
| முதலினக் காப்புக் க/கு | 10,400 | | |
| | 12,000 | | 12,000 |

ப முதலினக் காப்புக் கணக்கு வ

| விவரம் | ரூ. | விவரம் | ரூ. |
|---|---|---|---|
| இருப்பு கீ/இ | 10,400 | பங்கு ஒறுப்பிழப்புக் க/கு | 10,400 |
| | 10,400 | | 10,400 |
| | | இருப்பு கீ/கொ | 10,400 |

**சூர்யா நிறுமத்தின் வருவிய இருப்புநிலைக் குறிப்பு**

| பொறுப்புகள் | ரூ. | சொத்துகள் | ரூ. |
|---|---|---|---|
| பங்கு முதல்: | | நடப்புச் சொத்துகள்: | |
| அங்கீகரிக்கப்பட்ட முதல் | – – – | வங்கி | 3,30,400 |
| வெளியிட்ட முதல்: | | | |
| 16,000 பங்குகள் ரூ. 20 வீதம் | 3,20,000 | | |
| ஒப்பிய முதல்: | | | |
| 16,000 பங்குகள் ரூ. 20 வீதம் | 3,20,000 | | |
| அழைக்கப்பட்ட முதல்: | | | |
| 16,000 பங்குகள் ரூ. 20 வீதம் | 3,20,000 | | |
| செலுத்தப்பட்ட முதல்: | | | |
| 16,000 பங்குகள் ரூ. 20 வீதம் | 3,20,000 | | |
| காப்பும் மிகுதியும்: | | | |
| முதலினக் காப்பு | 10,400 | | |
| | 3,30,400 | | 3,30,400 |



# வினாக்கள்

## I. புற வகை வினாக்கள்

### அ) கோடிட்ட இடங்களை நிரப்புக.

1. _________ ஆண்டு நிறுமச்சட்டத்தின் _________ பிரிவில் நிறுமத்திற்கு இலக்கணம் கொடுக்கப்பட்டுள்ளது.
2. _________ நிறுமத்தின் அலுவலக கையொப்பமாக கருதப்படுகிறது.
3. நிறுமத்தின் மேலாண்மை _________ மேற்கொள்ளப் படுகிறது.
4. நிறுமத்தில் பங்குதாரர்களுடைய பொறுப்பு _________.
5. நிறுமத்தின் தணிக்கையாளர்களாக பட்டயக் கணக்காளர்கள் _________, ஆண்டு பொதுக்குழுக் கூட்டத்தில் நியமிக்கப்படுகின்றனர்.
6. _________ என்பது நிறுமத்தால் வெளியிடக் கூடிய அதிகபட்ச முதல் தொகை ஆகும்.
7. பெயரளவு முதல் நிறுமத்தின் _________ குறிப்பிடப்பட்டு இருக்கும்.
8. அங்கீகரிக்கப்பட்ட பங்கு முதலில் பொதுமக்கள் ஒப்புகைக்கு நிறுமம் அளிக்காத பகுதி _________ ஆகும்.
9. காப்பு முதல் _________ போது மட்டும் வெளியிடப்படும்.
10. பொது வெளியீடு _________ நாட்களுக்கு அதிகமாக அனுமதிக்கப்படுவது இல்லை.
11. ஒரு நிறுமத்தின், குறும ஒப்பமாக வெளியிடப்பட்ட முதலில் _________ பெற்று இருக்க வேண்டும்.
12. எஞ்சிய விண்ணப்ப தொகையில் ஒதுக்கீட்டிற்கு சரிகட்டிக் கொள்ள கூடிய ஒதுக்கீடு _________ ஆகும்.
13. இரு அழைப்புகளுக்கிடையே இருக்க வேண்டிய கால இடைவெளி _________ ஆகும்.

14. முதலினக் காப்பு என்பது _______ இலாபத்தைக் குறிக்கின்றது.

15. ஒறுப்பிழப்பு செய்த பங்குகளின் மறுவெளியீட்டு விலை முகமதிப்பைவிட _________ இருக்க வேண்டும்.

16. பத்திர முனைமம் இருப்புநிலைக் குறிப்பில் _________ பக்கம் காண்பிக்கப்பட வேண்டும்.

(விடை: (1) 1956, பிரிவு 3(1)(i); (2) பொதுமுத்திரை; (3) இயக்குநர் அவையால்; (4) வரையறுக்கப்பட்டது (5) பங்குதாரர்களால்; (6) அங்கீகரிக்கப்பட்ட / பெயரளவு / பதிவுசெய்யப்பட்ட; (7) அமைப்பு முறை ஏடு; (8) வெளியிடா பங்கு; (9) கலைத்தல்; (10) 10 நாட்கள்; (11) 90 சதவிகிதம்; (12) விகித அளவு அடிப்படை ஒதுக்கீடு; (13) ஒரு மாதம்; (14) முதலின; (15) குறைவாக; (16) பொறுப்புகள்)

**ஆ) சரியான விடையை தேர்வு செய்க.**

1. நிறுமச் (திருத்தப்பட்ட) சட்டம் 2000ன், படி பங்குகளால் வரையறுக்கப்பட்ட நிறுமம் _________ வகையான பங்குகளை மட்டும் வெளியிடும்.

   (அ) 1 (ஆ) 2 (இ) 3

2. பொது வெளியீடு அனுமதிக்கப்படும் குறைந்தபட்ச நாட்கள்

   (அ) 3 நாட்கள் (ஆ) 5 நாட்கள் (இ) 7 நாட்கள்

3. இ.ப.மா.வா (SEBI) ன் கூற்றுப்படி, விண்ணப்பத்தின் போது குறைந்தபட்சம் வசூலிக்கும் தொகை வெளியீட்டு விலையில் _________ ஆகும்.

   (அ) 10% (ஆ) 25% (இ) 50%

4. வெளியிடப்பட்ட பங்குகளின் எண்ணிக்கையைவிடக் கூடுதலாக விண்ணப்பங்கள் பொது மக்களிடமிருந்து பெறப்பட்டால் அதனை _________ என்று அழைக்கலாம்.

   (அ) மிகை ஒப்பம் (ஆ) குறை ஒப்பம்

   (இ) முழு ஒப்பம்



5. ஒரு நிறுமம் விடுக்கக் கூடிய அதிகபட்ச அழைப்புகளின் எண்ணிக்கை

   (அ) ஒன்றாகும் (ஆ) இரண்டாகும் (இ) மூன்றாகும்

6. அட்டவணை A யின்படி, அழைப்பு நிலுவைக்கு கணக்கிடப்படும் வட்டி _________.

   (அ) 4% (ஆ) 5% (இ) 6%

7. அட்டவணை A யின் படி, அழைப்பு முன்பணத்திற்கு செலுத்திடும் வட்டி _________ ஆகும்.

   (அ) 4% (ஆ) 5% (இ) 6%

8. நிறுமமானது பங்குகளை

   (அ) முகமதிப்பில் மட்டும் வெளியிடலாம்

   (ஆ) முகமதிப்பு மற்றும் முனைமத்தில் வெளியிடலாம்

   (இ) முகமதிப்பு, முனைமம் மற்றும் தள்ளுபடியில் வெளியிடலாம்.

9. ஒரு நிறுமத்தின் பங்கு வெளியீட்டு விலை முகமதிப்பிற்கு அதிகமாக இருக்குமேயானால் அதனை ________ வெளியீடு என்று அழைக்கலாம்.

   (அ) முகமதிப்பு (ஆ) முனைமத்தில்

   (இ) தள்ளுபடியில்

10. பொதுவாக நிறுமங்கள் பங்குகளை ——— தள்ளுபடியில் வெளியிடலாம்.

    (அ) 5% (ஆ) 10% (இ) 20%

11. பங்குகளை நிறுமம் ஒறுப்பிழப்பு செய்யும்போது அந்நிறுமத்தின் பங்கு முதல் ———— .

    (அ) அதே நிலையில் இருக்கும் (ஆ) குறையும்

    (இ) அதிகரிக்கும்

12. பத்திர முனைமம், இருப்புநிலைக் குறிப்பில் ———— பக்கத்தில் தோன்றும்.

    (அ) சொத்துகள் (ஆ) பொறுப்புகள்

    (இ) சொத்துகள் மற்றும் பொறுப்புகள்

13. இருப்புநிலைக் குறிப்பில், பங்கு ஒறுப்பிழப்பு கணக்கின் இருப்பு –

(அ) செலுத்தப்பட்ட முதலுடன் கூட்ட வேண்டும்

(ஆ) அங்கீகரிக்கப்பட்ட முதலுடன கூட்ட வேண்டும்

(இ) செலுத்தப்பட்ட முதலில் இருந்து கழிக்க வேண்டும்.

14. அழைப்பு நிலுவை, இருப்புநிலைக் குறிப்பில் ————

(அ) அழைத்த முதலில் இருந்து கழித்து காண்பிக்க வேண்டும்

(ஆ) செலுத்தப்பட்ட முதலுடன் கூட்டி காண்பிக்க வேண்டும்

(இ) வெளியிட்ட முதலுடன் கூட்டி காண்பிக்க வேண்டும்

15. இருப்புநிலைக் குறிபபில் முதலினக் காப்பு ——— பக்கம் தோன்றும்

(அ) சொத்துக்கள் (ஆ) பொறுப்புகள்

(இ) இரண்டும்

(விடை: (1) (ஆ); 2. (அ); 3. (ஆ); 4. (அ); 5. (இ); 6. (ஆ); 7. (இ); 8. (இ); 9. (ஆ); 10. (ஆ); 11. (ஆ); 12. (ஆ); 13. (அ); 14. (அ); 15. (ஆ))

## II. இதர வினாக்கள்:

1. நிறுமத்திற்கு இலக்கணம் தருக.
2. நிறுமத்தின் தன்மைகள் யாவை?
3. ஒரு நிறுமத்தின் பங்கு முதலின் பல்வேறு வகைகளை விவரிக்க
4. பங்கு என்றால் என்ன?
5. ஒரு நிறுமம் வெளியிடக் கூடிய பல்வேறு விதமான பங்குகள் யாவை?
6. முன்னுரிமை பங்குகளின் பல்வேறு வகைகளை விவரிக்க.
7. பங்கு வெளியீட்டின் செயல்முறைகளை விளக்குக.
8. ஒதுக்கீடு என்றால் என்ன?



9. விகித அளவு அடிப்படை ஒதுக்கீடு என்றால் என்ன?
10. அழைப்பு நிலுவை குறித்து நீவிர் அறிவது யாது?
11. அழைப்பு முன்பணம் என்றால் என்ன?
12. மிகை ஒப்பம் மற்றும் குறை ஒப்பம் இடையேயான வேறுபாடுகள் யாவை?
13. சாதாரணப் பங்குகள் என்றால் என்ன?
14. பங்குகளை முனைமத்தில் வெளியிடுதல் பற்றி நீவிர் அறிவது யாது?
15. பங்கு ஒறுப்பிழப்பு என்றால் என்ன?
16. ஒறுப்பிழப்பு செய்த பங்குகளை மறுவெளியீடு செய்வது குறித்து குறிப்பு வரைக.

## III. கணக்குகள்

1. ஒரு நிறுமம் ரூ. 10 வீதம் 20000 பங்குகளை வெளியிட்டது. தொகை கீழ்க்கண்டவாறு செலுத்தப்பட வேண்டும்.

| | |
|---|---|
| விண்ணப்பத்தின் போது | ரூ. 3 |
| ஒதுக்கீட்டின் போது | ரூ 3 |
| முதல் மற்றும் இறுதி அழைப்பின் போது | ரூ 4 |

அனைத்து பங்குகளும் ஒப்பப்பட்டு முறையாக செலுத்தப்பட்டது. குறிப்பேட்டு பதிவுகள் தருக.

2. பிரீத்தி நிறுமம் ரூ.10 வீதம் 5000 பங்குகளுக்கு விண்ணப்பங்கள் வரவேற்றது. கீழ்கண்டவாறு தொகை செலுத்தப்பட வேண்டும்.

| | |
|---|---|
| விண்ணப்பத்தின் போது | ரூ. 3 |
| ஒதுக்கீட்டின் போது | ரூ 2 |
| முதலாவது அழைப்பின் போது | ரூ 2 |
| இறுதி அழைப்பின் போது | ரூ 3 |

அனைத்து பங்குகளும் ஒப்பப்பட்டு முறையாக செலுத்தப்பட்டது. உரிய குறிப்பேட்டுப் பதிவுகள் தருக.

3. பெயரளவு முதல் ரூ.5,00,000 பெற்றுள்ள ஒரு கூட்டு பங்கு நிறுமம், அதனை ரூ.100 வீதம் 5000 பங்குகளாக பிரித்து

வெளியிட்டது. தொகை கீழ்க்கண்டவாறு செலுத்தப்பட வேண்டும்.

| | |
|---|---|
| விண்ணப்பத்தின் போது | ரூ.30 |
| ஒதுக்கீட்டின் போது | ரூ.20 |
| முதலாவது அழைப்பின்போது | ரூ.30 |
| மற்றும் இறுதி அழைப்பின் போது | ரூ.20. |

அனைத்து பங்குகளும் ஒப்பப்பட்டு முறையாக செலுத்தப்பட்டது. உரிய குறிப்பேட்டுப் பதிவுகள் தருக.

4. மேரி வரையறு நிறுமம் ரூ10 வீதம் 1000 பங்குகளை ரூ2 முனைமத்தில் வெளியிட்டது

| | |
|---|---|
| விண்ணப்பத்தின் போது | ரூ.4 |
| ஒதுக்கீட்டின் போது | ரூ.4 (முனைமத்துடன்) |

தேவையுள்ள பொழுது மீதித் தொகை அழைக்கப்படும்.

அனைத்து பங்குகளும் ஒப்பப்பட்டு முறையாக செலுத்தப்பட்டது. உரிய குறிப்பேட்டுப் பதிவுகள் தருக.

5. குளோபல் வரையறு நிறுமம் ரூ.100 வீதம் 6000 பங்குகளை ரூ.20 முனைமத்தில் வெளியிட்டது. தொகை கீழ்க்கண்டவாறு செலுத்தப்பட வேண்டும்.

| | |
|---|---|
| விண்ணப்பத்தின் போது | ரூ.30 |
| ஒதுக்கீட்டின் போது (முனைமத்துடன்) | ரூ.50 |
| முதலாவது அழைப்பின் போது | ரூ.30 |
| இறுதி அழைப்பின் போது | ரூ.10 |

அனைத்து பங்குகளும் ஒப்பப்பட்டு முறையாக பணம் பெறப்பட்டது. குறிப்பேட்டுப் பதிவுகளை தருக.

6. ஒரு நிறுமம் ரூ10 வீதம் 10000 பங்குகளை ரூ.1 தள்ளுபடியில் வெளியிட்டது. தொகை கீழ்க்கண்டவாறு செலுத்தப்பட வேண்டும்.

| | |
|---|---|
| விண்ணப்பத்தின் போது | ரூ.3 |
| ஒதுக்கீட்டின் போது (தள்ளுபடியுன்) | ரூ.4 |
| முதலாவது மற்றும் இறுதி அழைப்பின் போது | ரூ.2 |



அனைத்து பங்குகளும் ஒப்பப்பட்டு முறையாக செலுத்தப்பட்டது. உரிய குறிப்பேட்டுப் பதிவுகளைத் தருக.

7. கீரின் நிறுமம் ரூ.100 வீதம் 40000 பங்குகளை ரூ10 தள்ளுபடியில் வெளியிட்டது. தொகை கீழ்க்கண்டவாறு செலுத்தப்பட வேண்டும்.

| | |
|---|---|
| விண்ணப்பத்தின் பொழுது | ரூ.25 |
| ஒதுக்கீட்டின் பொழுது (தள்ளுபடியுடன்) | ரூ.40 |
| இறுதி அழைப்பின் பொழுது | ரூ.25 |

பங்குகள் அனைத்தும் விண்ணப்பிக்கப்பட்டு ஒதுக்கீடு செய்யப்பட்டன. உரிய நேரத்தில் அனைத்து தொகைகளும் பெறப்பட்டன. குறிப்பேட்டுப் பதிவுகள் தருக.

8. வினோத் வரையறு நிறுமம் ரூ10 வீதம் 40,000 முன்னுரிமை பங்குகளை ரூ3 முனைமத்தில் வெளியிட்டது. உரிய குறிப்பேட்டுப் பதிவினை தருக.

(அக்டோபர் 1997)

9. ஸ்ரீதர் வரையறு நிறுமம் ரூ100 வீதம் 20000 பங்குகளை 10% தள்ளுபடியில் வெளியிட்டது. குறிப்பேட்டுப் பதிவினைத் தருக.

(மார்ச் 1999)

10. சுரேஷ் வரையறு நிறுமம் ரூ10 வீதம் 2000 பங்குகளை ரூ.1 முனைமத்தில் பொதுமக்களுக்கு வெளியிட்டது. தொகை கீழ்க்கண்டவாறு செலுத்தப்பட வேண்டும்.

| | |
|---|---|
| விண்ணப்பத்தின் போது | ரூ.3 |
| ஒதுக்கீட்டின் போது (முனைமத்துடன்) | ரூ.4 |
| முதலாவது அழைப்பின் போது | ரூ.2 |
| இறுதி அழைப்பின் போது | ரூ.2 |

பொதுமக்களால் 1800 பங்குகள் ஒப்பப்பட்டது. அனைத்துத் தொகைகளும் பெறப்பட்டன. பேரேட்டுக் கணக்குகளை தயாரிக்கவும்.

(விடை: வங்கி க/கு ரூ.19,800; பங்கு முதல் க/கு ரூ.18,000 பிணைய முனைமக் க/கு ரூ.1,800)

11. குட்வில் வரையறு நிறுமத்தின் அங்கீகரிக்கப்பட்ட பங்கு முதல் ரூ.50,00,000, பங்கொன்று ரூ100 வீதம் பிரிக்கப்பட்டுள்ளது. இது 10,000 பங்குகளை 4% தள்ளுபடியில் கீழ்கண்டவாறு செலுத்தும் வண்ணம் வெளியிட்டது.

| | |
|---|---|
| விண்ணப்பத்தின் போது | ரூ.20 |
| ஒதுக்கீட்டின் போது | ரூ.46 |
| முதலாவது மற்றும் இறுதி அழைப்பின் போது | ரூ.30. |

9000 பங்குகளுக்கு விண்ணப்பங்கள் பெறப்பட்டு அனைத்துப் பங்குகளும் ஒதுக்கீடு செய்யப்பட்டன. பெற வேண்டிய அனைத்து தொகைகளும் பெறப்பட்டன. உரிய குறிப்பேட்டு பதிவுகள் தருக. மேலும் வருவிய இருப்பு நிலைக் குறிப்பு தயார் செய்க.

(விடை: இருப்பு நிலைக் குறிப்பு ரூ.9,00,000)

12. ஆல்பா வரையறு நிறுமம் 1.1.98 அன்று பங்கொன்று ரூ10 வீதம் 1,00,000 பங்குகளை விண்ணப்பத்தின் பொழுது ரூ.2 செலுத்தும் வகையில் வெளியிட்டது. நிறுமம் 1.20,000 பங்குகள் வேண்டி விண்ணப்பம் பெற்றது. மிகுதியான விண்ணப்பங்கள் நிராகரிக்கப்பட்டு தொகை திருப்பப் பட்டது. தேவையான பதிவுகளை தருக.

(அக்டோபர் 2000)

13. குட்லக் வரையறு நிறுமம் பங்கொன்று ரூ10 வீதம் 1,00,000 பங்குகளை கீழ்கண்டவாறு செலுத்தும் வண்ணம் வெளியிட்டது.

| | |
|---|---|
| விண்ணப்பத்தின் போது | ரூ3 |
| ஒதுக்கீட்டின் போது | ரூ3 |

மற்றும் மீத தொகையினை தேவையான போது.

1,50,000 பங்குகளுக்கு விண்ணப்பம் பெறப்பட்டது. இயக்குநர்கள் மிகையான பங்கு விண்ணப்பங்களை நிராகரித்து விண்ணப்பத் தொகை திரும்பச் செலுத்தப்பட்டது. பெறவேண்டிய அனைத்து தொகையும் பெறப்பட்டது. இந்நடவடிக்கைகளை ஏடுகளில் பதிவு செய்க.



14. ஜாக்சன் வரையறு நிறுமத்தின் அங்கீகரிக்கப்பட்ட பங்கு முதல் ரூ.3,00,000 பங்கொன்று ரூ.10 வீதம் பிரிக்கப் பட்டுள்ளது. அது ரூ.10 மதிப்புடைய 4,000 பங்குகளை ரூ.2 முனைமத்தில் பின்வரும் நிபந்தனைகளோடு வெளியிட்டது.

விண்ணப்பத்தின் போது பங்கொன்றுக்கு ரூ.2 வீதம்

ஒதுக்கீட்டின் போது பங்கொன்றுக்கு ரூ.5 வீதம்
(ரூ 2 முனைமத்துடன் சேர்த்து)

முதலாவது அழைப்பின் போது பங்கொன்றுக்கு ரூ.3

இறுதி அழைப்பின் போது பங்கொன்றுக்கு ரூ2

6000 பங்குகளுக்கான விண்ணப்பங்கள் பெறப்பட்டன. 2000 பங்குகளுக்கான விண்ணப்பங்கள் நிராகரிக்கப் பட்டன. பங்குகள் மீது பெறவேண்டிய அனைத்துத் தொகையும் முறையாக பெறப்பட்டது. தேவையான குறிப்பேட்டு பதிவுகள் தந்து வருவிக்கப்பட்ட இருப்பு நிலைக் குறிப்பினை காண்பிக்க.

(விடை: இருப்புநிலைக் குறிப்பு ரூ.48,000)

15. நிலவு வரையறு நிறுமம் பங்கொன்று ரூ.10 முகமதிப்புடைய 20,000 பங்குகளை வெளியிட்டது. தொகை கீழ்க்கண்ட வாறு செலுத்தப்பட வேண்டும்.

| | |
|---|---|
| விண்ணப்பத்தின் போது | ரூ. 2.50 |
| ஒதுக்கீட்டின் போது (முனைமத்துடன்) | ரூ. 5 |
| முதலாவது அழைப்பின் போது | ரூ. 3 |
| இறுதி அழைப்பின் போது | ரூ. 2 |

30,000 பங்குகளுக்கான விண்ணப்பங்கள் பெறப்பட்டன. 5,000 பங்குகளுக்கான விண்ணப்பங்கள் நிராகரிக்கப் பட்டன. 5,000 பங்குகளுக்கான விண்ணப்பத்தொகை ஒதுக்கீட்டுக்கு சரிசெய்து கொள்ளப்பட்டது. இதர தொகைகள் அனைத்தும் குறிப்பிட்ட நேரத்தில் பெறப்பட்டது.. குறிப்பேட்டுப் பதிவுகள் தருக.

16. ஒரு நிறுமம் பங்கொன்றுக்கு ரூ.20 வீதம் 10,000 பங்குகளை ரூ.5 முனைமத்துடன் வெளியிட்டது. தொகை கீழ்க்கண்ட வாறு செலுத்தப்பட வேண்டும்.

| | |
|---|---|
| விண்ணப்பத்தின் போது | ரூ.10 |
| ஒதுக்கீட்டின் போது (முனைமத்துடன்) | ரூ.10 |
| முதலாவது மற்றும் இறுதி அழைப்பின் போது | ரூ.5. |

11,000 பங்குகளுக்கான விண்ணப்பங்கள் பெறப்பட்டன. மிகுதியான விண்ணப்பங்களுக்கான தொகை திருப்பப்பட்டது. 500 பங்குகளுக்கான இறுதி அழைப்பு தொகையை தவிர மற்ற அனைத்துத் தொகையும் பெறப்பட்டது. குறிப்பேட்டுப் பதிவுகள் தருக.

17. சந்தோஷ் வரையறு நிறுமம் பங்கொன்று ரூ.100 வீதம் 5,000 நேர்மைப் பங்குகளை பொதுமக்களுக்கு வெளியிட்டது. தொகை கீழ்வருமாறு செலுத்தப்பட வேண்டும்.

| | |
|---|---|
| விண்ணப்பதின் போது | ரூ.30 |
| ஒதுக்கீட்டின் போது | ரூ.30 |
| முதலாவது மற்றும் இறுதி அழைப்பின் போது | ரூ.40 |

பொது மக்களால் ஒப்பப்பட்ட 4,000 பங்குகள் ஒதுக்கீடு செய்யப்பட்டன. 200 பங்குகள் மீதான அழைப்புத் தொகை தவிர ஏனைய தொகைகள் அனைத்தும் பெறப்பட்டது குறிப்பேட்டுப் பதிவுகள் தருக.

18. செண்பகம் வரையறு நிறுமம் ரூ.100 வீதம் 20,000 பங்குகளை பின்வருமாறு செலுத்தும் வண்ணம் வெளியிட்டது.

| | |
|---|---|
| விண்ணப்பத்தின் போது | ரூ.25 |
| ஒதுக்கீட்டின் போது | ரூ.25 |
| முதலாவது அழைப்பின் போது | ரூ.20 |
| இறுதி அழைப்பின் போது | ரூ.30 |

18,000 பங்குகளுக்கு விண்ணப்பங்கள் பெறப்பட்டு ஒதுக்கீடு செய்யப்பட்டது. 250 பங்குகளுக்கான இறுதி அழைப்பு தொகையை தவிர அனைத்து தொகையும் பெறப்பட்டது. குறிப்பேட்டுப் பதிவுகள் தருக.

19. மாரி வரையறு நிறுமம் பங்கொன்று ரூ.100 வீதம் 1000 பங்குகளை பொதுமக்களுக்கு ரூ.5 தள்ளுபடியில் பின்வருமாறு செலுத்தும் வண்ணம் வெளியிட்டது.



| | |
|---|---|
| விண்ணப்பத்தின் போது | ரூ.20 |
| ஒதுக்கீட்டின் போது (தள்ளுபடி சரிகட்டுதலுடன்) | ரூ.25 |
| முதலாவது அழைப்பின் போது | ரூ.20 |
| இறுதி அழைப்பின் போது | ரூ.30 |

அனைத்து பங்குகளுக்கும் விண்ணப்பம் பெறப்பட்டு ஒதுக்கீடு செய்யப்பட்டது. சண்முகம் என்பவருக்கு ஒதுக்கீடு செய்த 100 பங்குகளுக்கான இறுதி அழைப்புத் தொகை இயக்குநர்களுடன் செய்து கொண்ட ஏற்பாட்டின்படி முதலாவது அழைப்பின் போதே பெறப்பட்டது. அனைத்துத் தொகையும் பெறப்பட்டது. குறிப்பேட்டுப் பதிவுகள் தருக.

20. பகவதி வரையறு நிறுமம் பங்கொன்று ரூ.10 வீதம் 10000 பங்குகளை 10% தள்ளுபடியில் பின்வருமாறு செலுத்தும் வண்ணம் வெளியிடப்பட்டது.

| | |
|---|---|
| விண்ணப்பத்தின் போது | ரூ.2.50 |
| ஒதுக்கீட்டின் போது | ரூ.3.00 |
| முதலாவது மற்றும் இறுதி அழைப்பின் போது | ரூ.3.50 |

100 பங்குகள் மீதான இறுதி அழைப்பு தவிர ஏனைய தொகைகள் அனைத்தும் பெறப்பட்டன. இப்பங்குகளை உரிய அறிவிப்பு கொடுத்து நிறுமம் ஒறுப்பிழப்பு செய்தது. ஒறுப்பிழப்புக்கான பதிவினைச் செய்க.

21. காந்திமதி நிறுமத்தின் பெயரளவு முதல் ரூ.1,00,000, பங்கொன்று ரூ.10 வீதம் பதிவு செய்யப்பட்டது. இது பொதுமக்களுக்கு 6,000 பங்குகளை வெளியீடு செய்தது. ஆனால் 8,000 பங்குகள் வேண்டி விண்ணப்பங்கள் பெறப்பட்டன. 1,000 பங்குகளுக்கான விண்ணப்பங்களை இயக்குநர்கள் நிராகரித்து திருப்பிவிட்டனர். 1,000 பங்குகள் மீதான விண்ணப்பத் தொகை ஒதுக்கீட்டிற்கு சரிகட்டப்பட்டது. பங்குகள் மீது பின்வருமாறு தொகைகள் பெறப்பட்டன.

விண்ணப்பத்தின் போது பங்கொன்றுக்கு ரூ.3 வீதம்;

ஒதுக்கீட்டின் போது பங்கொன்றுக்கு ரூ.3 வீதம்;

மீத தொகை முதலாவது மற்றும் இறுதி அழைப்பில்

100 பங்குகளை வைத்திருந்த பங்குதாரர் ஒருவர் அழைப்பு தொகையை செலுத்தத் தவறியதன் காரணமாக அவரின் பங்குகள் ஒறுப்பிழப்பு செய்யப்பட்டன. தேவையான குறிப்பேட்டுப் பதிவுகளைத் தருக.

22. கனி வரையறு நிறுமம், பங்கொன்றுக்கு ரூ.3 மற்றும் இறுதி அழைப்புப் பணம் பங்கொன்றுக்கு ரூ.4 பெறப்படாமைக்காக திருமதி.சாந்தா அவர்களின் 20 பங்குகளை (பங்கொன்று ரூ.10 முற்றும் அழைக்கப்பட்டது) ஒறுப்பிழப்பு செய்தது. ஒறுப்பிழப்பு செய்த பங்குகள் பங்கொன்று ரூ.8 முழுவதும் செலுத்தப்பட்ட பங்குகளாக ஜோஸ்பினுக்கு மறுவெளியீடு செய்யப்பட்டது. ஒறுப்பிழப்பு மற்றும் மறுவெளியீட்டுக்கான பதிவுகளைத் தருக.

(விடை: முதலினக் காப்பு ரூ.80)

23. ஒரு நிறுமம் 10% முனைமத்தில் வெளியிடப்பட்ட (பங்கொன்றின் மதிப்பு ரூ.100) 100 பங்குகளை ஒறுப்பிழப்பு செய்தது. இப்பங்குகள் மீது முதல் அழைப்புத் தொகை பங்கொன்றிற்கு ரூ.30 மற்றும் இறுதி அழைப்புத் தொகை ரூ.20 இன்னும் அழைக்கப்படவில்லை. இப்பங்குகளை ஒறுப்பிழப்பு செய்யப்பட்டு பங்கொன்று ரூ.90 வீதம் மறுவெளியீடு செய்யப்பட்டது. பங்குகளின் ஒறுப்பிழப்பு மற்றும் மறுவெளியீட்டுக்கான பதிவுகளைத் தருக.

(விடை: முதலினக் காப்பு ரூ.4000)

24. ஒரு நிறுமத்தின் இயக்குநர்கள் ஒன்று ரூ.10 மதிப்புடைய 200 சாதாரண பங்குகள் மீது இறுதி அழைப்புத் தொகையான ரூ.2 செலுத்தாத காரணத்தினால் ஒறுப்பிழப்பு செய்தனர். இப்பங்குகள் ரூ.1500க்கு



மறுவெளியீடு செய்யப்பட்டன. மேற்கண்ட நடவடிக்கைகளை பதிவு செய்க.

(விடை: முதலினக் காப்பு ரூ.1100)

25. ஒரு நிறுமத்தின் இயக்குநர்கள் முற்றும் அழைக்கப்பெற்ற ரூ.10 மதிப்புடைய 100 பங்குகளை ஒறுப்பிழப்பு செய்தனர். அவற்றின் மீது முதல் அழைப்பு பங்கொன்றுக்கு ரூ.2 வீதமும், இறுதி அழைப்பு ரூ.3 வீதமும் செலுத்தப்பட வில்லை. இதில் 60 பங்குகளை முழுவதும் செலுத்தப்பட்டவைகளாக பங்கொன்று ரூ.6 வீதம் மறுவெளியீடு செய்தது. தேவையான குறிப்பேட்டுப் பதிவுகளை இந்நடவடிக்கைகளுக்குத் தருக.

(விடை : முதலினக் காப்பு ரூ.60)

26. ஷீலா வரையறு நிறுமத்தின் இயக்குநர்கள் ஒன்று ரூ.10 மதிப்புடைய 2000 பங்குகளை இறுதி அழைப்பு ரூ.2.50 செலுத்தாத காரணத்தினால் ஒறுப்பிழப்பு செய்தனர். இதில் 1800 பங்குகளை பங்கொன்று ரூ.6 வீதம் முழுவதும் செலுத்தப்பட்ட பங்குகளாக மறு வெளியீடு செய்தது. தேவையான குறிப்பேட்டுப் பதிவுகளைத் தருக.

(விடை: முதலினக் காப்பு ரூ.6300)

27. மீனாட்சி வரையறு நிறுமம் ஒன்று ரூ. 10 முகமதிப்புடைய 100 சாதாரணப் பங்குகளின் மீது ரூ.10 மட்டும் அழைப்பு விடுத்திருந்த நிலையில் இறுதி அழைப்பான ரூ.2ஐ செலுத்தாக காரணத்தினால் ஒறுப்புழப்பு செய்தனர். இவ் ஒறுப்பிழப்பு செய்த பங்குகள் பங்கொன்று ரூ.7 வீதம் முழுவதும் செலுத்தப்பட்டவைகளாக வெளியிடப்பட்டன. தேவையான பதிவுகளை நிறுமத்தின் குறிப்பேட்டில் தருக.

(விடை: முதலினக் காப்பு ரூ.500)

28. அசோக் வரையறு நிறுமத்தின் 300 பங்குகளை பங்கொன்று ரூ.10 வீதம் (முழுவதும் அழைக்கப்பட்டவை) வைத்திருந்த ராம் என்பவர் முதல் அழைப்பு தொகை பங்கொன்றிற்கு ரூ.3 மற்றும் இறுதி அழைப்புத் தொகையான பங்கொன்றிற்கு ரூ. 4 செலுத்தத் தவறவே பங்குகள்

ஒறுப்பிழப்பு செய்யப்பட்டன. இப்பங்குகளில் 250 ஷ்யாம் என்பவருக்கு ரூ.2000த்திற்கு, மறுவெளியீடு செய்யப்பட்டது. பங்கு ஒறுப்பிழப்பு மற்றும் மறுவெளியீட்டுக்கான பதிவுகளைத் தருக.

(விடை: முதலினக் காப்பு ரூ.250)

29. ஒரு நிறுமம் 10,000 பங்குகளை பங்கொன்று ரூ.10 வீதம் பின்வருமாறு செலுத்தும் முறையில் வெளியிட்டது.

| | |
|---|---|
| விண்ணப்பத்தின் போது | ரூ.3 |
| ஒதுக்கீட்டின் போது | ரூ3 |
| முதல் மற்றும் இறுதி அழைப்பின் போது | ரூ.4 |

100 பங்குகளின் அழைப்புத் தொகை தவிர அனைத்துத் தொகையும் முறையாகப் பெறப்பட்டது. இப்பங்குகள் இயக்குநர்களால் முறைப்படி ஒறுப்பிழப்பு செய்யப்பட்டு முழுவதும் செலுத்தப்பட்ட பங்குகளாக ரூ.500க்கு மறுவெளியீடு செய்யப்பட்டது. தேவையான குறிப்பேட்டுப் பதிவுகளை இந்நடவடிக்கைகளுக்குத் தருக.

(விடை: முதலினக் காப்பு ரூ.100)

30. சரஸ்வதி நிறுமம் ரூ.20,00,000 அங்கீகரிக்கப்பட்ட மூலதனத்தை பெற்றுள்ளது. இது பங்கொன்று ரு.100 வீதம் பிரிக்கப்பட்டு 10,000 பங்குகள் பின்வருமாறு செலுத்தத்தக்க வகையில் வெளியிடப்பட்டது.

| | |
|---|---|
| விண்ணப்பத்தின் போது | ரூ.30 |
| ஒதுக்கீட்டின் போது | ரூ.20 |
| முதல் அழைப்பின் போது | ரூ.25 |
| இறுதி அழைப்பின் போது | ரூ.25 |

நிறுமம் ரூ.12,000 பங்குகளுக்கான விண்ணப்பத்தினை பெற்றது. 10,000 பங்குகள் ஒப்புக்கொள்ளப்பட்டு 2000 பங்குகள் மீதான விண்ணப்பங்கள் நிராகரிக்கப்பட்டு திருப்பப்பட்டன.

250 பங்குகளின் மீதான இறுதி அழைப்புத் தொகை தவிர அனைத்து தொகையும் பெறப்பட்டது. இதில் பாதி பங்குகள் முழுவதும் செலுத்தப்பட்டவைகளாக, பங்கொன்றிற்கு ரூ.90 வீதம் மறுவெளியீடு செய்யப்பட்டது. தேவையான குறிப்பேட்டுப் பதிவுகளைத் தருக.

(விடை: முதலினக் காப்பு ரூ.8125)

31. அருண் வரையறு நிறுமம் பங்கொன்று ரூ.10 வீதம் 20,000 சாதாரண பங்குகளை பின்வருமாறு செலுத்தும் வண்ணம் வெளியிட்டது.

| | |
|---|---|
| விண்ணப்பத்தின் போது | ரூ. 4 |
| ஒதுக்கீட்டின் போது | ரூ. 2 |
| முதல் அழைப்பின் போது | ரூ. 2 |
| இறுதி அழைப்பின் போது மீதி. | |

35,000 பங்குகள் வேண்டி விண்ணப்பங்கள் பெறப்பட்டன. 10,000 விண்ணப்பங்கள் மறுக்கப்பட்டன. அதிகமாக பெற்ற விண்ணப்பத் தொகை ஒதுக்கீட்டிற்கு பயன்படுத்தப் பட்டது. பின்னர் அழைப்புகள் விடுக்கப்பட்டன. 500 பங்குகளை வைத்திருந்த பாலு என்ற பங்குநர் இரு அழைப்புகளையும் செலுத்தாததால் அவருடைய பங்குகள் ஒறுப்பிழப்பு செய்யப்பட்டன. இவற்றில் 200 பங்குகள் முழுவதும் பங்கொன்று ரூ.6 வீதம் முற்றும் செலுத்தப் பட்டவையாக மறுவெளியீடு செய்யப்பட்டன. குறிப்பேட்டுப் பதிவுகளைத் தருக.

(விடை : முதலினக் காப்பு ரூ. 400)

32. ஸ்ரீராம் வரையறு நிறுமம் பங்கொன்று ரூ.100 முகமதிப்புடைய 10,000 பங்குகளை ரூ.120க்கு வெளியிட்டது. தொகை பின்வருமாறு செலுத்தப்பட வேண்டும்.

| | |
|---|---|
| விண்ணப்பத்தின் போது | ரூ. 25 |
| ஒதுக்கீட்டின் போது (முனைமம் உட்பட) | ரூ. 45 |
| முதல் அழைப்பின் போது | ரூ. 20 |
| இறுதி அழைப்பின் போது | ரூ. 30 |

9000 பங்குகள் கோரி பெறப்பட்ட விண்ணப்பங்களுக்கு ஒதுக்கீடு செய்யப்பட்டது. இராமு என்பவரின் 200 பங்குகள் மீதான முதல் மற்றும் இறுதி அழைப்புத் தொகை தவிர ஏனைய அனைத்துத் தொகையும் பெறப்பட்டது. இவை ஒறுப்பிழப்பு செய்யப்பட்டன. குறிப்பேட்டுப் பதிவுகளையும், முக்கிய பேரேட்டுக் கணக்குகளையும் தயாரிக்க.

விடை : முதல் கணக்கு ரூ. 8,80,000; பிணைய முனைமக் கணக்கு ரூ. 1,80,000; பங்கு ஒறுப்பிழப்புக் கணக்கு ரூ. 10,000; வங்கிக் கணக்கு ரூ.10,70,000)

33. நாராயணன் நிறுமம் ரூ. 4,00,000 அங்கீகரிக்கப்பட்ட பங்கு முதலை கொண்டுள்ளது. இது பங்கு ஒன்று ரூ.20 வீதம் 20,000 பங்குகளாகப் பிரிக்கப்பட்டு அனைத்து பங்குகளும் ரூ.2 முனைமத்தில் வெளியிடப்பட்டன. இத்தொகை பின்வருமாறு செலுத்தப்பட வேண்டும்.

| | |
|---|---|
| விண்ணப்பத்தின் போது | ரூ. 10 |
| ஒதுக்கீட்டின் போது (முனைமம் உட்பட) | ரூ. 7 |
| முதலழைப்பு மற்றும் இறுதி அழைப்பின் போது | ரூ. 5 |

அனைத்து பங்குகளும் கோரி விண்ணப்பங்கள் பெறப்பட்டன. சங்கர் வைத்திருந்த 2000 பங்குகள் தவிர ஏனைய தொகை அனைத்தும் பெறப்பட்டது. இவரின் பங்குகள் மீது அழைப்புத் தொகை பெற தவறவே ஒறுப்பிழப்பு செய்யப்பட்டன. பின்னர் இவை பங்கொன்று ரூ.14க்கு மறு வெளியீடு செய்யப்பட்டன. குறிப்பேட்டுப் பதிவுகள் தருக.

(விடை : முதலினக் காப்பு ரூ. 18,000)

34. நிறுமம் ஒன்று ரூ. 100 மதிப்புடைய 10,000 பங்குகளை பங்கொன்றுக்கு ரூ.20 முனைமத்தில் வெளியிட்டது. தொகை பின்வருமாறு செலுத்தப்பட வேண்டும்.

| | |
|---|---|
| விண்ணப்பத்தின் போது | ரூ. 30 |
| ஒதுக்கீட்டின் போது | ரூ. 40 (முனைமம் உட்பட) |
| முதல் மற்றும் இறுதி அழைப்பின் போது | ரூ. 50 |



பொதுமக்களிடமிருந்து 9,000 பங்குகளுக்கு விண்ணப் பங்கள் பெறப்பட்டன. இவை முழுவதும் ஒதுக்கீடு செய்யப்பட்டது. 200 பங்குகளின் அழைப்புத் தொகையைத் தவிர ஏனைய பங்குகள் மீது அனைத்து தொகையும் பெறப்பட்டது. இப்பங்குகள் ஒறுப்பிழப்பு செய்யப்பட்டு பங்கு ஒன்று ரூ.80 வீதம் முழுவதும் செலுத்தப்பட்டதாக மறு வெளியீடு செய்யப்பட்டன. குறிப்பேட்டுப் பதிவுகள் தருக.

(விடை : முதலினக் காப்பு ரூ. 6,000)

35. லூசி வரையறு நிறுமம் ஒன்று ரூ.10 வீதம் 50,000 நேர்மைப் பங்குகளை 10% முனைமத்தில் வெளியிட்டது. தொகை கீழ்க்கண்டவாறு செலுத்தப்பட வேண்டும்.

| | |
|---|---|
| விண்ணப்பத்தின் போது | ரூ. 2 |
| ஒதுக்கீட்டின் போது | ரூ. 5 (முனைமம் உட்பட) |
| முதல் அழைப்பு | ரூ. 2 |
| இரண்டாம் அழைப்பு | ரூ. 2 |

500 பங்குகள் மீதான முதல் மற்றும் இறுதி அழைப்புத் தவிர அனைத்து தொகையும் முறையாக பெறப்பட்டது. இப்பங்குகள் ஒறுப்பிழப்பு செய்யப்பட்டு பங்கொன்று ரூ.9 வீதம் முழுவதும் செலுத்தப்பட்ட பங்குகளாக மறுவெளியீடு செய்யப்பட்டன. குறிப்பேட்டுப் பதிவுகள் தருக.

(விடை : முதலினக் காப்பு ரூ. 2,500)

36. ஒரு நிறுமம் ரூ.100 மதிப்புடைய 50,000 நேர்மைப் பங்குகளை 10% தள்ளுபடியில் (தள்ளுபடி ஒதுக்கீட்டின்போது சரி செய்யப்படும்) வெளியிட்டது. நிகரத்தொகை பின்வருமாறு செலுத்தப்பட வேண்டும்.

| | |
|---|---|
| விண்ணப்பத்தின் போது | ரூ. 20 |

| | |
|---|---|
| ஒதுக்கீட்டின் போது | ரூ. 20 |
| முதல் அழைப்பின் போது | ரூ. 25 |
| இரண்டாம் அழைப்பின் போது | ரூ. 25 |

அனைத்துப் பங்குகளும் ஒதுக்கீடு செய்யப்பட்டன. டேவிட் வைத்திருந்த 100 பங்குகள் மீதான இறுதி அழைப்புத் தொகை பெறப்படாமையால் பங்குகள் ஒறுப்பிழப்பு செய்யப்பட்டன. இதில் 40 பங்குகள் பங்கு ஒன்று ரூ.70 வீதம் சிவா என்பவருக்கு முழுவதும் செலுத்தப்பட்டதாக மறுவெளியீடு செய்யப்பட்டன. குறிப்பேட்டுப் பதிவுகளைத் தருக.

(விடை : முதலினக் காப்பு ரூ. 1,800)

37. திருப்பூர் ஆடை நிறுமம் பங்கொன்று ரூ.100 மதிப்புடைய 10,000 நேர்மைப் பங்குகளை ரூ.10 தள்ளுபடியில் வெளியிட்டது. தள்ளுபடி ஒதுக்கீட்டின் பொழுது அனுமதிக்கப்படும். இதற்கான தொகை பின்வருமாறு செலுத்தப்பட வேண்டும்.

| | |
|---|---|
| விண்ணப்பத்தின் போது | ரூ. 30 |
| ஒதுக்கீட்டின் போது | ரூ. 30 |
| பங்கு முதல் மற்றும் இறுதி அழைப்பின் போது | ரூ. 30 |

பொதுமக்களிடமிருந்து 9000 பங்குகளுக்கான விண்ணப்பங்கள் பெறப்பட்டு ஒதுக்கீடு செய்யப்பட்டன. 400 பங்குகள் மீதான முதல் மற்றும் இறுதி அழைப்புத் தொகை தவிர, ஏனைய பங்குகள் மீது பெறவேண்டிய அனைத்துத் தொகையும் முறையே பெறப்பட்டது. பின்னர் இவை ஒறுப்பிழப்பு செய்யப்பட்டன. இவற்றில் 200 பங்குகள் முழுவதும் செலுத்தப்பட்டவைகளாக பங்கொன்று ரூ.80 வீதம் மறு வெளியீடு செய்யப்பட்டது. நிறுமத்தின் ஏட்டில் மேற்கண்ட நடவடிக்கைகளுக்கு குறிப்பேட்டுப் பதிவுகள் தருக.

(விடை : முதலினக் காப்பு ரூ. 10,000)



38. பாட்சா வரையறு நிறுமம் பங்கு ஒன்று ரூ.50 மதிப்புடைய 30,000 சாதாரண பங்குகளை 10% தள்ளுபடியில் பெற விண்ணப்பங்களை வரவேற்றது. இத்தொகை பின்வருமாறு செலுத்தப்பட வேண்டும்.

| | |
|---|---|
| விண்ணப்பத்தின் போது | ரூ. 25 |
| ஒதுக்கீட்டின் போது | ரூ. 10 |
| அழைப்பின் போது | ரூ. 10 |

பொதுமக்களிடமிருந்து 30,000 பங்குகளுக்கான விண்ணப்பங்கள் பெறப்பட்டு ஒதுக்கீடு செய்யப்பட்டன. 400 பங்குகள் மீதான அழைப்பு தொகையைத் தவிர ஏனைய பெற வேண்டிய தொகைகள் பெறப்பட்டன. இப்பங்குகள் ஒறுப்பிழப்பு செய்யப்பட்டு இவற்றில் 300 பங்குகள் மட்டும் ஒன்று ரூ.35 வீதம் முழுவதும் செலுத்தப்பட்டவைகளாக மறுவெளியீடு செய்யப்பட்டன. தேவையான குறிப்பேட்டுப் பதிவுகள் தருக.

(விடை : முதலினக் காப்பு ரூ. 7,500)

## பார்வைக் குறிப்பு நூல்கள்


1. *கணக்குப் பதிவியல் — அ.குமார ராசு, தமிழ் நாட்டுப் பாடநூல் கழகம், சென்னை.*
2. *உயர் கணக்கியல் — அ.குமார ராசு, தமிழ் நாட்டுப் பாடநூல் கழகம், சென்னை.*
3. *அடிப்படைக் கணக்கியல் பாடத் தொகுப்பு — இளங்கலை வணிகவியல், தொலைதூரக் கல்வி இயக்ககம், அண்ணாமலைப் பல்கலைக் கழகம்.*
4. *நிதிசார் கணக்கியல் பாடத் தொகுப்பு — இளங்கலை வணிகவியல், அஞ்சல்வழி கல்வி நிறுவனம், சென்னைப் பல்கலைக் கழகம்.*
5. *தமிழ்நாட்டுப் பாடநூல் கழகம் — கணக்குப் பதிவியல் — மேல்நிலை இரண்டாம் ஆண்டு.*
6. R.L. Gupta – *Principles and Practice of Accountancy*
7. T.S.Grewal – *Introduction to Accountancy*
8. Patil & Korlahalli – *Principles and Practices of Accountancy*
9. Vinayagam, P.L.Mani, K.L.Nagarajan – *Principles of Accountancy.*
10. P.C.Tulsian, S.D.Tulsian – *ISC Accountancy for Class XII.*
11. M.Jambunthan, S.Arokiasamy, V.M.Gopala Krishna, P.Natrajan – *Book-keeping and Principles of Commerce*.
12. L.S.Porwal, R.G.Saxena, B.Banerjee, Man Mohan, N.K.Agarwal – *Accounting A Textbook for Class XI Part I, NCERT*.
13. Jain & Narang – *Financial Accounting*.
14. R.L.Gupta, Radha Swamy – *Financial Accounting*.
15. Basu Das – *Practice in Accountancy*.
16. S.Kr.Paul – *Practical Accounts Vol.II*.
17. M.C.Shukla – *Advanced Accountancy*.